






பூவைப் போல...
உங்கள் மேனியை
மலரச் செய்வது
ரெக்ஸோனா






Rexona
BLENDED WITH CADYL
ரெக்ஸோனா சோப்பில் இருப்பது கேடில் — சருமத்திற்கு ஊட்டமளித்து உங்கள் இயற்கையழகை வெளிக் கொணரத் துணைபுரியும் எண்ணெய்கள் கலந்த விசேஷத் தைலமே கேடில்!
கேடில் கலந்துள்ள சோப் இது ஒன்றே
RP. 148-50 TM
ரெக்ஸோனா ப்ரொப்ரைடரி லிமிடெட்டுக்காக இந்தியாவில் தயாரித்தது

# கல்கி

## பொருளடக்கம்



" கல்கி "யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள் ; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 17 | இதழ் 2

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

ஹேவிளம்பி | ஆடி 27

# காந்தியின் காந்தியும் மறைந்தாரோ!

மகாத்மா காந்தியின் கடைசிப் புதல்வரும் பிரபல 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' பத்திரிகையின் நிர்வாக ஆசிரியருமான ஸ்ரீ தேவதாஸ் காந்தி, பம்பாயில் சென்ற வாரம் இருதய நோயால் திடீரென்று காலமானார் என்ற செய்தி கேட்டு அகில இந்தியாவும் ஆழ்ந்த துயரத்தில் ஆழ்ந்து விட்டது.

ஸ்ரீ தேவதாஸ் காந்தி உலக சிரேஷ்டரும் பாரத தேச பிதாவுமான காந்தி மகானின் அருமைக் குமாரராகத் தோன்றும் பேறு பெற்றார்.

உத்தமருக்குள் உத்தமரும் இணையற்ற அரசியல் ஞானியும் கர்மயோகியுமான நமது அரும்பெரும் தலைவர் ராஜாஜியின் செல்வப் புதல்வியை மனைவியாக அடையும் பாக்கியமும் அவருக்குக் கிடைத்தது.

தந்தையின் திருவடிச் சுவடுகளைப் பின்பற்றிப் பாரத தேசத்துக்கு அரும்பெரும் தொண்டு புரியும் அரிய வாய்ப்பும் தேவதாஸ் காந்திக்குக் கிட்டியது.

ஸ்ரீ தேவதாஸ் காந்தி பாரத அன்னையின் தலைசிறந்த தொண்டர்களில் ஒருவராகத் திகழ்ந்தார். உலகப் புகழ்பெற்ற சில இந்தியப் பத்திரிகையாசிரியர்களில் ஒருவராக இருந்தார். எல்லாருக்கும் இனியராக விளங்கினார்.

சீரும் சிறப்பும் வாய்ந்த அப்படிப்பட்ட உத்தமர் அகால மரணமடைந்தது நாட்டுக்கு மகத்தான நஷ்டமாகும்; பத்திரிகை உலகுக்கோ சரி செய்ய முடியாத குறையாகும்.

*　　*　　*　　*

1900—ம் ஆண்டு மே மாதம் 22-ம் தேதி தென்னாப்பிரிக்காவைச் சேர்ந்த டர்பன் நகரில் காந்தி மகானின் கடைப்புதல்வராகப் பிறந்த தேவதாஸ் காந்தி, தென்னாப்பிரிக்காவில் ஆரம்பக் கல்வி பெற்றார்.

இந்தியாவுக்கு வந்த பிறகு அவர் சாந்திநிகேதனில் தேர்ச்சி பெற்று, மகாத்மா காந்திக்கு உதவியாக "இந்தியன் ஒபினியன்", "யங் இந்தியா" முதலிய பத்திரிகைகளின் மூலம் தொண்டு புரிந்தார்.

அலகாபாத்திலே பண்டித மோதிலால் நேருவினால் ஆரம்பிக்கப்பட்ட "இன்டிபென்டென்ட்" என்ற தேசியப் பத்திரிகையில் அவர் சிறிது காலம் தொண்டு செய்த பின், புதுடில்லியில் தொடங்கப்பட்ட "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகாலயத்தில் பொறுப்பு வாய்ந்த ஊழியராக அமர்ந்தார்.

அவரது தலைமையில் இன்று "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை அடைந்துள்ள மகத்தான முன்னேற்றமும் செல்வாக்கும் புகழும் உலகம் அறிந்தவை.

செய்திகளின் சிறப்புக்கும் கருத்துகளின் செறிவுக்கும் விஷயத்தின் தரத்துக்கும் உலகத்தின் கவனத்தைக் கவர்ந்த ஒன்றிரண்டு இந்திய தினசரிப் பத்திரிகைகளில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையும் ஒன்றாகும்.

அப்பத்திரிகை அத்தகைய உன்னதமான நிலையை அடைந்ததற்கு ஸ்ரீ தேவதாஸ் காந்தியின் பொறுமை, திறமை, நேர்மை, அஞ்சாமை முதலிய குணவிசேஷங்களே காரணம் என்பதை எவரும் மறுக்க முடியாது.

பல ஆண்டுகளுக்கு முன், பிரிட்டிஷ் ஆட்சி நடந்த காலத்தில், அப்பத்திரிகையின் நிருபர் ஒருவர் அதிகார வர்க்கத்தின் கோப வெறிக்கு இலக்காக நேர்ந்தது.

அப்போது ஸ்ரீ தேவதாஸ் காந்தி அந்த நிருபர் சார்பில் இறுதி வரையில் போராடி வெற்றி பெற்றார். பத்திரிகாசிரியரின் பொறுப்புகளும் கடமைகளும் எவ்வளவு மகத்

தானவை என்பதை எல்லோரும் உணர்ந்து கொள்ளும்படி செய்தார்.

வீண் அவதூறு கூறும் விஷமிகளை அவர் இலகுவில் விட்டு விடுவதில்லை. அத்தகைய விஷமிகளை நீதிமன்றத்துக்கு இழுத்து, அவர்களுக்குத் தகுந்த தண்டனை கிடைக்கும்படி செய்த சம்பவம் அவரது வாழ்க்கையில் நிகழ்ந்தது உண்டு.

பத்திரிகை உலகில் ஸ்ரீ தேவதாஸ் காந்தியின் அரிய தொண்டுகளைப் பாராட்டி, அவரை இந்திய கீழ்த்திசைப் பத்திரிகைகள் சங்கத்தின் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். இந்தியாவின் சார்பில் அவர் 'ராய்ட்டர்' போர்டு டைரக்டராகவும் இருந்தார்.

அகில இந்தியப் பத்திரிகாசிரியர்கள் சங்கம் ஆரம்பமானதிலிருந்து ஸ்ரீ தேவதாஸ் அதில் நெருங்கிய தொடர்பு கொண்டு வந்ததுடன், பத்து ஆண்டுகளுக்கு முன் சென்னையில்

எனவே, இந்திய அரசியல் சரித்திரத்திலும் அவருக்கு நிரந்தரமான ஓர் இடம் உண்டு என்பதில் ஐயமில்லை.

இவையெல்லாவற்றையும் காட்டிலும் மற்றொரு துறையில் ஸ்ரீ தேவதாஸ் காந்தி செய்த கைங்கரியம்தான் என்றும் மறக்க முடியாததாகும்.

"தீண்டாமை ஒழிப்பு அலுவல்கள் தீவிரமாக நடைபெறாவிட்டால் உயிர் போகும் வரையில் உண்ணாவிரதம் ஏற்பேன்" என்று இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் காந்திஜி தேசத் தலைவர்களுக்குக் கட்டளையிட்டார்.

நமது தந்தையும் தேசத் தந்தையுமான காந்தி மகானின் கட்டளையை நிறைவேற்றும் பொறுப்பில் பெரும் அளவை ஸ்ரீ தேவதாஸ் காந்தி ஏற்றுக் கொண்டார்.

அப்போது ஸ்ரீ தேவதாஸ் தமிழ் நாடெங்கும், காஞ்சிபுரத்தில் ஆரம்பித்துக் கன்னியா



காலனின் கொடிய சிந்தையால் விதியின் சதியால் உயிர் பிரிந்த தேவதாஸின் உடலுக்கு மலர் மாலை சூட்டப் பட்டிருக்கிறது.

மருமகன் தேவதாஸின் கன்னத்தைத் தம்முடைய அன்புக் கரங்களால் தொட்டு ஆழ்ந்த துயரத்தில் மூழ்கி நிற்கிறார் ராஜாஜி.

மலைகுலைந்தாலும் மனம் குலையாத ராஜாஜி செல்வப் புதல்வி லக்ஷ்மி தேவதாஸின் துயரத்தைத் தாளமுடியாமல் கண்ணீர் விடுகிறார்.

---

நடந்த அச்சங்க மகாநாட்டுக்குத் தலைமை வகித்து, அதைத் திறம்பட நடத்தினார்.

பத்திரிகைகள் சம்பந்தமான மற்றும் சில ஸ்தாபனங்களிலும் அவர் மிகப் பொறுப்பு வாய்ந்த பதவிகளை வகித்து வந்தார்.

மேற்படி துறையில் அவர் புரிந்த தொண்டுகளுக்குப் பத்திரிகை உலகம் அவருக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறது.

* * *

அரசியல் துறையிலும் ஸ்ரீ தேவதாஸ் அவர்களின் தொண்டு அற்பமானதல்ல.

இந்தியச் சுதந்திரப் போரில் ஈடுபட்டு எட்டு தடவை சிறை சென்று அல்லலுறும் அதிர்ஷ்டமும் அவருக்குக் கிடைத்தது.

குமரி முடிய ராஜாஜியுடன் சேர்ந்து தீவிரமாகத் தீண்டாமை விலக்குக்குப் பிரசாரம் செய்தது பலருக்கும் ஞாபகமிருக்கலாம்....

அவரது பிரசாரமே பின்னர் தீண்டாமை ஒழிப்பு இயக்கம் தமிழ் நாட்டில் பெரிதும் வெற்றி பெறுவதற்கு அஸ்திவாரமாக அமைந்தது.

* * *

ஸ்ரீ தேவதாஸ் காந்தியின் அகாலமறைவு தேசத்து மக்கள் எல்லோரையும் அதிர்ச்சி அடையும்படி செய்திருக்கிறது.

"ஸ்ரீ தேவதாஸ் காந்தி எனக்கு இளைய சகோதரர் போன்றவர். சென்ற நாற்பது ஆண்டுகளாக நாங்கள் இருவரும் சேர்ந்து



தேவதாஸ் காந்தி

தோற்றம் : 22-5-1900 மறைவு : 3-8-1957

தொண்டு புரிந்தோம்; சேர்ந்து சிறையில் இருந்தோம். அவர் மறைந்தது நம் எல்லோருக்கும் மகத்தான நஷ்டமாகும்" என்று நேருஜி மனம் உருகிக் கூறியுள்ளார்.

பல ஆண்டுகளாக ஸ்ரீ தேவதாஸ் காந்தியின் நண்பராகவும் இந்து வருஷகாலம் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையின் கூட்டு ஆசிரியராகவும் இருந்த ஸ்ரீ கே. சந்தானம், ஸ்ரீ தேவதாஸ் காந்தியின் பொறுமை, நேர்மை, பெருந்தன்மை போன்ற குணநிசயங்களைப் பாராட்டி, அவரது திடீர் மரணத்தைக் குறித்துத் தமது துக்கத்தைத் தெரிவித்துள்ளார்.

ஸ்ரீ தேவதாஸ் காந்தி தேசப் பணி செய்த வண்ணமே உயிர் நீத்ததை எண்ணும்போது நெஞ்சம் துடிக்கின்றது.

பம்பாயில் காந்தி மகான் நினைவு நிதி சம்பந்தமான அலுவல்களில் ஈடுபட்டிருந்த போது அவர் இப்பூவுலகிலிருந்து விடை பெற்றுக்கொண்டு விட்டார்.

காந்தி மகானின் அற்புதமான நூல்களும் அருள்வாக்குகளும் என்றென்றும் அழியா வண்ணம் இருப்பதற்காக, காந்தி இலக்கிய வெளியீடுகளில் அவர் சில ஆண்டுகளாகத் தீவிரமாக ஈடுபட்டிருந்தார்.

அந்தத் திருப்பணிக்குத் தடை ஏற்படாமல் அதை நிறைவேற்றுவதே, தேச மக்களும் தலைவர்களும் காந்திஜியின் தவப்புதல்வரின் ஞாபகம் என்றென்றும் நிலைத்திருக்கும்படி செய்வதற்கான வழியாகும்.

ஆருயிர்க் கணவரைப் பிரிந்து கதறும் ஸ்ரீமதி லக்ஷ்மிக்கும், அவரது குழந்தைகளுக்கும், ராஜாஜிக்கும் யார் ஆறுதல்கூற முடியும்?

# மலாய் நாட்டில் இருள் விலகியது!

மலாய் நாட்டுக்கு 1957-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்திலே சுதந்திரம் அளிப்பதாக பிரிட்டிஷார் உறுதி கூறி யிருந்தனர். பிரிட்டிஷ்காரர்கள் சிறந்த ராஜதந்திரிகள் அல்லவா? அவர்கள் கொடுத்த வாக்குறுதியைக் காலம் கடத்தாமல் நிறைவேற்றி விட்டார்கள். பிரஞ்சுக்காரர்கள் தங்களுடைய காலனிகள் விஷயத்தில் நடந்து கொள்வது போல், மீனமேஷம் பார்த்துக் கொண்டு நற்பெயரையும் நல்லெண்ணத்தையும் கெடுத்துக் கொள்ளாமல் பிரிட்டிஷார் மலாய் நாட்டுக்குச் சுதந்திரம் கொடுக்க நிச்சயித்து விட்டார்கள்.

மலாயாவை காமன்வெல்த்துக்கு உட்பட்ட ஒரு சுதந்திர நாடாக அங்கீகரிக்கும் மசோதா பிரிட்டிஷ் பார்லிமெண்டில் கடைசித் தடவையாக நிறைவேறி விட்டது. சுதந்திர மலாயாவை உருவாக்கும் அரசியல் திட்ட நகலை மலாயா பெடரல் சபையும் குதூகலத்துடன் ஏகமனதாக அங்கீகரித்துள்ளது.

எனவே, மலாய் நாட்டில் அன்னிய ஆட்சி இருள் அகன்று, சுதந்திர ஆட்சி ஒளி வீசும் நற்காலம் பிறந்திருக்கிறது.

வல்லரசுகளின் ஒவ்வொரு காலனியிலும் ஒவ்வொரு அடிமை நாட்டிலும் ஐம்பது, நூறு, நூற்றைம்பது என்று பலப் பல ஆண்டுகள் போர் நடந்தபிறகுதான், அவை சுதந்திரம் பெறுவது சாத்தியமாயிற்று. பத்து ஆண்டுகளுக்கு முன்பு கூட, மலேயா சுதந்திரம் பெறும் காலம் வரக்கூடும் என்று யாரும் கனவிலும் கருதவில்லை. பத்து வருஷங்களுக்கு முன் வரையில் ஜனநாயகம் என்றால் என்ன என்பதையே அறியாதிருந்த மலாயா, இந்த மாத இறுதியில் சுதந்திரம் பெறும் முன்னேற்ற நிலையை அடைந்திருப்பது ஆச்சரியப்படத் தக்க விஷயம் அல்லவா?

*　　　　*　　　　*

மலாய் நாட்டில் சுமார் எட்டு லட்சம் இந்தியர்கள் வசிப்பதால், மலாயாப் பிரச்னைகளில் இந்திய மக்கள் அக்கறை கொள்ளாமல் இருக்க முடியாது. அந்த நாட்டில் வாழும் மாபெரும் சமூகங்களைச் சேர்ந்த சீனர், மலாயர், இந்தியர் இவர்களின் ஆதரவும் ஒத்துழைப்புமின்றி எந்த அரசியல் திட்டமும் செயல்பட முடியாது.

ஆனால், மலாய் நாட்டின் செல்வச் செழுமைக்கு அங்குள்ள ரப்பர்த் தோட்டங்களே காரணம்; ரப்பர்த் தோட்டங்கள் உருவானதற்கு இந்தியத் தொழிலாளர்களின் உழைப்பே காரணமாகும்.

அப்படியிருந்தும் மலாய் நாட்டின் புதிய அரசியல் திட்டத்தின்கீழ் பெரும்பான்மையான இந்தியர்கள் பிரஜாஉரிமை பெறுவது எளிதாக இராது என்ற பீதி நிலவி வருகிறது.

"சுதந்திர மலாயாவில் எவ்வித வேற்றுமையுமின்றி எல்லாச் சமூகத்தினருக்கும் சம உரிமைகளும், சலுகைகளும், சந்தர்ப்பங்களும் அளிக்கப்பட வேண்டும் என்று ரீட் கமிஷன் [sic: ஏற்கெனவே ரீட்] அறிக்கை கூறியது. ஆனால், அந்தக் கொள்கை நிறைவேற்றப்படவில்லை. பல அம்சங்களில் இந்தியர்கள் நியாயமாகத் தங்களுக்குக் கிடைக்க வேண்டிய உரிமைகளைப் பெற முடியாத வகையில் அரசியல் திட்டம் உருவாகியிருக்கிறது. இந்த வேற்றுமை மலாயாவைத் தங்கள் நாடாகக் கருதும் பதினையிரக்கணக்கான இந்தியர்களுக்கு அதிர்ச்சியைக் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை" என்று பிரிட்டிஷ் பார்லிமெண்டு அங்கத்தினர்கள் அச்சபையில் கண்டித்துள்ளனர்.

எனினும் புதிய அரசியல் திட்டத்தை, மலாயா தொழில் மந்திரியான இந்தியப் பிரமுகர் உள்படப் பல இந்தியத் தலைவர்களும் ஆதரித்திருக்கிறார்கள். அவர்கள் மற்றச் சமூகத்தினருடன் ஒத்துழைப்பதோடு, தங்களிடையே ஒற்றுமை குலையாமல் பார்த்துக் கொள்ள வேண்டியதும் அவசியமாகும். அப்படியானால்தான் சிறுபான்மையோரான அவர்கள் சுதந்திர மலாயாவில் நியாயமான உரிமைகள் பெற்று, மலாய் நாட்டின் உண்மையான பிரஜைகளாக இருந்து அமைதியான நல்வாழ்வு நடத்துவது சாத்தியமாகும்.




சென்னை நகரில் தற்சமயம் சர்க்கஸ் நடைபெற்று வருகிறது. அதைப்பார்த்த நமது கார்ட்டூன் சித்திரக்காரர் இன்றைய அரசியல் நிலையை மேற்கண்டவாறு சித்திரிக்கிறார்!

# பலப் பரீட்சையின் முடிவு என்ன?

தந்தி, தபால் ஊழியர்கள் ஆரம்பிக்கப் போகும் வேலை நிறுத்தம் தேச நலன்களுக்கும் பொருளாதார சுபிட்சத்துக்கும் பாதகத்தை விளைவிக்கும் என்று நேருஜீ முதல் எல்லோரும் கூறி வருகிறார்கள். ஆனால், அவ்விதம் கூறுவது தவறென்று சென்ற வாரம் புது தில்லியில் நடந்த ஒரு கூட்டத்தில் பேசிய தொழிலாளர் தலைவர்கள் குறிப்பிட்டனர். தந்தி, தபால் ஊழியர்களின் வேலை நிறுத்தம் சர்க்காருக்கோ அல்லது தேசத்துக்கோ விரோதமாகக் கைக்கொள்ளப்படும் நடவடிக்கை அல்ல என்றும், வறுமையையும் பட்டினியையும் எதிர்த்து நடத்தும் ஒரு போராட்டம் என்றும் அத் தலைவர்கள் வியாக்கியானம் செய்தார்கள்.

மேற்படி வேலை நிறுத்தத்தினால், வர்த்தகம், பாங்கிகள், தொழில்கள் முதலியவற்றுக்கு ஏற்படும் இடைஞ்சல்களின் விளைவாக நாட்டுக்குத் தாற்காலிகமாக, நாள்தோறும் சுமார் நூறு கோடி ரூபாயும், நிரந்தரமாகத் தினசரி சுமார் ஐந்து கோடி ரூபாயும் நஷ்டம் ஏற்படும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். தினந்தோறும் நாட்டுக்கு நூற்றைந்து கோடி ரூபாய் நஷ்டத்தை உண்டுபண்ணும் ஒரு நடவடிக்கையால், வறுமையையும் பட்டினியையும் எவ்விதம் தீர்க்க முடியும் என்பதுதான் தெரியவில்லை! அதனால் நாட்டின் கஷ்ட நஷ்டங்கள் அதிகமாகுமேயன்றிக் குறைந்து விடுமா?

சென்ற 5ம் தேதி இரவு வானொலியில் நேருஜீயும் பத்திரிகைகளில் ராஜாஜியும் விடுத்த உருக்கமான வேண்டுகோள்களுக்குப் பிறகும்கூட, தபால், தந்தி ஊழியர்கள் வேலை நிறுத்தத்தை ஆரம்பித்தே தீருவோம் என்று பிடிவாதம் செய்யப் போகிறார்களா?

"மத்திய சர்க்கார் ஊழியர்கள் சம்பந்தமான சகல குறைகளையும் தீர விசாரித்து முடிவு செய்ய சுப்ரிம் கோர்ட் நீதிபதியின் தலைமையில் ஒரு கமிஷன் நியமிக்கச் சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள். அப்படியிருக்க, பாரத நாட்டைப் பல்வேறு உள் நாட்டுப் பிரச்னைகளும் வெளிநாட்டுப் பிரச்னைகளும் எதிர்நோக்கி நிற்கும் இந்த நெருக்கடியான சமயத்தில் தேசத்துக்கும், சமுதாயத்துக்கும் மிகுந்த பாதகத்தை உண்டுபண்ணும் வேலை நிறுத்தத்தில் தபால், தந்தி ஊழியர்கள் ஈடுபடுவது துரதிர்ஷ்டமாகும்" என்று நேருஜீ வருத்தத்துடன் குறிப்பிட்டார்.

பெரும் துயரத்துக்கு உள்ளாகியுள்ள ராஜாஜீ அவர்கள், தபால், தந்தி இலாக்கா சிப்பந்திகளுக்கு மிக உருக்கமான ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்:

"என் புதல்விக்கும், அவளுடைய குழந்தைகளுக்கும் நேர்ந்துள்ள பெருந் துயரம் காரணமாக நான் எதைப் பற்றியும் சிந்திக்கும் நிலையில் இல்லை. எனினும் வேலை நிறுத்தம் செய்ய இருக்கும் தபால், தந்தி இலாக்கா சிப்பந்திகளுக்கு அப்படிச் செய்யாதீர்கள் என்று கேட்டுக் கொள்ள வேண்டும் என்றே இந்த வேண்டுகோளை விடுக்கிறேன்......

"தயவு செய்து வேலை நிறுத்தத்தை நிறுத்தி விடுங்கள். சர்க்காருக்கு உதவும் வகையில் நிறுத்துங்கள். உங்கள் சுய கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானாலும் இதுவே வழி. இந்த என் யோசனையைக் கேட்பதானால் நீங்கள் நிச்சயம் நல்ல லாபம் அடைவீர்கள். இதில் சிறிதும் சந்தேகம் வேண்டாம். ஒரு விவகாரம் வந்தது என்றால் அதில் எந்தக் கட்சி முதலில் நேச மனப்பான்மை காட்டுகிறதோ அந்தக் கட்சிதான் உண்மையில் வெற்றி பெற்ற கட்சியாகும்."

தபால், தந்தி ஊழியர்கள் எதுநேர்ந்தாலும் யார் என்ன சொன்னாலும் வேலை நிறுத்தம் செய்தே தீருவதென்று முடிவு செய்து, அதை நிறைவேற்றுவதற்கான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். மேற்படி வேலை நிறுத்தத்தைச் சமாளிப்பதற்கான பல்வேறு தீவிர முறைகளைச் சர்க்காரும் எடுத்துக் கொண்டு வருகிறார்கள். இந்த பலப் பரீட்சையின் முடிவு என்ன ஆகும் என்பதே இப்போதுள்ள அவசரக் கேள்வியாகும்.

இது அச்சுக்குப் போகும் வரையில் சர்க்காருக்கும் தபால், தந்தி ஊழியர்களுக்கும் எவ்விதச் சமரசமும் ஏற்படவில்லை. எனினும், ஊழியர்கள் அறிவித்துள்ள கால கெடுவுக்குள் ஏதாவது சமரசம் ஏற்பட்டு, வேலைநிறுத்தம் தவிர்க்கப்படுமென்று நம்புவோமாக.

## மாதர்குல திலகங்கள்

# அமிர்தா ராமசுப்பிரமணியம்



பெற்றோர்கள் தங்கள் பெண் குழந்தைக்கு அமிருதம் என்று பெயர் வைத்து விடலாம். பிற்காலத்தில் அந்தப் பெண்ணின் குணம் அமிருதமாக இருக்குமா என்பது சந்தேகம் தான். அப்படியே பெயருக்கு ஏற்ப அந்தப் பெண் விளங்கினால் கணவன், பெற்றோர்கள், மற்றோர்கள் இவர்கள் மட்டும் பூரித்துப் போவார்கள். ஆனால் அமிர்தா ராமசுப்பிரமணியம் அவர்கள் தம்மைச் சேர்ந்தவர்களுக்கும் பாரதநாட்டுச் சகோதரிகள் அனைவருக்குமே அமுதமானவர்.

இவருடைய முன்னோர்கள் இருநூறு ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலியிலிருந்து மைசூருக்கருகில் சித்ர துர்கா என்ற ஊரில் குடியேறியவர்கள். இவர் பள்ளிப் படிப்பை அங்கேயே படித்தார். பூனா கல்லூரியில் சட்டப் படிப்பு (எல். எல். பி.) படித்துப் பட்டம் பெற்றார். 1935, 1936 இரண்டு ஆண்டுகள் பெங்களூரில் வழக்கறிஞராக இருந்தார்.

பிறகு மதுரை டாக்டர் ராமசுப்பிரமணியம் அவர்களைத் திருமணம் செய்து கொண்டார். பொதுமக்கள் சிறந்த அறிவாளிகள். உண்மையை வெகு சீக்கிரம் புரிந்து கொள்ளும் ஆற்றல் படைத்தவர்கள். ஸ்ரீமதி அமிர்தா அவர்கள் மதுரையில் இருந்த சில வருஷங்களில் அங்குள்ள மாதர் சேவா சங்கங்களின் வேலைகளில் ஈடுபட்டார். அப்பொழுதே சகோதரி அமிர்தா சிறந்த குணசாலி, உண்மையான சமூக சேவகி எனப் பாராட்டுதலைப் பெற்றார். இன்று சென்னையில் மிகச் சிறந்த முறையில் பெண் குலத்துக்குத் தொண்டாற்றி வருகிறார்.

1950-ம் ஆண்டு முதல் அகில இந்திய மாதர் சங்கத்தின் உப தலைவியாக இருக்கிறார். சென்னையில் சில வருஷங்கள் கௌரவ மாஜிஸ்திரேட்டாகத் தொண்டாற்றியிருக்கிறார். தேசிய சிறு சேமிப்புத் திட்டத்தின் குழுவினருக்குத் தலைவியாகி, இன்று வெற்றிகரமாகச் சேமிப்புத் திட்டத்தை நிறைவேற்றிக் கொண்டு வருகிறார். வினோபாஜி அவர்களின் பூதான யக்ஞத்தில் தீவிரமாக உழைக்கிறார். அந்த மகத்தான சேவையில் விரதம் எடுத்துக்கொண்டு வேலை செய்கிறார். அடிக்கடி கிராமங்களுக்குச் சுற்றுப் பிரயாணம் செய்கிறார். ஔவை ஆசிரமம், சீனிவாஸ காந்தி நிலயம் போன்ற மாதர் நல ஸ்தாபனங்களில் நடைபெறும் சேவைகளில் பெரும் பங்கு எடுத்துக் கொண்டு வருகிறார்.

அமிர்தா படித்துப் பட்டம் பெற்றுச் சிறந்த மேதாவியாக இருக்கிறார். ஆனால் பார்க்க எளிமையாகத் தோன்றுகிறார். தேசபக்தி மிகுந்தவர். காந்தீயத்தைப் பின்பற்றுபவர். அவர் நினைப்பது, சொல்வது, செய்வது மூன்றுக்கும் வித்தியாசம் கிடையாது.

சின்ன வயதில் தமிழ் மொழி கற்கச் சந்தர்ப்பமில்லை. ஆனால் தமிழ் நாட்டுச் சகோதரிகளுடன் வாழும் அவர் இன்று தமிழ் பேசக் கற்றுக் கொண்டதுடன் தமிழில் சிறந்த பேச்சாளராகவும் விளங்குகிறார். இவருக்குத் தினம் நூற்றுக்கணக்கான ஏழைச் சகோதரிகள் தங்கள் கோரிக்கையைக் கேட்டுக் கடிதங்கள் எழுதுவார்கள். அன்பே உருவான அமிர்தா அனைவருக்கும் ஆறுதல் சொல்லிப் பதில் எழுதுவார். ஸ்ரீமதி அமிர்தா ராமசுப்பிரமணியம் பல்லாண்டு வாழ்ந்து பெண் குலத்துக்குச் சேவை செய்ய வேண்டுமென்பதே பெண் குலத்தின் பிரார்த்தனை. —வசுமதி ராமசாமி

# மட்டக்களப்பு மகாநாடு

ரஜனி

கொழும்பு, ஜூலை 31உ.

இலங்கை தமிழ் அரசுக் கட்சியின் வருடாந்தர விசேஷ மகாநாடு இவ்வாரம் மட்டக்களப்பில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. நாட்டின் பல பாகங்களிலிருந்தும் இருபதினாயிரத்துக்கு மேற்பட்ட தமிழ் மக்கள் உற்சாகத்துடன் மகாநாட்டில் கலந்து கொண்டார்கள். 'அரசியலில் எங்களுக்கு இடமில்லையென்று யார் சொல்ல முடியும்?' என்று கேட்பதைப் போல மகாநாட்டு மண்டபத்தின் ஒரு பக்கம் ஏராளமான தாய்மார்கள் காட்சி யளித்தனர். தமிழர்கள் மகாநாடு கூடிப் பேசினார்களென்று சொல்லுவதை விட, வெற்றி விழா கொண்டாடினார்களென்று கூறுவதே மிகவும் பொருத்தமாயிருக்கும். ஏனெனில் ஏதோ ஒரு பெரிய காரியத்தைச் சாதித்துவிட்ட மனப்பான்மையே மகாநாட்டுக்கு வந்திருந்த எல்லோருடைய மனத்திலும் பிரதிபலித்தது.

இம்மகாநாடு கட்டுப்பாடாகவும் அமைதியாகவும் அர்த்தமற்ற ஆவேசப் பேச்சுகளில்லாமல் நிதானமான சொற்பொழிவுகளுடனும் நடைபெற்றது ஒன்றே தமிழரசுக் கட்சிக்கு மாபெரும் வெற்றியென்பது பலருடைய அபிப்பிராயம். சிங்கள அரசாங்கத்தின்மீது யுத்தப் பிரகடனம் செய்வதற்காக மட்டக்களப்பில் கூட்டப்பட்ட விசேஷ மகாநாடு, தமிழ் மக்களின் ஆரம்ப வெற்றியையும் வருங்காலத்தைப் பற்றிய நம்பிக்கையையும் மனோதிடத்தையும் பிரதிபலிக்கும் சரித்திர முக்கியத்துவம் பெற்ற மகாநாடாக மாறுமென்று இரண்டு வாரங்களுக்கு முன்னால் யாரும் எதிர்பார்த்திருக்கமாட்டார்கள்.

தமிழ் அரசுக் கட்சிக்கு அப்படி என்ன வெற்றி கிடைத்து விட்டது? அவர்களுடைய நான்கு அடிப்படைக் கோரிக்கைகளில் ஒன்றைக்கூட அரசாங்கம் முழுசாக ஏற்றுக்கொள்ளாமலிருக்கையில் அவர்கள் சத்தியாக்கிரகத்தைக் கைவிட என்ன நியாயமிருக்கிறது என்று சிலர் வினவலாம். இதற்குத் தமிழரசுக் கட்சித் தலைவர்களே மகாநாட்டுப் பிரசங்கங்களில் தக்க பதில் அளித்திருக்கிறார்கள். பிரதமருடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தில் பூரண திருப்தியடைந்து விட்டதாகவோ, அல்லது தங்களுடைய பிரச்னைகளெல்லாம் தீர்ந்து விட்டதாகவோ அவர்கள் சொல்லிக் கொள்ளவில்லை. அவர்கள் தங்களுடைய அடிப்படை இலட்சியங்களையும் கோரிக்கைகளையும் கைவிட்டுவிடவுமில்லை. தங்களுடைய இலட்சியங்களில் ஓரளவு வெற்றி கிடைத்ததினால் சமரச ஒப்பந்தத்தை ஒரு தற்காலிக ஏற்பாடாக ஒப்புக் கொண்டு, சத்தியாக்கிரகத்தைக் கைவிட்டிருப்பதாயும் இதர இலட்சியங்களை நிறைவேற்றிக் கொள்ள இடைவிடாமல் தொடர்ந்து போராடுவோமென்றும் அவர்கள் அறிவித்திருக்கிறார்கள். உண்மையில் சமரச உடன்பாடு ஒன்று ஏற்பட முடிந்தது தமிழரசுக் கட்சி — பிரதம மந்திரி ஆகிய இரண்டு பேருக்குமே வெற்றி. யாராவது ஒருவருக்கு மாபெரும் தோல்வி யென்று சொல்ல வேண்டுமானால், அது தமிழரசுக் கட்சியினர் சத்தியாக்கிரகத்தைத் தொடங்குவார்களென்றும், அதன் பயனாக நாட்டில்



மட்டக்களப்பில் நடைபெற்ற தமிழ் அரசுக் கட்சியின் வருடாந்திர மகாநாட்டில் இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ் தலைவர் திரு எஸ். தொண்டமான் சமநாட்டுத் தமிழ் மக்களின் உரிமைக் குரலை விளக்கி முழக்குகிறார்.




**பிரதம மந்திரிக்கும் தமிழ் அரசுக் கட்சித் தலைவர்களுக்குமிடையில் நடைபெற்ற சமரச ஒப்பந்தத்தை மட்டக்களப்பில் நடைபெற்ற தமிழ் அரசுக் கட்சியின் வருடாந்திர விசேஷ மகாநாடு ஊர்ஜிதம் செய்தது. மகாநாட்டில் தமிழ் அரசுக் கட்சித் தலைவர் திரு வி. வன்னியசிங்கம் ஒப்பந்தத்தின் தன்மையை விளக்கிப் பேசுகிறார்.**

ஏற்படும் குழப்ப நிலைமையை உபயோகப்படுத்திக் கொண்டு சரியாகச் சூறையாடி விடலாமென்றும் மனப்பால் குடித்துக் கொண்டிருந்த சமூகத் துரோகிகளுக்குத்தான்!

இலங்கை இந்தியர்களை ஒரு காலத்தில் படுமோசமாகக் காட்டிக் கொடுத்தவர்களும், இந்தியத் துவேஷத்துக்கு முதல் வித்திட்டவர்களுமான சில பெரிய மனிதர்கள், இலங்கை இந்தியர்களைத் தமிழரசுக் கட்சியினர் காட்டிக் கொடுத்து விட்டதாகச் சொல்லி இப்பொழுது முதலைக் கண்ணீர் வடிக்கிறார்கள். மட்டக்களப்பு மகாநாட்டில் இந்திய வம்சாவளியினர்களின் பிரதிநிதித்துவ ஸ்தாபனங்களான இரண்டு காங்கிரஸ் ஸ்தாபனங்களின் தலைவர்களும் சமூகம் கொடுத்துச் சொற்பொழிவு நிகழ்த்தியது விஷமிகளின் வாய்களை அடைக்கப் போதுமானது. இங்கே இன்னொரு விஷயத்தையும் குறிப்பிட வேண்டும். தமிழரசுக் கட்சியினர் பிரதம மந்திரியுடன் சமரசம் பேசிய பொழுது இந்தியர்களின் பிரஜாவுரிமையைப் பற்றிப் பலமாக அவர்கள் வற்புறுத்திய பொழுதிலும், இந்தியப் பிரதிநிதிகளையும் கலந்து கொள்ளாமல் இது விஷயமாகத் தமிழரசுக் கட்சியுடன் பிரதம மந்திரி நிச்சயம் உடன்பாடு செய்து கொண்டிருக்க முடியாது. இந்தியப் பிரதிநிதிகளை ஒதுக்கித் தமிழரசுக் கட்சியுடன் செய்து கொள்ளும் உடன்பாடு முறையானதும் ஆகாது. இந்த நிலைமையில் இந்தியப் பிரதிநிதிகளையும் கலந்துகொண்டு இந்தியர் பிரஜாவுரிமைப் பிரச்னைக்கு விரைவில் ஒரு சுமுகமான முடிவு செய்வதாகப் பிரதம மந்திரி தமிழரசுக் கட்சியிடம் உறுதி கூறினார். இதை உத்தியோக தோரணையில் இவ்வாரம் பார்லிமெண்டிலும் அவர் ஊர்ஜிதம் செய்து ஒரு அறிக்கை விடுத்திருக்கிறார்.

சுதந்திரத் தமிழ் ராஜ்யமுள்ள ஒரு சமஷ்டி ஆட்சி முறையைப் பெறுவது, தமிழுக்கும் சிங்களத்துக்கும் நாடு முழுவதும் சரிசம அந்தஸ்தைப் பெறுவது, இலங்கையைத் தாய்நாடாகக் கொண்ட சகல தோட்டத் தொழிலாளருக்கும் பிரஜாவுரிமை கிடைக்கச் செய்வது ஆகியவைதான் தமிழரசுக் கட்சியின் இலட்சியங்கள். இதற்காக இடைவிடாமல் போராடுவது என்றும், சமரச ஒப்பந்தத்தை ஒரு தற்காலிக ஏற்பாடாகவும் நல்ல முடிவுக்கு முதற்படியாகவும் ஏற்றுக் கொண்டிருப்பதாயும் மட்டக்களப்பு மகாநாடு ஏகமனதாகத் தீர்மானித்திருக்கிறது மிகுந்த மகிழ்ச்சி அளிக்கக் கூடிய விஷயமாகும்.

* * *

தமிழரசுக் கட்சியினர் மட்டக்களப்பில் மகாநாடு நடத்திக் கொண்டிருக்கையில் வவுனியா எம்.பி.யான திரு சி. சுந்தரலிங்கம் மட்டக்களப்புக்குச் சென்று தமிழரசுக் கட்சி எதிர்ப்புக் கூட்டமொன்றை நடத்த ஏற்பாடு செய்தார். அவரைப் பேச விடாமல் கூட்டத்தினர் குழப்பம் செய்து கற்களை வீசியதினால் பெரும் கலகம் ஏற்படக் கூடிய அபாயகரமான நிலைமை உருவாகியது. போலீஸார் தலையிட்டுத் திரு சுந்தரலிங்கத்தை வெளியேறுமாறு கேட்டுக் கொண்டார்கள். அதற்கு அவர் பிடிவாதமாக மறுக்கவே, வலுக் கட்டாயமாகத் திரு சுந்தரலிங்கத்தைப் போலீஸார் அப்புறப்படுத்திக் கொண்டு செல்ல வேண்டியதாயிற்று. ஒரு ஜனநாயக நாட்டில் திரு சுந்தரலிங்கத்துக்கு அவருடைய சொந்தக் கருத்துக்களை வெளியிடவும் இஷ்டப்பட்ட இடத்தில் பொதுக் கூட்டம் நடத்திப் பேசவும் உரிமை உண்டு என்பதை யாரும் மறுக்கவில்லை. ஆனால் உரிமை என்ற சொல்லில் ஒரு பொறுப்பும் இருக்கிறது. பிறர் உரிமையை மதித்து நடக்கும் கடமையும் பொதுஜன நலனைக் கருதும் கடமையும் இருக்கின்றன.

தமிழரசுக் கட்சியினரை மகாநாடு கூட விட்டு மகாநாட்டுக்கு ஒரு நாள் முன்போ அல்லது ஒரு நாள் பின்போ திரு சுந்தரலிங்கம் எதிர்ப்புக் கூட்டம் நடத்தியிருந்தால் அவருக்கும் கௌரவம், பொதுவாகத் தமிழ் மக்கள் அனைவருக்குமே கௌரவமாயிருந்திருக்கும்.




# பிரஜா உரிமை அதிகாரி

நுவரேலியாப் பகுதி பிரஜா உரிமைக் கமிஷனரின் ஆபீஸ் மணி கணகண வென்று அலறியது. தூங்கி வழிந்து கொண்டிருந்த ஆபீஸ்சேவகன் அலறிப்புடைத்தவாறு கமிஷனரின் அறைக்கு ஓடினான்.

'சுந்தரத்தை வரச்சொல்' என்ற கமிஷனரின் அதிகாரக் குரலைக் கேட்ட சேவகன், நாலெட்டில் சுந்தரத்தின் அறைக்குச் சென்று செய்தியைச் சொன்னான்.

" வணக்கம் ஸார் !" என்றவாறு கமிஷனரின் முன்பு நின்றான் சுந்தரம்.

" உட்கார், சுந்தரம் !" என்று கமிஷனர் கூறி விட்டு, டிராயரைத் திறந்து பெரிய பைல் ஒன்றை எடுத்துப் பெருநோக்காகப் பார்த்தவாறு, "சந்திரகாந்தித்தோட்டத்துப் பிரஜா உரிமை மனுக்கள் பூரணமாக விசாரிக்கப்படவில்லை. இம்முறை விசாரணை சந்தேகத்துக்கிடமின்றி யிருக்க வேண்டும். உரிமையின்படி அவர்களுக்குப் பிரஜா உரிமை உண்டா, இல்லையா என்பதைக் கவனமாகப் பரிசீலனை செய்ய வேண்டும்" என்றார்.

" சரி, சார் !" என்றவாறு கமிஷனரிடமிருந்து பைலை வாங்கிக் கொண்டு காரியாலயத்துக்கு வெளியே வந்தான். மறுகணம் சுந்தரத்தின் மோட்டார் நாற்பது மைல் வேகத்தில் சந்திரகாந்தித் தோட்டத்தை நோக்கி விரைந்தது.

சந்திரகாந்தித் தோட்டத்துப் பாடசாலையில், மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்த குமார், பாடசாலை வாசலில் கார் வந்து நிற்கவே வெளியே வேகமாக வந்தான்.

மோட்டாரை விட்டு இறங்கிவரும் சுந்தரத்தைக் கண்டு வியப்படைந்தவாறு, 'சுந்தரம்' என்றான் குமார்.

'குமாரா !' என்று மிகவும் ஆச்சரியப்பட்டான் சுந்தரம்.

" நீ இங்கேதான் இருக்கிறாயா ? எனக்குத் தெரியவில்லையே ?" என்றவாறு சுந்தரம் குமாரின் கரங்களை அன்புடன் பற்றினான். பிறகு அவனை அழைத்துக் கொண்டு தன் இருப்பிடத்துக்குச் சென்றான்.

*   *   *

இயற்கையின் அன்புக் கைகளால் அரவணைக்கப்பட்ட அழகிய ஊர் குருமண்வெளி. உழுதுண்டு வாழ்பவர்களின் பிறப்பிடமான அவ்வூர் அழகிலே சிறந்த நங்கையர்களையும் கொண்டு துலங்கியது. ஆகவே ஈழநாட்டின் பல திக்குகளிலும் குருமண்வெளி என்ற பெயர் பிரபலமாயிருந்தது.

குருமண்வெளி ஆரம்பப் பாடசாலையிலே மூன்றாவது வகுப்பிலே குமார் படித்துக் கொண்டிருந்தான். அப்பொழுது தான் சுந்தரம் வந்து சேர்ந்தான். சுந்தரத்தின் சொந்த ஊர் குருமண்வெளிதான்.

காலச் சக்கரத்தின் சுழற்சியிலே, சுந்தரமும், குமாரும் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதினார்கள். ஆனால் பரீட்சை முடிவு அவர்களது நட்பைத் துண்டித்து விட்டது.

"இதுதானா அப்பா உனது ஜாகை?" என்றவாறு சுந்தரம் அறையைச் சுற்றிக் கண்ணோட்டம் செலுத்தினான். விருந்தாளிக்குக் காப்பி தயாரிப்பதற்காகப் பக்கத்து அறைக்குக் குமார் செல்லவும், திறந்திருந்த ஜன்னலின் ஊடாகப் பார்வையைச் செலுத்திய சுந்தரத்தின் கண்கள் அப்படியே நிலைக்குத்தி நின்றன.

ஜன்னலுக்கு எதிர்த்தாற்போல் இருந்த வீட்டு வாசலிலே அவள் ஒய்யாரமாக நின்று கொண்டிருந்தாள். அவளது மோகன எழில் சுந்தரத்தைத் தடுமாறச் செய்தது. கருநாகம் போல் கருண்டு தொங்கிய இரண்டு ஜடைப் பின்னல்கள் முன்னும் பின்னுமாகத் தொங்கிக் கொண்டிருந்த நிலை சுந்தரத்தின் மனசை வசீகரித்தது. செக்கச் சிவந்த மலர் முகமும், அதற்கேற்ப அழகூட்டும் அங்கங்களும் பெருவிருந்தாக இருந்தன. பருவத்தின் எழில் அவளது அங்கமெங்கும் புதுமெருகேட்டிருந்தது. புத்தம் புது மலர் போல் மலர்ந்திருந்த அவளது மோகன எழில் காந்தம் போல் கவர்ந்து இழுத்தது.

சுந்தரம் கல்லூரியிலே படிக்கும்போது எத்தனையோ பெண்களைப் பார்த்திருக்கிறான். உத்தியோக அலுவல்களிலே அதிகமான பெண்களைப் பார்த்திருக்கிறான். ஆனால் அவளைப் போன்ற எழில் படைத்த மங்கையை அவன் இதுவரையிலும் காணவில்லை. அந்தக் கணமே அவனது மனம் அவளிடம் குடிபுகுந்து விட்டது. ஜன்னல் கம்பியினைப் பற்றியவாறு வைத்த கண் வாங்காது அவளது எழிலினையே பருகிக் கொண்டு நின்றான் சுந்தரம். எதேச்சையாக அவளது பார்வை ஜன்னலை நோக்கித் திரும்பியது. ஜன்னலிலே தன்னையே அன்பு மலரப் பார்த்துக் கொண்டிருக்கும் புது முகத்தைக் காணவும் புன்முறுவல் மலர உள்ளே ஓடி மறைந்தாள்.

முழுமதி மேகத்திலே மறைவது போலிருந்தது. அவள் ஓடி மறைந்தது சுந்தரத்துக்கு.

"காப்பி தயாரித்து விட்டேன்" என்றவாறு குமார் தம்ளரை நீட்டவும் வாங்கிக் கொண்டு நாற்காலியில் அமர்ந்தான் சுந்தரம்.

காப்பியை அருந்தியவாறு சுந்தரம், அவளைப் பற்றிக் குமாரிடம் விசாரிக்கலாமா, விசாரிக்கக் கூடாதா என்று எண்ணமிடலானான். அவனது எண்ணக் கழலைப் பற்றி அக்கறை கொள்ளாதவன் போல் குமார், "சுந்தரம்! நீ சந்திரகாந்தித் தோட்டத்துத் தலைமைக் குமாஸ்தாவின் பிரஜா உரிமை மனுவுக்காகத்தானே வந்தாய்?" என்று கேட்டான்.

"ஆமாம்" என்று தலையாட்டினான் சுந்தரம்.

"தலைமைக் குமாஸ்தா சங்கரப் பிள்ளை முன்னாடித்தான் வந்து போனார். உன்னைக் காணவில்லை. பிறகு வந்தால் தமது வீட்டுக்கு வரும்படி சொல்லச் சொன்னார்."

"அப்படியா?" என்று சூள் கொட்டினான்.

"பக்கத்து வீடுதான் அப்பா சங்கரப் பிள்ளையின் வீடு. நமது ஜன்னலினால் பார்த்தால் அவரது வீடு தெரியும்."

"பக்கத்து வீடா?" என்று அதிசயித்த சுந்தரம், தான் கொண்டு வந்த பையிலை எடுத்துப் புரட்டிப் பார்க்கலானான். பக்கத்து வீடு. ஏனெனில் அவனது மனத்தில் உறைந்த அவளது வீடு தானே! அப்படியானால் அவளது பெயர் என்னவாக இருக்கலாம். சங்கரப் பிள்ளையின் மகள் தானே! புரட்டினான். பெயர் தெளிவாகத் தெரிந்தது. சுந்தரி! 'பெயரும் பொருத்தமாக அமைந்து விட்டது' என்று மனத்தினுள் முணுமுணுத்தவாறு நாற்காலியை விட்டு எழுந்தான் சுந்தரம்.

"குமார்! நான் சங்கரப்பிள்ளையின் வீட்டுக்குப் போய்விட்டு வருகிறேன்" என்று கூறிப் புறப்பட்டான் சுந்தரம்.

"கடமைதான் முக்கியம். போய் வா, சுந்தரம்" என்று மலர்ந்த முகத்துடன் குமார் அவனை வழி அனுப்பி வைத்தான்.

* * *

"சங்கரப்பிள்ளை இருக்கிறாரா?" என்ற குரல் கேட்கவும் சுந்தரி தான் படித்த நாவலை மூடி வைத்து விட்டு வெளியே வந்தாள். வந்தவள் ஒரு கணம் அப்படியே அயர்ந்தவாறு நின்று விட்டாள். சற்று முன்னால் பள்ளிக்கூடத்து அறையிலே கண்டவர், எதிரே நின்றால் எப்படி இருக்கும்? நீங்கள் யார் என்பது போல் கண்களால் ஏறிட்டு நோக்கினாள்.



"நான் பிரஜா உரிமை அதிகாரி, சங்கரப பிள்ளையின் மனுக்களைப் பரிசீலனை செய்யலாமென்று வந்திருக்கிறேன்."

"உட்காருங்கள். அப்பா வந்துவிடுவார்" என்றவாறு உள்ளே மறைந்தாள்.

கூடத்திலே கிடந்த சோபா ஒன்றில் உட்கார்ந்தான் சுந்தரம். உள்ளே ஓடியவள், சிறிது நேரத்தில் ஓர் தட்டில் 'ஸர்பத்' எடுத்துக் கொண்டு வந்து சுந்தரத்தின் முன்னே வைத்து விட்டு ஒரு பக்கமாக நின்றாள். ஸர்பத்தை அருந்தியவாறு, "அப்பா வர நேரமாகுமா?" என்று கேட்டான்.

"ஆபீஸுக்கு வேலைக்காரனை அனுப்பி இருக்கிறேன். விரைவிலே வந்து விடுவார்."

"பிரஜா உரிமைக்காக உங்களது மனுவும் இருக்கிறதே."

"ஆமாம்!"

"உங்களுக்கு இலங்கை நாடு நன்றாகப் பிடித்துக் கொண்டதாக்கும்."

"ஏன்?"

"பிரஜா உரிமைக்காக நீங்கள் மனுப் பண்ணியிருக்கிறீர்களே?"

"இந்த நாட்டிலே வாழையடி வாழையாக வாழ்ந்து வந்த நாங்கள், ஏன், இந்த நாட்டைப் பொன் கொழிக்கும் சொர்க்கலோகமாக மாற்றிய நாங்கள் பிரஜா உரிமை பெறக்கூடாதா?"

"நீங்கள் பெறக் கூடாதென்று நான் சொல்லவில்லையே?"

"நீங்கள் பிரஜா உரிமை அதிகாரி. பிரஜா உரிமை வழங்கக் கூடாது என்று சிபார்சு பண்ணி விடுவீர்களாக்கும்."

"வேண்டுமானால், உங்களுக்கு மட்டும் பிரஜா உரிமை கொடுக்கும்படி சிபார்சு செய்கிறேன்."

"ஏன், எனக்கு மட்டும்...."

"அதுவா...உங்களைப் பார்த்தவுடனே..."

பூட்ஸின் சத்தம் வெளியே கேட்கவும் அவள் உள்ளே மறைந்து விட்டாள்.

"வணக்கம் ஸார்" என்றவாறு சங்கரப் பிள்ளை உள்ளேவந்தார். வியப்படைந்தவாறு, "நீங்கள் தான் பிரஜா உரிமை அதிகாரியா?..." என்று கேட்டார்.

"ஆமாம்!"

"உங்களைப் போல் இளம் வயதுடைய ஒருவர் பிரஜா உரிமை அதிகாரியாக வருவாரென்று நான் நினைக்கவில்லை."

"நினைக்காதவைகள் எத்தனையோ இந்த அணுகுண்டு காலத்தில் நடைபெறுகின்றன. அது சரி! ஏற்கெனவே பரிசீலனை செய்யப்பட்ட உங்கள் மனுக்களில் என்ன தவறு?"

"தவறு? நான் பிறந்தது இலங்கையில். எனது தகப்பனார் பிறந்தது இலங்கையில்.

எனது பாட்டனாரும் பிறந்தது இலங்கையில். அப்படியிருக்க எனது குடும்பத்துக்கு எப்படிப் பிரஜா உரிமை வழங்க மறுக்க முடியும்? நீங்களே சொல்லுங்கள்.''

''சரி, கவனிப்போம்!''

சுந்தரமும் விசாரணையைத் தொடங்கினான். ஒவ்வொரு தஸ்தாவேஜிகளையும் மிகவும் கவனமாகப் பரிசீலனை செய்தான். இடையிடையே ஏற்படும் சந்தேகங்களைச் சங்கரப் பிள்ளையிடம் கேட்டுக் குறித்துக் கொண்டான். அப்போது டெலிபோன் மணி அலறியது. டெலிபோனைக் கையில் எடுத்த சங்கரப்பிள்ளை 'இதோ வருகிறேன்' என்றவாறு டெலிபோனை வைத்தார்.

''ஸார்! துரை அழைக்கிறார். நான் பதினைந்து நிமிஷத்தில் வந்து விடுவேன். அது வரையில் தங்கள் வேலை தடைப்பட வேண்டாம். சந்தேகம் எழுந்தால் என் மகள் சுந்தரியைக் கேளுங்கள்'' என்று கூறி, சங்கரப் பிள்ளை, சுந்தரியை அறிமுகப்படுத்தி வைத்து விட்டுச் சென்றார். பாவம்! அவர் அறிமுகப்படுத்தி வைப்பதற்கு முன்பே அவர்கள் அறிமுகமாகி விட்டவர்கள் என்பதை அவர் எங்கே கண்டார்?

சுந்தரியுடன் இத்தனை நெருக்கமாக இருக்க ஒரு தருணம் ஏற்படுமென்று சுந்தரம் எதிர்பார்க்கவில்லை. கிடைத்த தருணத்தை உடனடியாகப் பயன்படுத்திக் கொள்ள எண்ணினான். சுந்தரியைப் பார்த்தபின்னர் அவன் தனது நிலையில் இல்லையே! அவன் உள்ளமெங்கும் அவள் நிறைந்துவிட்டாள்.

அவளது மோகன எழிலை ரசித்தவாறு தஸ்தாவேஜுகளில் கவனம் செலுத்த மறந்தான். எதிரே அமர்ந்திருக்கும் அவளைப் பார்ப்பதும், பிறகு பைலைப் பார்ப்பதுமாக இருந்தானே ஒழிய, பைலில் என்ன எழுதியிருக்கிறது என்பதைப் பார்க்க அவனது கண்கள் மறுத்து விட்டன.

கடிகார முள் நகர்ந்து கொண்டிருந்தது. துரையைக் காணப்போன சங்கரப் பிள்ளை வந்தால், தனிமையிலே உரையாட வாய்ப்பு கிடைத்த பொன்னான தருணம் பாழாகப் போய் விடும். சங்கரப் பிள்ளை வருவதற்கிடையிலே அவளது மனக் கருத்தை அறிந்து கொண்டு விட வேண்டுமென்று எண்ணிய சுந்தரம், அங்கு தாண்டவமாடிய மௌனத்தைக் கலைத்தான்.

''உங்களது பிரஜா உரிமை மனுக்கள் பரிசீலனை செய்து முடிக்க இரண்டு வாரங்களுக்கு மேல் பிடிக்கும்.''

''இரண்டுவாரங்களென்ன? இரண்டு மாதங்கள் பிடித்தாலும் எங்களுக்குப் பிரஜா உரிமை தான் முக்கியம்.''

''ஒருகால் உங்களுக்குப் பிரஜா உரிமை கிடைக்கா விட்டால்...''

''அப்பா அப்பீல் பண்ணுவதாக இருக்கிறார்.'' சுந்தரி ஏறிட்டு நோக்கினாள்! அவளது உதட்டிலே மெல்லிய புன்முறுவல் நெளிந்தது.

''உன்னைக் கண்ட அந்தக்கணமே, எனது மனம் உன்னிடமே தாவிவிட்டது. நான் எனது நிலையில் இல்லை. என் தனிமைக்கு இனிமை தருவாயா! சொல் சுந்தரி. உன் வார்த்தையிலே தான் எனது வாழ்வும் தாழ்வும் இருக்கின்றன.''

''உங்கள் அன்பினுக்கு...''

''எனது அன்பு தூய்மையானது. சுந்தரி! அதிலே களங்கம் என்பது இருக்காது.''

''என் அன்பும் களங்கமில்லாதது.''

''எனக்கு வாழ்வு கிடைத்து விட்டது'' என்று மகிழ்ந்தவாறு அவன் அவளது மென் கரத்தைப் பற்றினான். தூயகாதலிலே, கண்டதும் காதல் கொண்ட இரு உள்ளங்கள் இணைந்து விட்டன.

*　　　　*　　　　*

''ஸார்! உங்களைக் கமிஷனர் அழைக்கிறார்'' என்று ஆபீஸ் சேவகன் கூறவே, இருக்கையை விட்டு எழுந்து சென்றான் சுந்தரம்.

''வணக்கம் ஸார்!'' என்றவாறு குழைந்தான் சுந்தரம்.

''சந்திரகாந்தித் தோட்டத்து மனுக்களின் பரிசீலனை முடித்ததா சுந்தரம்?''

''இன்னும் பூரணமாகவில்லை ஸார்...'' என்று தடுமாறியவாறு கூறினான் சுந்தரம். இளைமும் தவறாமல் சுந்தரம் சந்திரகாந்தித் தோட்டத்துக்குச் சென்றான். பிரஜா உரிமை மனுக்களைப் பரிசீலனை செய்வது என்பது அவனதுகடமை. ஆனால் பிரஜா உரிமை மனுக்களை அவன் எப்பொழுதோ பரிசீலனை செய்து முடித்து விட்டான். ஆனால் காதல் தேவியான சுந்தரிக்காக, கடமை என்ற கார



**அருள் வாக்கு**

ராமர் மகாவிஷ்ணுவின் அவதாரம். ஆனாலும் அவர் சீதை பிரிந்ததற்காகத் துக்கப்பட்டார். குரங்குகளுடைய ஸஹாயத்தை அடைந்தார். நாடகத்தில் எந்த வேஷத்தை எடுத்துக் கொண்டார்களோ அதற்குத் தக்கபடி ஆடவேண்டுமே யொழிய, தங்களுடைய சொந்த ஸ்வரூபத்தை நாடகமேடையில் காட்டக் கூடாது. அது போல ராமர் தாம் எடுத்துக் கொண்ட மனுஷ்ய வேஷத்துக்குத் தக்கபடி 14 வருஷம் காட்டுக்குப் போனார். சீதையைப் பிரிந்து வருத்தப்பட்டார். பர்ணசாலையில் தங்கி இருந்தார். பழங்களைச் சாப்பிட்டார். லக்ஷ்மணர் மூர்ச்சையாக விழுந்த போது அழுதார். அவர் உத்தம புருஷராக நடித்தார்.

ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடிபீடம்.

ணத்தைமுன்னிட்டுத் தினமும் தவறாது சென்று கொண்டிருந்தான். சுந்தரியுடன் உல்லாசமாகப் பேசிக் கொண்டிருப்பதிலே பொழுது போய் விடும்.

மனுக்களின் விசாரணை பூரணமாகவில்லையென்று சுந்தரம் சொன்னது கமிஷனருக்கு வியப்பாக இருந்தது. 'கடமையை அலட்சியம் செய்யாத சுந்தரமா இப்படிச் சொல்கிறான்?' என்று ஒரு கணம் தடுமாறினார். 'இரண்டு குடும்பத்தவரின் பிரஜா உரிமை மனுக்களை, அதுவும் இரண்டாம் தடவையாகப் பரிசீலனை செய்ய ஓர் மாதம் சுந்தரத்துக்குப் பிடித்ததா?' இதைக் கமிஷனரால் நம்ப முடியவில்லை. சுந்தரத்தினிடம் பொறுப்பை ஒப்புவித்த அன்றே, சந்திரகாந்தித் தோட்டத்து மனுக்களைக் கமிஷனர் மறந்து விட்டார். பரிசீலனை செய்து இறுதி முடிவைச் சுந்தரம் மேலதிகாரிக்கு அனுப்பியிருப்பானென்றே கமிஷனர் எண்ணியிருந்தார். அந்த எண்ணம் சிதறுண்டு போகத் தக்கதாக மேலதிகாரியிடம் இருந்து வந்த அவசரக் கடிதமே அவருக்கு ஞாபகத்தை ஊட்டியது. "சுந்தரம்! இன்று மனுக்களின் இறுதி முடிவு பூரணமாக வேண்டும். இன்றையத் தபாலில் விளக்கம் முழுவதும் மேலதிகாரிக்குச் செல்ல வேண்டும். உன்னால் முடியுமா?" என்று கேட்டார் கமிஷனர்.

"முடியும் ஸார்! இப்பொழுதே போகிறேன்" என்றவாறு வெளியேறிச் சந்திரகாந்தித் தோட்டத்தை நோக்கிக் காரில் விரைந்தான்.

சுந்தரம், சந்திரகாந்தித் தோட்டத்து மனுக்களைப் பரிசீலனை செய்து அதன் உண்மையினைக் கண்டு விட்டான். அதன்படி பார்க்கப் போனால், சங்கரப் பிள்ளையின் குடும்பத்தவர்களுக்குப் பிரஜா உரிமை வழங்க முடியாது. ஆனால் அருமைக் காதலியிடம் 'உங்களுக்கு நிச்சயமாகப் பிரஜா உரிமைகிடைக்கும்' என்று காதல் வேகத்தில் உளறி விட்டான். இப்பொழுது என்ன செய்வது? காதல் ஒருபக்கம், கடமை ஒருபக்கமாக நின்று அவனை வதைத்தன. மனத்தை எங்கெல்லாம் தூவ விட்டுக் கொண்டு, வழி ஏதாவது தென்படுமா என்ற எண்ணத்திலே, காரைக் குமாரின் பள்ளிக்கூடத்து வாசலிலே நிறுத்தினான்.

"வா, சுந்தரம்!" என்று குமார் அன்புடன் வரவேற்றான். தனது மனப்புயலை நண்பனிடமாவது சொல்லி ஆற்றிக் கொள்ளலாம் என்ற எண்ணம் தோன்றவே எல்லாவற்றையும் குமாரிடம் கொட்டித் தீர்த்தான்.

சுந்தரம் சொல்லாவிட்டாலும், அவனது காதல் விஷயம் அவனுக்குத் தெரியத்தான் செய்தது. அவனுக்கு மட்டுமல்ல, சங்கரப் பிள்ளைக்கும் தெரிந்துதான் இருந்தது.

சுந்தரம் தானாக விஷயத்தில் இறங்கவும், குமார் ஓர் முடிவுக்கு வந்தவனாக, "வா சங்கரப் பிள்ளையிடம் போகலாம்" என்று அழைத்துக் கொண்டு சென்றான்.

அவர்களை உபசரித்தார் சங்கரப்பிள்ளை முகமலர்ச்சியுடன். இதுவரை சுந்தரம்தனிமையாகத்தான் அங்கு வருவான். அப்படியிருக்க இருவரும் சேர்ந்து வந்தமையினால் ஏதோ ஓர் விசேஷம் நடக்கப்போகிறதென்று சங்கரப் பிள்ளை எண்ணினார். அந்த எண்ணத்திற்குச் சிகரம் வைத்தாற்போல, குமார் பேசலானான்:

"உங்கள் குடும்பத்து மனுக்களையெல்லாம் சுந்தரம் மிகவும் கவனமாகப் பரிசீலனை செய்தான். ஆனால் பிரஜா உரிமை...."

"கிடைத்து விடுந்தானே?" என்று முடித்தார் சங்கரப்பிள்ளை.

"அதில்தான் பெரிய சிக்கல் இருக்கிறது" என்றான் குமார்.

"சிக்கலா?" என்று வியந்தார் அவர்.

"ஆமாம். சுந்தரம் பிரஜாஉரிமை அதிகாரியாக இருந்தாலும் கடமையைத்தானே செய்ய முடியும்? கடமையின்படி உங்கள் குடும்பத்திலுள்ள ஒருவருக்குத்தான் பிரஜா உரிமை வழங்க முடியுமாம்."

"ஒருவருக்கு என்றால் இந்தக் குடும்பத்தில் எல்லோருக்குந்தானே...."

"அதுதானே முடியாது. சுந்தரம் தங்களது மகள் சுந்தரியை மணக்க உறுதி கொண்டிருப்பதனால், சுந்தரிக்கு மட்டும் பிரஜாஉரிமை கிடைக்கும்...." என்றான் குமார்.

சுந்தரம் அதை ஆமோதிப்பது போல் கடைக்கண்ணால் சுந்தரியை நோக்கினான். வெட்கம் மேலிட அவள் வேகமாக உள்ளே ஓடி மறைந்தாள்.

'இலங்கைப் பிரஜையான சுந்தரத்தைச் சுந்தரி மணப்பதனால், சுந்தரிக்குப் பிரஜா உரிமை தன்னாலே கிடைக்கிறது. ஆனால் எனக்கு' என்றவாறு சங்கரப்பிள்ளை எண்ண மிடலானார்.

"தானாக வருவதை ஏன் தட்டிக் கழிக்கப் பார்க்கிறீர்கள்? இரண்டு காதல் பறவைகளைப் பிரித்து வைக்காதீர்கள். இப்பொழுதே நிச்சயதாம்பூலம் மாற்றிக் கொள்ளலாம்" என்றான் குமார்.

"ஆமாம். நானும் பிரஜா உரிமை மனுக்களை இன்றைக்கே மேலதிகாரிக்கு அனுப்பியாக வேண்டும். உங்கள் சம்மதம்..." என்றவாறு இழுத்தான் சுந்தரம்.

"எனக்குச் சம்மதம், மாப்பிள்ளை!" என்றார் சங்கரப் பிள்ளை.

சுந்தரம் பேனாவை எடுத்துப் பிரஜாஉரிமை மனுக்களில் எழுதலானான்.

'சுந்தரி, பிரஜா உரிமை அதிகாரியான சுந்தரத்தை மணந்துகொள்ள இருப்பதனால் அவளுக்கு மட்டும் பிரஜா உரிமை வழங்கலாம். மற்றவர்களுக்கு வழங்கத் தக்கதான ஆதாரங்கள் பூரணமாக இல்லை. பைலை மூடி எடுத்துக்கொண்டவாறு சுந்தரம் எழுந்தான்.

"என்ன புறப்பட்டு விட்டீர்கள்?....." என்று கேட்டார் சங்கரப்பிள்ளை.

"ஆபீசுக்குப் போய் விரைவில் வந்து விடுகிறேன். ஆக வேண்டியவைகளைக் கவனியுங்கள்" என்று கூறிவிட்டுக் காரில் ஏறிச் சென்றான் சுந்தரம்.

சுந்தரத்தின் விசாரணையைப் பார்த்த கமிஷனரின் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது.

"நான் நினைத்தேன், கடமையில் தவறாத சுந்தரம், தாமதமாகியதற்குக் காரணம் ஏதாவது இருக்க வேண்டுமென்று! காரணம் காதலி கிடைத்து விட்டாள். உங்கள் இல்வாழ்க்கைக்கு எனது நல்வாழ்த்துக்கள்" என்றார் கமிஷனர்.

# தெரியுமா உங்களுக்கு?

பூனை, புலி போன்ற சில மிருகங்களுக்கும் ஆந்தை, வௌவால் போன்ற சில பட்சிகளுக்கும் இரவில் கண்கள் தெரிகின்றன. இயற்கை நியதியில் இது ஓர் அதிசயமான விஷயம் அல்லவா? ஆனால், மற்ற மிருகங்களுக்கோ, பட்சிகளுக்கோ, மனிதருக்கோ இரவில் கண்கள் தெரிவதில்லை. வெளிச்சம் அல்லது விளக்கின் உதவியின்றி மனிதர் இருளில் எதையுமே பார்க்க இயலாது. ஆனால், அமெரிக்க விஞ்ஞான ஆராய்ச்சி நிபுணர்கள் மேற்படி இயற்கை நியதி பொய்த்துப் போகும்படி செய்திருக்கிறார்கள். அதாவது இருளில் விளக்கின் உதவியின்றி வெகு தூரம் பார்க்கக் கூடிய ஒரு கருவியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். சமீபத்தில் அவர்கள் அக்கருவியைப் பொது மக்களுக்கும் காட்டி, அவர்களின் பாராட்டுதலைப் பெற்றார்கள்.



உருவத்தில் காமிராவைப்போல் தோன்றும் அக்கருவி இவா (evaporograph) என்ற பெயருடன் விளங்குகிறது. ஒரு வித தூரதிருஷ்டிக் கண்ணாடியால் பார்க்கும்போது வெகு தூரத்தில் உள்ள மனிதர், சாதனங்கள் எல்லாம் அருகில் இருப்பவை போல் தோன்றுகின்றன அல்லவா? மேற்படி கண்ணாடியை இராணுவ நிபுணர்கள் அதிகமாக உபயோகிப்பது போல், புதிதாகக் கண்டுபிடித்துள்ள 'இவா' கருவியையும் முதன் முதலாக அமெரிக்க இராணுவ நிபுணர்களே உபயோகிக்க முற்பட்டிருக்கிறார்கள். அந்தக் கருவியைக் கொண்டு போர் முனையில் சத்தம் எதுவும் செய்யாமல் பகைவர்களின் நிலையைக் கண்டு கொள்ளலாம் அல்லவா?

இதில் மற்றொரு அதிசயம் என்னவெனில் 'இவா' கருவியின் மூலம் தெரியும் காட்சிகளைக் காமிராவினால் புகைப்படமும் எடுக்க முடியும்.

இதுவரை ஒரு சில 'இவா' கருவிகளைத்தான் உற்பத்தி செய்திருக்கிறார்கள். இருளில் பார்க்கக் கூடிய அந்தக் கருவிகள் ஒவ்வொன்றும் செய்ய 9,500 டாலர், அதாவது நாற்பதாயிரம் ரூபாய்க்குமேல் செலவாகிறது என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அமெரிக்கர்கள் எதைக்கண்டு பிடித்தாலும், அது இராணுவத்துக்கு உபயோகமாக இருக்குமா என்று பார்ப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள் என்பதற்கு இது ஒரு சான்றாகும்.

ஆயுத வலிமையையே முக்கியமாகக் கருதும் அவர்களுடைய மனம் அவ்விதம் இயங்கி வருகிறது. அவர்கள்தான் முதலில் அணுசக்தியை அழிவு வேலைகளுக்கு உபயோகப் படுத்தினார்கள் என்பது உலகம் அறிந்ததே. இரவில் பார்க்கக் கூடிய கண்ணாடியை எத்தனையோ ஆக்க வேலைகளுக்கு உபயோகப்படுத்திக் கொள்ளலாம். ஆனால், அவர்கள் அவ்விதம் செய்யவில்லை. விஞ்ஞான ஆராய்ச்சியின் மூலம் கண்டு பிடிக்கப்படும் அற்புதங்களைத் துஷ்பிரயோகம் செய்தால், நன்மைக்குப் பதிலாக உலக மக்களுக்குத் தீங்கே விளையும்.

# வட்ட மேஜை

## நெருப்பு

கல்கி 4-8-57 இதழில் 'நெருப்பு' என்ற கதையைப் படித்தேன். ராஜாஜி அவர்கள் தமிழ்ப்படுத்திய இக்கதையை வாசிக்கும் போது நெஞ்சு உருகிக் கண்களில் நீராய் வழிந்தது. தன்னலம் கருதாத வீபனை நினைக்கும் போது மனம் உருகுகிறது. ராஜாஜி அவர்கள் இது போன்ற இன்னும் பல கதைகளைத் தமிழுக்கு அளிக்கப் பிரார்த்திக்கிறேன்.

கும்பகோணம்
1—8—57 கோமளா

## ஒரு வேண்டுகோள்

சென்னை நகரில் வாடகை உயர்வின் கடுமையை உணர்ந்து, இங்கு அரசாங்க ஸ்தல ஸ்தாபன நிர்வாகங்களின்கீழ் சேவை செய்யும் ஆசிரியர்கள் எல்லோருக்கும் வீட்டு வாடகைப் படி பல ஆண்டுகளாக வழங்கப்பட்டு வருகிறது. ஆனால் அரசாங்க உதவி பெறும் பாடசாலைகளிலும், கல்லூரிகளிலும் சேவை செய்யும் ஆசிரியர்களுக்கு மட்டும் இது இன்று வரை வழங்கப் பெறாமல் இருந்து வருகிறது. இந்த வேறுபாட்டைப் பல முறை எங்கள் சங்கத்தின் மூலம் எடுத்துக் காட்டி நினைப்பூட்டியும், அரசாங்கம் இன்னும் வீட்டு வாடகைப் படி வழங்காமல் இருந்து வருகிறது. ஆகவே எங்கள் விஷயத்திலும் கருணை காட்டி, எங்கள் சங்கத்தின் மூலம் அனுப்பிய தீர்மானங்களின்படி, நியாயமாக எங்களுக்குக் கிடைக்க வேண்டிய வீட்டு வாடகைப்படியை உடனடியாக வழங்கவேண்டுமென்று இச் சங்கம் வேண்டிக் கொள்கிறது.

சென்னை டி. எஸ். ராஜகோபாலன்,
ஆசிரியர் சங்கம் வி. எஸ். சரவணன்,
18—7—57 செயலாளர்கள்

[ஜூலை 26-ம் தேதி நமது கல்வி மந்திரி ஆசிரியர்களுக்கு வீட்டு வாடகை அலவன்ஸ் தரப்படும் என்று மேல் சபையில் உறுதியளித்திருக்கிறார். —ஆசிரியர்.]

## ஏன் இந்த வித்தியாசம்?

மத்திய அரசாங்கத்தின்கீழ் இயங்கி வரும் இந்திய ரயில்வேக்களில் வடக்கு தெற்கு என்ற பாரபட்சம் காட்டப்படுகிறது. இது வரையில் வட இந்திய ரயில்வேக்களிலுள்ள வாடிபந்தர் (பம்பாய்), ஷாலிமார் (கல்கத்தா) போன்ற கூட்ஸ் டெப்போக்களைப் போன்று, தென்னிந்திய ரயில்வேயிலுள்ள சால்ட் கொட்டார்ஸ் (சென்னை) கூட்ஸ் டெப்போவும் நடத்தப்பட்டு வந்தது.

தென்னிந்தியாவிலேயே மிகப்பெரிய கூட்ஸ் டெப்போவாக சால்ட் கொட்டார்ஸ் இது காறும் இயங்கி வந்தது. இங்குள்ள தொழிலாளர்களும் சிறப்பாகப் பணியாற்றி வந்தனர். ஆனால் இப்பொழுது இங்குள்ள அதிகாரிக்குக் கொடுக்கப்பட்டிருந்த பல அதிகாரங்கள் குறைக்கப்பட்டு விட்டன. எதற்கெடுத்தாலும் மேல் அதிகாரிகளைப் பார்க்க வேண்டுமென்ற முறை புகுத்தப்பட்டுவிள் காலதாமதமும், அதனால் பொருள் நஷ்டமும் ஏற்பட்டுப் பொதுமக்களும், தொழிலாளர்களும் பல இன்னல்களுக்கு உள்ளாக்கப்பட்டுள்ளனர்.

இது இப்படி இருக்கையில் எரிகின்ற நெருப்பில் எண்ணெய் ஊற்றியதுபோல, இங்குள்ள தேர்ச்சியும், அனுபவமும் பெற்ற குமாஸ்தாக்களை மூலைக்கு மூலை மாற்றும் செய்ய உத்தரவு கொடுத்துள்ளனர். இதனால் பல குமாஸ்தாக்கள் பள்ளி, வீடு வசதி அற்றுப் பல அல்லல்களுக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர்.

வட இந்திய கூட்ஸ் டெப்போக்களைப்போல் ஏன் தென்னிந்திய கூட்ஸ்ஷெட் நடத்தப்படக் கூடாது? ஏன் இந்த வித்தியாசம்? இதை ரயில்வே போர்டார் கவனிப்பார்களா?

சென்னை
30-7-57 ஒரு பாதிக்கப்பட்ட குமாஸ்தா

## மாதர்குல திலகம்

கல்கியில் வெளிவரும் மாதர்குல திலகம் கட்டுரைகளைத் தவறாமல் படித்து வரும் ஆயிரக்கணக்கான வாசகர்களில் நானும் ஒருத்தி. சுருங்கக் கூறி விளங்க வைக்கும் வகையில் அக் கட்டுரைகள் அமைந்து வருவதற்கு என் பாராட்டுக்கள்! ஆனால், கட்டுரைகளில் பிழைகள் ஏற்பட்டு விடும்போது அவற்றைத் தங்கள் பார்வைக்குக் கொண்டு வர வேண்டியது என் கடமை என்று நினைக்கிறேன். உதாரணமாக ஜூலை 14ந் தேதி இதழில் ஸ்ரீமதி மோனு ஹென்ஸ்மன் அவர்களைப் பற்றி வெளியான வாழ்க்கைக் குறிப்பில் இப்போது அவர் சென்னை எதிராஜ் பெண்கள் கல்லூரியின் 'பிரின்ஸ்பல்' பதவி வகித்து வருகிறார் என்ற விவரம் விட்டுப் போனதைத் தங்களுடைய கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

ராயப்பேட்டை, சென்னை
28-7-57 எஸ். அகல்யா

[கட்டுரையில் ஏற்பட்டு விட்ட குறைபாட்டை, எடுத்துக் காட்டியதற்கு நன்றி. தங்கள் கடிதத்தைப் பிரசுரித்து, அதன் மூலம் திருமதி மோனு ஹென்ஸ்மன் எதிராஜ் கல்லூரித் தலைவர் பதவி வகித்து வருகிறார் என்ற விவரத்தை மகிழ்ச்சியுடன் அறிவித்துக் கொள்கிறோம். ஆசிரியர்]

## "மதுவிலக்கு ஒரு வெற்றி"

'கல்கி' ஜூலை 28-ந் தேதி இதழில் வெளியான "மதுவிலக்கு ஒரு வெற்றி!" என்னும் உபதலையங்கம் உயர்ந்த முறையில் அமைந்துள்ளது. மந்திரி திரு கக்கன் சொன்னது போல் ஆதிதிராவிடர்களின் வீடுகளில் மண் பாண்டங்களுக்குப் பதிலாகப் பித்தளைப் பாத்திரங்கள் தென்படுகின்றன என்பது முற்றிலும் உண்மை. எங்களூரில் ஓர் ஆதிதிராவிடர் (ஏழை விவசாயி) மதுவிலக்குக்குமுன் விவசாயத்தில் வரும் சொற்ப நெல்லையும் வீட்டுக்குக் கொடுக்காமல் கள் குடியிலேயே ஒழித்தார். குடித்து விட்டுக் கண்ட இடத்

தில் புரளுவதும் வாயில் வந்தபடி பேசிக் கொண்டும் திரிந்தார். மதுவிலக்குச் சட்டம் வந்ததிலிருந்து மிகவும் கஷ்டமாக நடந்து கொள்கிறார். திருட்டுச் சாராயமும் அதிக காசு கொடுத்து வாங்க முடியவில்லை. ஆதலால் கள் குடிப்பதையே விட்டுவிட்டார். இப்பொழுது தன் சொற்ப வருமானத்தி லேயே ரூபாய் இரண்டாயிரம் சேர்த்து விட்டார். குடிசை வீட்டை ஓட்டு வீடாக மாற்றி விட்டார்.

மாதிரிமங்கலம்
25—7—57

ஆர். வி. ரமணி

## ஞாபகச் சின்னம்

தஞ்சாவூரை ஜில்லாவாகக் கொண்டது அதிராம் பட்டணம் எனும் ஊர். இவ்வூரை முன்பு 'அதிவீரராம பாண்டிய பட்டணம்' என்று அழைத்து வந்தார்கள். நாளடைவில் அதிராம் பட்டணம் என்று மாறித் தற்பொழுது சுருக்கமாக ''அதிரை'' என்று அழைக்கிறார்கள். இவ்வூரையடுத்துச் சுமார் ஐந்து மைல்களுக்கப்பால கடற்கரை யோரத்தில் ஒரு பெரிய கோபுரம் உண்டு. இது சரித்திரப் பிரசித்தி பெற்றதாகும். இது பழங்கால அரசனை சோழ மன்னனால் கட்டப்பட்டது. பல அடுக்குகளைக் கொண்ட இக்கோபுரத்துக்கு அடியில் அரசனும் அவனது சைனியங்களும் ஆபத்துக் காலங்களில் தங்குவதற்கு ரகசியமான பல இடங்களும் குகைபோன்ற சில கட்டடங்களும் உண்டு. இக்கோபுரத்துக்கும், முப்பத்தேழு மைல்களுக்கப்பாலுள்ள தஞ்சாவூருக்கும் சுரங்கம்கூட உண்டு என்று கூறுகிறார்கள். ஆனால் இச்சுரங்கம் தற்பொழுது எந்நிலையில் உள்ளதோ?

இதுதான் போகட்டுமென்றால் பழங்கால அரசனால் கட்டப்பட்ட இக்கோபுரம் தற்பொழுது மிகவும் மோசமான நிலையில் இருக்கிறது. இப்படி இருந்தும்கூட இதைக் காண்பதற்கு இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் அனேக யாத்திரிகர்கள் வருகிறார்கள். இப்படிப்பட்ட கோபுரம் எந்நிலையில் உள்ளது?

வௌவால்களும் குரங்குகளும் பறவைகளும் தங்கும் கட்டடமாகக் காட்சி யளிக்கிறது.

பழங்காலத் தமிழ் அரசனின் ஞாபகச்சின்னமாக இதைப் புதுப்பித்துக் கண்காட்சிக்குத் தகுந்தவாறு வைப்பது நாம் பழங்காலத்துத் தமிழ் அரசனுக்குச்செய்யும் கைம்மாறன்றோ?

அதிராம் பட்டணம்
22—7—57

அதிரை அப்துல் மஜீது

## சர்க்கார் கவனிக்குமா ?

உயர்நிலைப் பள்ளிகளில் ஆறுவது பாரத்தில் செலக்ஷன் பரீட்சை முறை நடைபெற்று வருகிறது. அதில் தேர்வு அடைந்தவர்களே மார்ச்சு மாதத்தில் நடைபெறும் பரீட்சைக்கு அனுமதிக்கப் படுகிறார்கள். செலக்ஷனில் தேர்வடையாதவர்கள் அடுத்த வருடம் ஜூன் மாதத்தில் பள்ளிகள் திறந்தவுடன்



கமலா நேரு மாதர் சங்கத்தின் முதல் ஆண்டுவிழா நாடகம், நடனம், படத்திறப்பு என்று பல அம்சங்களுடன் ஜூன் 29-ந் தேதி சென்னை மியூஸியம் தியேட்டரில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவில் முதன் மந்திரி காமராஜ் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு அவர்களின் திரு உருவப்படத்தைத் திறந்து வைத்தார். திருமதி மேரி கிளப்வாலா ஜாதவ் திருமதி கமலா நேருவின் திரு உருவப் படத்தைத் திரைநீக்கம் செய்தார். விழாவுக்குச் சென்னை நகரத்துப் பிரமுகர்களும் மாதர்குல திலகங்களும் விஜயம் செய்து சிறப்பித்திருந்தனர். விழா சிறப்பாக நடைபெறுவதற்கு உற்சாகமாகத் தொண்டாற்றிய சங்கத் தலைவி திருமதி ரங்கம்மாள் நரசிம்மாச்சாரி, துணைத் தலைவி திருமதி சுசீலா சந்தோஷம் ஆகியவர்களையும் ஏழைஎளிய மக்களுக்குத் தன்னலம் கருதாது தொண்டாற்றிவரும் கமலா நேரு மாதர் சங்கத்தின் இதர அங்கத்தினர்களையும் மேலே படத்தில் காணலாம்.



தமிழகத்தின் கலைத் தூதுவர்களாக மலாயாவுக்கு விஜயம் செய்திருந்த டி. கே. எஸ். சகோதரர்கள் தமிழகத்தின் கலைக் கொடியை மலாயாவில் தூக்கிப் பறக்கவிட்டு விட்டுத் திரும்பி வருகின்றனர். ஆகஸ்டு எட்டாம் தேதி பினாங்கிலிருந்து புறப்படும் 'சென்னை ராஜ்ய' கப்பலில் தமிழகத்துக்குத் திரும்பி வருகின்றனர். ஆகஸ்ட் 14 அல்லது 15-ந் தேதி சென்னை வந்து சேரும் டி. கே. எஸ். குழுவினரை வெற்றி மாலை சூட்டி வரவேற்கிறோம். மேலே படத்தில் டி. கே. எஸ். சகோதரர்களையும், அவர்கள் குழுவினர்களையும் பினாங்கு அன்ட் பிராவின்ஸ் வெல்லஸ்லி தமிழர் பிரதிநிதித்துவ சபையின் தலைவர் திரு டி. பி. எஸ். கிருஷ்ணசாமி அவர்கள் மலர் மாலை அணிவித்து வரவேற்பதைக் காணலாம்.

---

சேர்வதற்குச் சென்றால், தலைமை ஆசிரியர்கள் சேர்க்க முடியாது என்றும் வேண்டுமென்றால் அக்டோபர் பரீட்சை எழுதுங்கள் என்றும் சொல்லுகிறார்கள்.

அக்டோபர் பரீட்சை என்பது சென்ற பரீட்சையில் குறைந்த மார்க்குகளில் தவறியவர்கள் எழுதிப் பயன் அடைவதற்கென ஏற்பட்டது. அதைத் தவிர ஒரு வருடம் பள்ளியில் படித்து செலக்ஷனில் எல்லாப் பாடங்களிலும் குறைந்த மார்க்குகள் பெற்று அதில் தவறும் மாணவ, மாணவிகள் குறுகிய காலத்தில் நடைபெறும் அக்டோபர் பரீட்சையில் எவ்விதம் வெற்றி அடைவார்கள்? ஆகவே செலக்ஷனில் தவறியவர்களை யாவது பள்ளிகளில் சேர்த்துக் கொள்ளச் சர்க்கார் உத்தரவு பிறப்பிக்க வேண்டும்.

மாதிரிமங்கலம்
19—7—57

ஆர். முத்துகிருஷ்ணன்

## தீயணைக்கும் படை வசதி

திண்டிவனம் தாலூக்காவில் சேர்ந்த ஓமந்தூருக்கும், அதில் அடங்கிய பல நூற்றுக் கணக்கான கிராமங்களுக்கும், ஏதேனும் தீவிபத்து நடந்தால் அருகில் தீயணைக்கும் படை வசதி கிடையாது. விழுப்புரத்தில் இருந்துதான் வரவேண்டும். அதிக தூரம் இருப்பதால் அங்கு இருந்து வந்தும் பயனில்லாமல் போய் விடுகிறது. ஆகையால் இக்குறையை நம் அரசாங்கம் கவனிக்குமா?

ஓமந்தூர்
13—6—57

டி. அனந்தபத்மநாபன்

## நெசவாளர் கஷ்டம்

பரமக்குடியிலும் — எமனேஸ்வரத்திலும் சுமார் ஐயாயிரம் கைத்தறி நெசவாளர்களும், இவர்களைச் சார்ந்த பதினாயிரம் மக்களும் நெசவுத் தொழிலையே நம்பி வாழ்கிறார்கள். வேறு தொழில் தெரியாது! முப்பத்தாறு மாஸ்டர் வீவரின் கீழ் நாலாயிரம் நெசவாளர்களும், மூன்று நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களில் ஆயிரம் நெசவாளர்களும் தறி நெய்து வருகிறார்கள்.

கடந்த ஐந்து மாத காலமாகத் தேங்க ஆரம்பித்த துணித் தேக்கம் இன்று வரையிலும் தீர்ந்தபாடில்லை. சொஸைட்டியிலும், மாஸ்டர் வீவர்களிடமும் சுமார் பத்து லட்ச ரூபாய்க்குக் கைத்தறி ஜவுளித் தேக்கம் அடைந்துள்ளது. இதனால், மாஸ்டர் வீவரின் கீழ் தறி நெய்யும் நெசவாளர்களுக்குத் தறி ஒன்றுக்கு ரூபாய் பதினைந்து கொடுக்கப்பட்டு வந்தது. அந்தக் கூலி ரூபாய் பன்னிரண்டாகிப் பிறகு இப்பொழுது பத்தாகக் குறைக்கப்பட்டு விட்டது. மேலும், தறி அறுத்ததும் மறு தறி கிடைப்பதில்லை. இரண்டு மூன்று நாட்கள் கழித்து மறு தறி கொடுக்கப்படுகிறது. பெரும்பாலானோர் "வாய்தா" முறையில் தறி நடத்துகிறார்கள். சிலர், தறித் தொழிலையே நிறுத்தி விட்டார்கள்.

பெரும்பாலான மாஸ்டர் வீவர்கள் ஆதாயமின்றி, ஒன்றுக்குப் பாதி விலையில், தேங்கியுள்ள ஜவுளிகளை விற்பனை செய்து, நெசவாளர்களுக்கு ஓரளவு வேலை கொடுத்து வரு

கிறார்கள். இந்நிலையில் மத்தியதர வர்க்கத்தினரும் பாதிக்கப்படுவதால், அவர்களின் கீழ் உள்ள நெசவாளர்கள் சொல்ல முடியாத கஷ்ட நஷ்டங்களுக்குள்ளாகி, ஊரை விட்டே வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள். எஞ்சியுள்ளவர்கள் அரைப் பட்டினியுடன் நாள் கடத்துகின்றனர்.

சர்க்கார் தலையிட்டு நெசவாளர்களுக்குத் தொடர்ந்து வேலை கிடைத்துவர ஆவன செய்ய வேண்டுகிறேன்.

பரமக்குடி
12-7-57 தாஸ். கு. ராகவன்

## பென்ஷனர்களின் கோரிக்கை

அரசாங்கமும், ஸ்தல ஸ்தாபனங்களும், மாஜி ஊழியர்களிடத்தில் (பென்ஷனர்களிடத்தில்) காட்டும் மனோபாவம் இரக்கமற்ற தன்மையைத்தான் வெளிப்படுத்துகிறது.

இப்போது சர்க்கார் கொடுத்து வரும் பென்ஷனே குறைவு. இக்காலத்தில் புரட்சிகரமான முறையில் சாமான்களின் விலைகள் ஒன்றுக்கு எட்டு மடங்காக உயர்ந்திருக்கின்றன. முற்காலத்தில் உணவுப் பொருள்களெல்லாம் மலிவாக விற்றன. பென்ஷன்தார்களும் வயதுக் காலத்தில் திருப்தியுடன் வாழ்ந்து வந்தார்கள்.

இக்காலத்தில் பென்ஷன்தார்கள் தாங்கள் பெறும் சொற்ப பென்ஷனைக் கொண்டு சமாளிக்க முடியாமல் கஷ்டப்படுகிறார்கள். அவர்களுடைய குழந்தைகளின் படிப்புச் செலவுகளும், பெண்களின் கலியாணச் செலவுகளும் அவர்களை ஒடுக்கி விடுகின்றன.

பென்ஷன்தாரகள் கேட்பதுதான் என்ன? பஞ்சப்படியைக் கொஞ்சம் உயர்த்த வேண்டுமென்பதுதான். இப்போது கொடுக்கப்படும் ஆறு ரூபாய் பஞ்சப்படி, விலைவாசிகள் எட்டு மடங்காக உயர்ந்திருக்கும்போது பற்றாக் குறையாக இருக்கிறதென்று யாரும் ஒப்புக் கொள்வார்கள். பசிக்கிற மனிதனுக்கு ஒரு காய்ந்த ரொட்டித் துண்டை எறிவதுபோல் இருக்கிறது என்று கூறினாலும் பொருந்தும். உதாரணமாக இப்போது ஒரு என். ஜி. ஓ. வின் மாதச் சம்பளம் 30 ரூபாயென்றால், அவனுக்குக் கிடைக்கும் பஞ்சப்படி முப்பத்தோரு ரூபாய். ஆனால் முப்பது ரூபாய் பென்ஷன் பெறும் ஒரு என். ஜி. ஓ. வுக்கு ஆறு ரூபாய்தான் பஞ்சப்படி கொடுக்கப்படுகிறது. உத்தியோக காலத்தில் பெற்று வந்த பஞ்சப்படி ரூபாய் முப்பதில் பாதியாவது அதாவது பதினைந்து ரூபாயாவது கொடுக்க வேண்டுமென்று கோருகிறோம்.

சென்னை - 21 என். சுப்பிரமணிய சர்மா
1—7—57 கூட்டுக் காரியதரிசி.
சென்னை நகராண்மைக் கழகம் ஆசிரியர்,
பென்ஷனர்கள் சங்கம்.

## நடப்பது ஜனநாயகமா?

சென்ற தேர்தலின்போது தேர்தல் செலவுக்காகப் பெரும் பணக்காரர்கள் பண உதவி செய்தார்கள். தொழிலதிபர்கள் பணம் கொடுத்தார்கள். பஸ் முதலாளிகள் பணம் கொடுத்தார்கள். அதன் பலன் இப்பொழுது ஏழை எளிய மக்கள் கஷ்டப்படும் நிலையில் வந்து விட்டது. தங்கள் தேர்தலுக்குப் பண உதவி செய்த பஸ் முதலாளிகளுக்கு உதவ வேண்டும் என்பதற்காக ரயிலையே நிறுத்தி பஸ் முதலாளிகளுக்கு உதவி செய்திருக்கிறார்கள். திருச்செந்தூரிலிருந்து திருநெல்வேலிக்குச் சென்று கொண்டிருந்த ரயில்களில் ஒன்றை நிறுத்தி விட்டார்கள். அத்துடன் இல்லாமல் ஓடுகின்ற ரயிலின் ஓட்ட நேரத்தையும் அதிகப்படுத்தி விட்டார்கள். திருநெல்வேலிக்கும் திருச்செந்தூருக்கும் உள்ள தூரம் முப்பத்தெட்டு மைல்தான். இந்த முப்பத்தெட்டு மைல்களைக் கடக்க நமது ஜனநாயக சர்க்காரின் ரயில்களுக்கு நாலு மணி நேரமாகிறது. தனிப்பட்ட பஸ் முதலாளிகளின் நிர்வாகத்தில் உள்ள பஸ்ஸோ ஒன்றரை மணி நேரத்திலேயே கடந்து விடுகிறது.

இதன் நோக்கமென்ன? பஸ் முதலாளிகளுக்கு உதவத்தானே? ஒவ்வொரு காரியத்திலும் இந்த மாதிரிதான் நிகழ்ந்து வருகிறது. இது நீடித்துக் கொண்டே போனால் முடிவு என்ன ஆகுமோ? ஜனநாயகம் என்ற பெயரில் பணநாயகம்தான் ஆட்சி புரியும்.

இப்பொழுதுள்ள சர்க்கார் உண்மையாகவே மக்கள் நலனில் அக்கறை கொண்ட, பணக்காரர்களுக்கு அடிமையாகாத சர்க்கார் என்பதை நிரூபிக்க வேண்டுமானால் இந்தக் காரியத்தை உடனடியாகச் செய்ய வேண்டும். திருநெல்வேலிக்கும் திருச்செந்தூருக்கும் முன் போலவே அதிக ரயில்களைவிட வேண்டும். அது ஓடுகின்ற நேரத்தையும் இரண்டு மணியாகச் செய்ய வேண்டும்.

அம்பலசேரி
15-7-57 மு. மா. முத்தையா பிள்ளை




'குழந்தைகளாம் குழந்தைகள், கோட்டான்கள்' என்று எரிந்து விழுந்தார் நண்பர். 'வீடு வீடாவதற்கு இன்னும் ஒரு மாசம் ஆகும்போல் இருக்கிறது' என்று கையை விரித்தார்.

ஆம்! வீடு சிறிது அலங்கோலமாகத்தான் இருந்தது. நாற்காலிகள் தாறுமாறாகக் கிடந்தன. சோபாவின் உறை கிழிந்து தொங்கியது. இரத்தின கம்பளம் அலைஅலையாய்க் கண்டபடி சுருங்கி மடங்கி, கொந்தளித்த கடல்போல் காட்சி அளித்தது. எங்கு பார்த்தாலும் கண்ணாடித் துண்டுகள், காகிதக் கிழிசல்கள், ஒடிந்த ஈர்க்குச்சிகள், குப்பை. வட்டமேசையின்மேல் மூன்று தென்னங் குரும்பைகள். மேசையோ அடிபட்ட நாய்போல் ஒரு காலைத் தூக்கிக் கொண்டு நின்றது. அறையின் நடுவில் இரண்டு 'குரோடன்' சட்டிகள் உடைந்து கிடந்தன. அவற்றில் இருந்த அலங்காரச் செடிகள் வாடி வதங்கிச் சாகும் தறுவாயில் இருந்தன. சுவரெங்கும், கரிக்கோட்டினால் மனம் போனபடி வரையப் பெற்ற குதிரைகள்.

வீடு வீடாவதற்கு ஒரு மாசமா, ஒரு வருஷங்கூட ஆகலாம். ஆனால், குழந்தைகள் கோட்டான்களா? அவை செய்கின்ற விஷமத்தில் எல்லையற்ற இன்பத்தைக் கண்டு, அதையே வீடாகக் கருதிப் பரவசம் அடையும் பக்குவம் பெற்றவர்கள் இல்லையா? இருக்கிறார்கள். இவர்கள் குரலும், நம்முடைய பாக்கிய வசத்தால், தமிழ் இலக்கியத்தில் கேட்கிறது.

இவர்களில் ஒருவரான குலசேகராழ்வார் பேசுகிறார், கேட்போம்.

தேவகியின் மகனாகப் பிறந்த கண்ணன், நந்த கோகுலத்தில், யசோதையின் மகனாக வளர்கிறான். குழந்தை வளர்கின்ற காட்சியின் அழகை, ஒவ்வொரு நாளும், கணந்தோறும், அவன் ஈடுபடுகின்ற விளையாட்டை, செய்கின்ற குறும்பை, தான் காணவில்லையே என்று தேவகி துடிக்கிறாள். 'அளவில்லாத பிள்ளைமை இன்பத்தை இழந்த பாவியாகி விட்டேனே' என்று உருகுகிறாள். சின்னஞ் சிறுவனாகிய கண்ணன் எப்படி எப்படி யெல்லாம் விளையாடுவான் என்று நினைக்கிறாள். அவள் மனத்தில் ஒரு காட்சி வடிவாகிறது.

ஒரு நாள், கண்ணன், யசோதைக்குத் தெரியாமல் வீட்டுக்குள்ளே போகிறான். ஒரு மூலையில் வெண்ணெய்ப் பானை இருக்கிறது. மெல்ல அதைப் பிடித்துக் கொண்டு எழுந்து நிற்கிறான். பானைக்குள்ளே இருக்கும் வெண்ணெய் கைக்கு எட்டவில்லை. எட்டி எட்டித் தொடப் பார்க்கிறான். முடியவில்லை. இதற்குள், இவன் படுத்திய பாட்டில், பானை கீழே சாய்ந்து விடுகிறது. வெண்ணெயும், மோரும் எங்கும் சிதறி ஓடுகின்றன. குழந்தை கண்ணன் கையைக் கொட்டிச் சிரிக்கிறான். அடேயப்பா, எவ்வளவு வெண்ணெய், எவ்வளவு மோர்! அந்த வெள்ளத்தில் நடுவிலே சப்பணம்போட்டு உட்கார்ந்து கொள்கிறான். குனிந்து, கை முழுவதையும் நீட்டி, வெண்ணெயை அளைகிறான். தொட்டுத் தொட்டு எடுத்து, வாயிலே திணித்துக் கொள்ளுகிறான். உடம்பெல்லாம் வெண்ணெய், முகமெல்லாம் 'வெண்ணெய் அளைந்த குணுங்கு.' சின்னஞ் சிறு தாமரை விரல்களில் வெண்ணெய். சுற்றிலும், வெண்ணெயும், தரைப் புழுதியும் கலந்த அலங்கோலம்.

யசோதை உள்ளே வருகிறாள். குழந்தை அவளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு, கையை நீட்டுகிறான். எவ்வளவு பிஞ்சு விரல்கள்! அவை குவியும் போது, தாமரை மொட்டுப் போல்

அல்லவா இருக்கிறது! கையைத் தொட்டு முத்தமிட வேண்டும்போல் தோன்றுகிறது யசோதைக்கு.

**முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டுண்ணும்**
**முகிழ் இளம் சிறு தாமரைக் கை**

இதைப் பார்த்தால், தாய்க்கு வேறென்ன தோன்றும்?

ஆனாலும் என்ன விஷமம்! பானையையே கீழே சாய்த்து விட்டானே! இப்படியே விட்டு விட்டால், முடிவேது? குறும்பு வளர்ந்துகொண்டே போகும். இவனைக் கண்டிக்க வேண்டியதுதான். தயிர் கடையும் கயிறு அதோ இருக்கிறது. யசோதை அதை எடுத்து, அதனால் சிறுவனை அடிப்பதற்கு ஓங்குகிறாள்:

'இனிமேல் இப்படி விஷமம் செய்ய மாட்டாயே?'

கண்ணன் சிரிக்கிறான். வெண்தயிர் தோய்ந்த சிவந்த வாய் மலர்கிறது. முகத்திலே குறும்பும், பரிகாசமும்,



என்னையும் அடித்து விடுவாயோ?' என்று கேட்பதுபோல் தாயைப் பார்க்கிறான். 'ஏது, எனக்கு நம்பிக்கை இல்லை. வெறும் மிரட்டல்' என்று எண்ணுகிறவன் போலத் தலையை ஆட்டி நகைக்கிறான். அப்போது, அவன் முகத்திலிருந்து கொள்ளையாகப் பொங்கும் அழகிலே, தாய் மயங்கி நிற்கிறாள். அவள் கையிலே உள்ள உயிரற்ற கயிறும், அந்த அழகிலே எழில் பெற்று விடுகிறது.

**எழில்கொள் தாம்பு கொண்டு அடிப்பதற்கு**
**என்கு நிலையும் வெண்தயிர் தோய்ந்த**
**செவ்வாயும்**

[எழில் கொள் - அழகு பெறும்; என்கு நிலை - பரிகாசம் செய்கின்ற நிலை.]

மெல்லத் தன்னைச் சமாளித்துக் கொண்டு, சிறுவனைக் கயிற்றால் ஒரு தட்டுத் தட்டுகிறாள் யசோதை. குழந்தையின் முகம் உடனே மாயமாய் மாறுகிறது. அங்கே அழுகை ஊற்றுச் சுரக்கிறது. அதோடு, மலங்க மலங்க விழிக்கும் மலர்க் கண்களில் அச்சம் படர்கிறது. கண்களை உயர்த்தி, பயத்தோடு தாயை நோக்குகிறான் கண்ணன். இதோ அழுகை வந்து விட்டது. சின்னஞ் சிறிய மணிவாய் நெளிகிறது. இதழ் துடிக்கிறது. அழுகை வந்தே விட்டது. வெண்ணெய் படிந்த சிறு கைகளைத் தூக்கி, 'அடிக்காதே, அம்மா' என்று கெஞ்சுகின்ற நிலையில், அவற்றை விரிக்கிறான், கூப்புகிறான். 'இனிமேல் இல்லை, அம்மா! இனிமேல் இப்படிச் செய்யவில்லை' என்று மழலைப் பேச்சு, குழறித் தொழுகிறது.

அவ்வளவுதான்; கயிற்றை வீசி எறிந்தாள் தாய். குழந்தையை வாரி எடுத்தாள். பதைக்கின்ற நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள். பேரின்பத்தின் எல்லையையே தொட்டு விட்டாள்.

**அழுகையும் அஞ்சிநோக்கும் அந்நோக்கும்**
**அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும்**
**தொழுகையும் இவைகண்ட அசோதை**
**தொல்லை இன்பத்து இறுதி கண்டாளே.**

[அணிகொள் - அழகு பெறுகின்ற. இங்கே, அழுகையினால் புதிய அழகு பெறுகிறது சிறு வாய். தொல்லை இன்பத்து - முடிவாகிய பேரின்பத்தின். இறுதி - எல்லை.]

'ஐயோ, இந்தப் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லையே' என்று புலம்புகிறாளாம் தேவகி. இதைச் சொல்கிறார் குலசேகராழ்வார். அவரும் நம்மைப் போலவே இங்கே குழந்தைகள் படுத்தும் பாட்டையும், செய்யும் விஷமத்தையும் பார்த்தவர்தான். சொன்னதைக் கேளாமல் ஒவ்வொரு நாளும் புதுப் புதுக் குறும்பில், ஈடுபட்டு, நாம் எரிந்து விழும்படி செய்கின்ற விளையாட்டுப் பிள்ளைகளை அவர் பார்த்திருக்கிறார், கோபித்தும் இருக்கிறார் என்றுதான் தோன்றுகிறது. ஆனாலும், குழந்தைகளைக் குழந்தைகளாகவே பார்த்து, நெஞ்சு கனிந்து, அந்தக் கனிவின் துணைக் கொண்டு, தெய்வமதலையான கண்ணனைக் கண்டும் விடுகிறார்:

**முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டுண்ணும்**
**முகிழ் இளஞ்சிறு தாமரைக்கையும்**
**எழில்கொள் தாம்புகொண்டு அடிப்பதற்கு**
**என்குநிலையும் வெண்தயிர் தோய்ந்த**
**செவ்வாயும்**
**அழுகையும் அஞ்சிநோக்கும் அந்நோக்கும்**
**அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும்,**
**தொழுகையும் இவைகண்ட அசோதை**
**தொல்லை இன்பத்து இறுதி கண்டாளே.**

குலசேகரரும் இந்த இன்பத்தின் இறுதியைக் கண்டார். நண்பரோ, 'குழந்தைகளா, கோட்டான்கள்' என்று கூச்ச விடுகிறார். இரவிலே நிற்கும் நமக்குக் கோட்டான்தானே தென்படும்?

# குன்றாத கவர்ச்சி கொண்ட புடவை!

**பின்னியின்** ஜார்ஜெட் புடவைகளை வீட்டிலேயே சுத்தம் செய்யலாம். உடல் கட்டை தழுவி நிற்கும் அதன் எழிலும், வசீகரிக்கும் வர்ணங்களும் ஒருபொழுதும் குன்றாது.

பின்னியின் ஜார்ஜெட் புடவையை அணிவதால், உங்கள் எழிலோங்குகிறது. உறுதியான இழை கொண்ட இந்த புடவை நெடுங்காலம் நீடித்து உழைக்கிறது.

பின்னியின் ஜார்ஜெட் புடவையை எத்தனை தடவை வீட்டிலே சுத்தம் செய்தாலும், அதன் வசீகரிக்கும் வர்ணங்கள் மங்கவோ அழியவோ செய்யாது. அதன் புத்தப்புதிய தன்மையும் ஒரு பொழுதும் மாறுவதில்லை.

அழியா அழகிற்கு பின்னியின் ஜார்ஜெட் புடவையைத் தேர்ந்தெடுங்கள்!



எல்லா அசல் பின்னி புடவைகளிலும் இந்த அடையாளம் தங்க நிறத்தில் முத்திரை யிடப்பட்டிருக்கும்

பங்களூர் உல்லன், காட்டன் அண்ட் ஸில்க் மில்ஸ் கோ., லிட்.
ஏஜெண்டுகள், செக்ரடரிஸ் அண்ட் ட்ரஷரேர்ஸ்:
பின்னி அண்ட் கோ. (மெட்ராஸ்) லிட்.

BY. 3120




பிலோ இருதயநாத்

சென்னையிலிருந்து சுமார் எண்பது மைல் தூரத்தில் உள்ள வந்தவாசி என்ற ஊருக்குச் செல்லும் வாய்ப்பு எனக்குச் சமீபத்தில் கிடைத்தது.

அங்கு சுமார் ஐந்நூறு அடி உயரத்தில் தவளகிரி என்ற செங்குத்தானபாறையின்மேல் நூறு அடி சுற்றளவுள்ள இடத்தில் நாலு கோவில்கள் கட்டப்பட்டிருக்கின்றன.

ஒவ்வொரு கோவிலேயும் தனித் தனியாகச் சுற்றிவரச் சுற்றிலும் சிறிய பிராகாரங்கள் உள்ளன.

"வந்தவாசி" என்று பெயர் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் உண்டா என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டபோது கீழ்க்கண்ட விவரங்கள் தெரிய வந்தன.

தவளகிரியை விட்டதும், அங்கிருக்கும் பழைய கோட்டைக்குச் சென்றேன். கோட்டையின் எல்லாப் பாகங்களும் பாழாகி விட்டன. பண்டைக் காலத்திய கோட்டைக் கோவில்களும் சிதிலமாகி விட்டன. அந்தக் கோட்டைக்குள் இரண்டு சுரங்கங்கள் இருக்கின்றன. அந்தச் சுரங்கங்களுக்கும், செஞ்சிக்கும், பண்டைகாலத்தில் பாதை இருந்ததாகக் கூறப்படுகிறது.

வந்தவாசிக் கோட்டை, 1760 - ல் நடந்த "வந்தவாசி யுத்தத்துக்கு, பல நூற்றாண்டுகளுக்கு முன், மகாராஷ்டிரர்களால் கட்டப்பட்டது என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. வந்தவாசியில்முகம்மதியர்களுக்கும், ஆங்கிலேயர்களுக்கும் நடந்த போரின் பல சின்னங்களை இன்றும்காணலாம்!



இந்த ஊரிலுள்ள ஜலகண்டேசுவரர், சத்புத்திரநாயகி கோவிலுக்குச் சென்றபோதுதான் வந்தவாசி என்ற பெயர் ஏன் ஏற்பட்டது என்ற காரணம் தெரிய வந்தது.

சுமார் எழுநூறு ஆண்டுகளுக்கு முன் அரசாண்டிருந்த ஜெயங்கொண்ட பாண்டியன் வயிற்றுவலியின் கொடுமையால் பல்லாண்டுகள் அவஸ்தைப் பட்டார். வைத்தியர்கள் பலரும் கைவிட்டனர். கடைசியாக மன்னன் பல புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துக் கொண்டே அந்த ஊருக்கு வந்தார். அங்கு பாண்டியன் கூடாரமடித்து மனக் கலக்கத்துடன் தூங்கும் போது, "மன்னா! நீ படுத்திருக்கும் இடத்தைத் தோண்டிப் பார். அதில் கிடைக்கும் லிங்கத்தின் மேல் ஒரு தேவாலயம் எழுப்பு. உன் நோய் நீங்கிவிடும்" என்று கனவில் யாரோ கூறியது போல் தோன்றியதாம்.

அங்ஙனமே அந்த இடத்தைத் தோண்ட, அதில் ஒரு லிங்கம் கிடைத்ததாம். உடனே அது கிடைத்த இடத்திலே தேவாலயமும் கட்டி, அங்கேயே சிறிது காலம் வசிக்கலானார்கள். அவர் வந்த இடத்திலே சுகமடைந்து வசித்ததால் 'வந்தவாசி' என்ற பெயர் வழங்கலாயிற்று. "வந்து வசித்தேன், சுகமடைந்தேன்" என்று மன்னன் மகிழ்ந்தார் என்பது கல்வெட்டுக்களிலிருந்து தெரிகிறது.

கன்னோசி அரசர், ராமேசுவரம் போகும் போது, குடும்பத்துடன் 1678-ல் வந்தவாசிக்கு வந்து தங்கினார். அப்போது, அவரது அன்புக்கு அன்பான தாயார் ரத்தினுபாய் என்னும் அம்மையார் அவ்விடத்திலேயே காலமாகி விட்டார். வந்தவாசியில் அவரது ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்ட சமாதி இன்றும் இருக்கிறது.

இவ்விதமாக வந்தவாசி சிறந்த புண்ணிய ஸ்தலம் என்பதுடன், சரித்திரப் புகழ்பெற்ற இடமாகவும் திகழ்கிறது.

# மாலவல்லியின்



## அத்தியாயம் 6

## "மாலவல்லியா?"

வைகைமாலையும் அருந்திகையும் அங்கு வந்த சமயம் சுதமதி பிரக்ஞை இழந்தவளாகத் தரையில் கிடந்தாள். பராந்தகன் பதற்றமடைந்தவனாக நின்று கொண்டிருந்தான். புலிப்பள்ளியார் ஏதோ குற்றம் செய்துவிட்டவர் போல் மிரள மிரள விழித்துக் கொண்டிருந்தார். வைகைமாலையும் அருந்திகையும் அங்கு என்ன நடந்தது என்று தெரியாமலேயே வியப்போடும் பரபரப்போடும் பராந்தகனின் முகத்தைப் பார்த்தனர். புலிப்பள்ளியாரைப் பார்த்ததுமே வைகைமாலையின் முகம் சுருங்கிப் போய் விட்டது.

அந்தச் சமயத்தில் அங்கு நடந்த விவரங்கள் அத்தனையும் வைகைமாலையிடம் சொல்லுவது நல்லதல்ல என்று தோன்றியது. "ஒன்றுமில்லை. தஞ்சை அமைச்சரவர்கள் அவர் இயற்கையாக உள்ள முன்கோபத்தில் ஏதோ சொல்லி விட்டார். அதைக் கேட்டுச் சுதமதி மூர்ச்சையுற்றாள்" என்றான் பராந்தகன்.

"ஒரு அமைச்சராக இருப்பவருக்கு, ஒரு பெண் எதிரில் எத்தகைய வார்த்தைகள் சொல்லலாம் என்று தெரியாமல் போனதுதான் விந்தை!" என்றாள் அருந்திகைப் பிராட்டி.

"தஞ்சை அமைச்சர் எங்களை ஏதோ ஒரு வழியில் பழி தீர்க்க நினைக்கிறார் என்பதை நான் கொஞ்ச நாட்களாக அறிவேன். எங்களைப் போன்ற பெண்களிடம் அவருடைய வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள நினைப்பதுதான் விநோதம்" என்றாள் வைகைமாலை மிகுந்த ஆத்திரத்துடன்.

"இப்பொழுது இதையெல்லாம் பற்றிப் பேசுவதற்குரிய சந்தர்ப்பமல்ல. முதலில் மூர்ச்சையுற்ற சுதமதியைப் போய்க் கவனிக்க வேண்டும்" என்றான் பராந்தகன்.

வைகைமாலை கீழே விழுந்து கிடந்த சுதமதிக்குச் சமீபமாக உட்கார்ந்து அவளுடைய தலையை எடுத்துத் தன் மடி மீது வைத்துக் கொண்டாள். "அக்கா! இப்படி மயக்கம் போட்டு விழும்படியாக அமைச்சர் சொன்ன வார்த்தைதான் என்ன?" என்று கேட்டாள்.

அங்கிருந்து அருந்திகைப் பிராட்டி ஓடோடிச் சென்று ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வந்தாள். அவளுக்குப் பின்னால் அனுபமாவும் நாலு அரண்மனைத் தாதிகளும் ஓடோடி வந்தனர். சில விநாடியில் ஆதித்தனும் அருண்மொழியாரும் அரண்மனை வைத்தியரும் இன்னும் பலரும் அந்த இடத்தில் கூடி விட்டனர்.

ஆதித்தன் என்ன நடந்தது என்று விசாரித்தபோது பராந்தகன் அவன் காதோடு ஏதோ சொன்னான். ஆதித்தன் வியப்பும் திகைப்பும் அடைந்தவனாகச் சிறிது நேரம் நின்று விட்டுத் தன்னை ஒரு விதமாகச் சமாளித்துக் கொண்டான். புலிப்பள்ளியாரைப் பார்த்து, "கொஞ்சம் என்னோடு வாரும்

# தீயாகம்

கி.ரா.கோபாலன்

கள். போவோம்'' என்று அவரை அழைத்துக் கொண்டு சென்றான். புலிப் பள்ளியாரும் வேறு வழியில்லாதவராய் அவனோடு சென்றார்.

அருண்மொழியார் அங்கு ஏதோ நடந்திருப்பதை உணர்ந்து அந்தச் சந்தர்ப்பத்தில் தாம் அங்கு இருப்பது உசிதமாகாதோ என்று எண்ணியவராக மெதுவாக நகர்ந்தார்.

உடனே பராந்தகன், ''நீங்கள் சிறிது நேரம் இங்கே இருப்பது நல்லது'' என்றான். அருண்மொழியாரும் அவன் விருப்பத்துக்கு இணங்கியிருக்கச் சம்மதித்தார். பராந்தகன் அங்கு கூடி இருந்த மற்றவர்களைச் சமிக்ஞை செய்து அனுப்பினான்.

அருந்திறைப் பிராட்டி தான் கொண்டு வந்த தண்ணீரைச் சுதமதியின் முகத்தில் தெளித்து மெதுவாகத் துடைத்தாள். சுதமதி மெதுவாகக் கண் விழித்துச் சுற்றிலும் பார்த்து விட்டுச் சட்டென்று எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

புலிப்பள்ளியார் கூறிய வார்த்தைகளைக் கேட்டுத் தான் அதிர்ச்சியினால் மூர்ச்சையுற்று விழுந்தது எல்லாவற்றையும் உணர்ந்தாள். புலிப்பள்ளியாரின் வார்த்தைகளை மறுபடியும் நினைவுக்குக் கொண்டுவரவே அவளுக்குப் பயங்கரமாக இருந்தது. மறுபடியும் தன் மனத்தைத் திடப்படுத்திக் கொள்வதே அவளுக்கு மிகக் கடுமையானதாகப் பட்டது. தனக்கு அருகில் தன் சகோதரி வைகைமாலை உட்கார்ந்திருப்பதை அவள் உணர்ந்து கொண்டாள். வைகைமாலையின் முகத்தைப் பார்க்கவே அவள் நெஞ்சில் திடம் ஏற்படவில்லை. அவள் கண்களில் கண்ணீர்தான் பொங்கி எழுந்து கொண்டிருந்தது.

சுதமதியின் கண்களிலிருந்து கண்ணீர் ஆ[ா]றாகப் பெருகுவதைக் கண்ட வைகைமாலை திகிலும் குழப்பமும் அடைந்தவளாக, ''அக்கா! ஏன் அழுகிறாய்? என்ன நடந்தது? புலிப்பள்ளியார் என்ன சொன்னார்?'' என்று கேட்டாள்.



புலிப்பள்ளியார் பூதுகனைப் பற்றித் தன்னிடம் சொல்லியதை வைகைமாலையிடம் சொன்னால் என்ன நேருமோ என்று பயந்தவளாக, "நாம் தஞ்சை மன்னரின் விருப்பத்துக்கு இணங்க அவருடைய சபையில் சென்று நாட்டியமாடுவதற்கு மறுத்ததற்காக நம்மைச் சரியானபடி பழி வாங்கப் போவதாகச் சொன்னார். அவருடைய வார்த்தைகளை என்னால் பொறுக்க முடியவில்லை. மயக்கம் போட்டு விழுந்து விட்டேன். வேறொன்றும் இல்லை" என்றாள் சுதமதி.

புலிப்பள்ளியார் தன்னிடம் பூதுகனைப் பற்றிச் சொல்லியவைகளைச் சுதமதி அப்படியே சொல்லி அவளுக்கும் கலக்கத்தை உண்டாக்கி விடுவாளோ என்று பயந்தான் பராந்தகன். சுதமதி வைகைமாலையிடம் வேறு ஏதோ சொல்லி மழுப்பிவிட முயல்வதைப் பராந்தகன் பார்த்து மன ஆறுதல் அடைந்தான். "அந்த மனிதர் மிகவும் முன் கோபக்காரராகவும் பதற்ற சுபாவமுள்ளவராகவும் இருக்கிறார். இப்படிப்பட்ட ஒருசிலர்களுக்குத்தான் அமைச்சர் பதவியும் கிடைக்கிறது. எந்த மன்னனுக்கு அழிவு காலம் நெருங்குகிறதோ, அவனுக்குத்தான் இப்படிப்பட்ட மந்திரிகளெல்லாம் அமைவார்கள். சரி! சுதமதி மிகவும் களைப்போடிருக்கிறாள், அருந்திகை! அவளை மெதுவாக அந்தப்புரத்துக்கு அழைத்துப் போ. அவளிடம் யாரும் எதுவும் கேட்க வேண்டாம். முதலில் அவளுடைய உடல் நிலை சரியாகட்டும்" என்றான். அருந்திகையும் வைகைமாலையும் சுதமதியை அழைத்துக் கொண்டு அந்தப்புரத்துக்குச் சென்றனர்.

எல்லோரும் சென்றபின் பராந்தகனும் அருண்மொழியாருமே தனித்திருந்தனர். பராந்தகன் ஆழ்ந்த சிந்தனையிலுள்ளவன் போல் அமர்ந்திருந்தான். அவன் நிலையை உணர்ந்த அருண்மொழியார் அடக்கமான குரலில், "புலிப்பள்ளியார் இப்படியெல்லாம் ஒரு குழப்பத்தை விளைவிப்பார் என்று நான் நினைக்கவேயில்லை. அவருடைய வீண் மிரட்டல்களுக்கு இந்தப் பெண் இப்படிப் பயப்பட்டிருக்க வேண்டாம்...." என்றார்.



"புலிப்பள்ளியார் கூறிய வார்த்தைகள் வீண் வார்த்தைகளல்ல. எனக்கே சிறிது குழப்பத்தையும் அச்சத்தையும் விளைவிக்கக் கூடியதாய்த்தான் இருந்தன. தஞ்சை மன்னரைச் சேர்ந்தவர்களின் சூழ்ச்சி உச்ச நிலையை அடைந்திருப்பதாகத்தான் தெரிகிறது."

"சாம்ராஜ்ய விஷயங்களில் அவர்கள் சூழ்ச்சி எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் சாதாரண நாட்டியக் கணிகையர்களாகிய பெண்களை ஏன் அவர்கள் விரோதிகளாகக் கருதுகின்றனர்?" என்றார் அருண்மொழியார்.

"சாதாரண நாட்டியக் கணிகையர் என்றால் அவர்களுக்குப் பயமிருக்காது. ஆனால் வைகைமாலை அப்படிப்பட்டவளல்ல. நாட்டில் அவளுக்கு நல்ல புகழ் இருக்கிறது. அதோடு அவள் சோழ பரம்பரையினரையும் கொடும்பாளூராரையும் மிகவும் மதிக்கிறாள்......" என்றான் பராந்தகன்.

"பாவம்! இதற்காக என்ன செய்யமுடியும்? இயற்கையாக அந்தப் பெண்களின் இருதயம் அப்படி இருக்கிறது.." என்று சொன்னார் அருண்மொழியார்.

"உங்களுக்குப் பூதுகரைப் பற்றித் தெரியுமா?" என்று வியப்போடு கேட்டான்.

"ஆகா! தெரியும்!"

"அவர் ஒரு நாஸ்திக வாதி என்றுதானே உங்களுக்குத் தெரியும்?"

"இல்லை. அவர் அரசியல் சூழ்ச்சிக்காரர் என்றும் எனக்குத் தெரியும்!"

"அவரோடு உங்களுக்குப் பழக்கம் ஏதாவது உண்டா?"

"எப்பொழுதோ ஒரு தடவை பார்த்திருக்கிறேன். ஆனால் அவரைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் இப்பொழுது காஞ்சியில் இருப்பதாகக்கூட எனக்குச் செய்தி எட்டியிருக்கிறது" என்றார் அருண்மொழியார்.

"அவர் காஞ்சியில் இருப்பதாக உங்களுக்குச் செய்தி எட்டி இருக்கிறதா? அவர் சௌக்கியமாகத்தானே இருக்கிறார்? அவர் இருக்கும் இடம் உங்களுக்குத் தெரியுமா?" என்றான் பராந்தகன் பதற்றத்துடன்.

"எனக்குப் பத்து தினங்களுக்கு முன் ஒளவாளிகள் மூலம் செய்தி கிடைத்தது. அவர் காஞ்சி யாத்திரீகர்கள்

விடுதியில் தங்கி இருப்பதாகத்தான் எனக்குச் செய்தி கிடைத்தது. அவருடைய நலனுக்கு என்ன கெடுதல் ஏற்பட்டிருக்கப் போகிறது?''

''பூதுகர் மிகவும் சாமர்த்தியசாலியாக இருந்தாலும் பல்லவ சாம்ராஜ்யத்தின் தலைநகராகிய காஞ்சியில் அவருக்கு அபாயம் இருந்து கொண்டுதானே இருக்கும்!'' என்றான் பராந்தகன்.

''அது உண்மை. அவருக்கு ஏதேனும் ஆபத்து ஏற்பட்டு விட்டதா?''

''அது நிச்சயமாகத் தெரியவில்லை. பூதுகர் கலங்கமாலரையரின் கையில் சிக்கி இருப்பதாகவும் இவ்வளவு நாள் அவர் உயிரோடு இருப்பதே துர்லபம் என்றும் புலிப்பள்ளியார் சொன்னார். இந்த வார்த்தையைக் கேட்டுத்தான் மனம் பொறுக்காமல் சுதமதி மூர்ச்சையுற்றுவிழுந்தாள்!''என்றான்பராந்தகன்.

''அப்படியா...? பூதுகருக்கு ஏற்பட்ட ஆபத்தைக் கேட்டதும் சுதமதி மூர்ச்சையுற்றாள் என்றால் அவளுக்கும் அவருக்கும் ஏதேனும் சம்பந்தமுண்டோ...''

''சுதமதிக்கும் பூதுகருக்கும் அவ்வளவு நெருங்கிய சம்பந்தமில்லை. ஆனால் அவர் வைகைமாலையின் காதலர்!''

''அப்படியா! இந்தச் செய்தியை வைகைமாலை கேட்காதவரையில் நல்லதாகப் போய் விட்டது. இந்தச் செய்தியை அவளே கேட்டிருந்தால் இன்னும் எப்படி முடிந்திருக்குமோ?''

''இன்னும் அந்த அபாயம் நீங்கிவிடவில்லை. இந்தச் செய்தியைச் சுதமதி அவளிடம் தெரிவித்து விட்டால் எப்படி முடியுமோ என்ற பயம்தான் எனக்கு!'' என்றான் பராந்தகன்.

''சுதமதி தன் தங்கையிடம் சொல்ல மாட்டாள். இந்தச் செய்தியைக் கேட்டதும் தன் நிலையே இப்படியாகி விட்டதே. வைகைமாலை இதைக் கேட்டதும் எப்படிப் பொறுப்பாள் என்று அவளுக்குத் தெரியாதா? சுதமதி ஒரு போதும் இதை வைகைமாலையிடம் சொல்ல மாட்டாள்.''

''சொல்லாமலிருந்தால் நல்லதுதான். ஆனால் இவ்விஷயத்தில் அப் பெண்களை நாம் சமாதானம் செய்து கொண்டிருப்பதுதான் நல்லது.''

''அது மாத்திரம் போதாது. உண்மையாகவே பூதுகருக்கு ஏதேனும் ஆபத்து ஏற்பட்டுள்ளதா என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டியது மிகவும் அவசியம்'' என்றார் அருண்மொழியார்.

''ஆம்! புலிப்பள்ளியாரிடமிருந்தும் இன்னும் சில உண்மைகளை அறிந்து கொள்ளலாம்...'' என்றான் பராந்தகன்.

''அவரிடமிருந்து ரகசியங்களைக் கிரகிப்பது அவ்வளவு கஷ்டமல்ல. அவருக்கு



தாமோதர் பள்ளத்தாக்கு திட்டத்தின் ஆபீஸர் ஸ்ரீ வி. ஏ. ரங்கராஜன் அவர்களின் புதல்வி சௌ மீனாட்சிக்கும் அரியூர் ஸ்ரீ எஸ். கணேசய்யர் அவர்களின் தம்பி புதல்வர் சிரஞ்சீவி சோமசுந்தரம் பி.ஏ.க்கும் ஜூன் மாதம் முப்பதாம் தேதியன்று திருச்சிராப்பள்ளியில் விவாகம் சிறப்பாக நடந்தேறியது. முகூர்த்தத்துக்கு ராஜாஜி அவர்களிடமிருந்தும் மற்றும் பல பிரமுகர்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

வாழ்க, மீனாட்சி—சோமசுந்தரம்!

அடிக்கடி கோபம் வரும்படியாகப் பேசிக் கொண்டிருந்தால் போதும். எல்லா ரகசியங்களும் வெளியாகி விடும்.''

''சரி, வாருங்கள்! அவரைச் சந்திப்போம்'' என்று அருண்மொழியாரை அழைத்துச் சென்றான் பராந்தகன்.

* * *

சுதமதியை அந்தப்புரத்துக்கு அழைத்துச் சென்ற அருந்திகை சிறிது நேரம் மஞ்சத்தில் படுத்து ஓய்வெடுத்துக் கொள்ளும்படி வேண்டினாள். ஆனால் சுதமதி அதை விரும்பவில்லை. அவள் மிகுந்த மனக் குழப்பம் உடையவள் போலிருந்தாள். அவள் முகத்திலிருந்த வாட்டமும், கண்களிலிருந்த கலக்கமும் அப்படியே இருந்தன. தன் சகோதரியின் நிலையை உணர்ந்த வைகைமாலையின் மனத்திலும் ஏதோ திகிலும் குழப்பமும் ஏற்பட்டன. புலிப்பள்ளி கொண்டாரின் வார்த்தைகள் சாதாரண மிரட்டலல்ல. ஏதோ திடுக்கிடும் வண்ணம்தான் சொல்லியிருக்கிறார் என்று அவள் உணர்ந்து கொண்டாள். சாதாரண மிரட்டல் எதற்குமே சுதமதி அஞ்சியவள் அல்ல. இப்படி அவள் நிலைகுலைந்து மயக்கமுற்று விழுந்ததற்குக் காரணம் ஏதோ பயங்கரமானதாகத்தானிருக்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. அதைச் சுதமதியிடம் கிளறிக் கேட்டு அறிந்து கொள்ள அவள் உள்ளம் துடித்தது. இருப்பினும் அவளை ஏதே

**சந்தர்ப்பம் எதுவாயினும்...**

# ஒரு 'கோடக்' காமிரா அனைவரும் விரும்பும் அன்பளிப்பாகும்!

பிறந்த நாள், கலியாணம், பரீட்சையில் வெற்றி, பண்டிகை நாள்கள் முதலிய எந்த சந்தர்ப்பத்திலும் 'கோடக்' காமிரா அனைவரும் விரும்பும் ஒரு அன்பளிப்பாகும்! கோடக் கம்பெனியார் நேர்த்தியான காமிராக்களின் பலதரப்பட்ட இனுசுகளை வழங்குகிறார்கள். அவைகளில் ஒன்று நீங்கள் கொடுக்க விரும்புபவருக்கு ஏற்றதாயிருக்கும்.

உங்களுக்குத் தேர்ந்தெடுக்க பாக்ஸ் காமிராக்கள், ரிப்னெக்ஸ் காமிராக்கள், போல்டிங் காமிராக்கள், மினியேச்சர் காமிராக்கள், மூவி காமிராக்கள் முதலிய பல இனுசுகள் உள்ளன. இவைகளில் சிலவை கொண்டு குழந்தைகள்கூட எளிதில் படம் எடுக்கலாம். இங்கு ஒரு சிலவை மட்டுமே காண்பிக்கப்பட்டுள்ளன. எந்த கோடக் வியாபாரியிடமும் இன்னும் எத்தனையோ இனுசுகளைக் காணலாம். அவைகளை இன்றே காணுங்கள்!



**'ப்ரௌனி' மூவி 8 மில்லி மீட்டர் காமிரா**

குடும்பத்தினரை மகிழவைக்கும் இந்த 'ப்ரௌனி' மூவி 8 மில்லி மீட்டர் காமிராவின் விலை ரூ. 295/-



**கோடக் 'ரெட்டினெட்' காமிரா**

இந்த மேம்பட்ட மினியேச்சர் காமிரா கொண்டு படம் எடுத்து மகிழுங்கள். இதற்கு f/3.5 லென்ஸ் மற்றும் 1/500 விநாடி வரை ஷட்டர் ஸ்பீடுமுள்ளது.

விலை ரூ. 270/-

பிளாஷ்ஹோல்டர்... ரூ. 60/8

விலைகள்
விற்பனைவரி அடக்கமில்லை

கோடக் லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது. கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது) பம்பாய் – கல்கத்தா – டில்லி – மதராஸ்

**நல்ல தெளிவான படங்கள் எடுக்க 'கோடக்'**



பிலிமையே எப்பொழுதும் உபயோகியுங்கள்!

னும் வற்புறுத்திக் கேட்டால் அவன் மறுபடியும் மயக்கமுற்று விழுந்து விடுவானோ என்று பயந்தாள். இவ்விஷயத்தைச் சுதமதியைக் கேட்டுத் தெரிந்து கொள்வதைவிட அருந்திகை மூலம் பராந்தகனைக்கேட்டுத் தெரிந்துகொண்டு விடலாம் என்று அவள் எண்ணினாள். அவள் மெதுவாக அருந்திகையைத் தனிமையில் அழைத்துக் கொண்டு போய், "அக்காவுக்கு ஏக்கம் வரும்படி புலிப்பள்ளியார் என்னதான் சொல்லியிருப்பார்?" என்று கேட்டாள்.

"என்ன சொல்லி இருப்பார்? அவர் சொல்லியதைத்தான் அவள் சொன்னாளே? 'எங்கள் அரச சபையில் நீங்கள் நாட்டியமாட மறுத்தால் உங்களைச் சிரசாக்கினை செய்து விடுகிறேன்' என்று சொல்லியிருப்பார். இந்த வெறும் மிரட்டலுக்குச் சுதமதி இப்படிப் பயப்பட்டிருக்க வேண்டாம்" என்றாள் அருந்திகைப் பிராட்டி.

"புலிப்பள்ளியார் அப்படி மிரட்டியிருக்க மாட்டார். அதைப் போன்ற மிரட்டல்களையெல்லாம் நாங்கள் நிறையக் கேட்டிருக்கிறோம். இதற்கெல்லாம் அவள் பயப்பட மாட்டாள். அவர் வேறு ஏதோ சொல்லியிருக்கிறார். நிச்சயம் அது அவள் மனத்தைக் கலக்கக் கூடிய விஷயமாகத்தான் இருக்க வேண்டும்" என்றாள் வைகைமாலை.

"அப்படியா? அவர் வேறு என்னதான் சொல்லி இருப்பார் என்று நீ நினைக்கிறாய்?"

"அதுதான் தெரியவில்லை. அதை அவளிடம் கிளறிக் கேட்கவும் அச்சமாக இருக்கிறது. புலிப்பள்ளியார் என்ன சொன்னார் என்று இளைய மன்னருக்குத் தெரியுமல்லவா? நீங்கள்தான் இதை அவரிடம் மெதுவாகக் கேட்டுத் தெரிந்து கொண்டு வந்து என்னிடம் சொல்ல வேண்டும்" என்றாள் வைகைமாலை.

"அவர் என்னிடம் சொல்ல மாட்டார். ஒரு வேளை நானும் அவ்விஷயத்தைக் கேட்டு மயக்கமுற்று விழுந்து விடுவேனோ என்று பயப்படுவார்" என்றாள் அருந்திகை சிரித்துக் கொண்டே.

"'நான் மயக்கமுற்று விழவில்லை. என்னிடம் சொல்லுங்கள்' என்று சொன்னால் அவர் உங்களிடம் சொல்லி விடுவார்" என்றாள் வைகைமாலை.

"சரி! நான் கேட்டுப் பார்க்கிறேன். தந்தை மன்னரைச் சேர்ந்தவர்கள் செய்யும் சூழ்ச்சிகளெல்லாம் எப்பொழுதும் விநோதமாகவும் நினைக்கக் கூடாததாகவும்தான் இருக்கும். அதிலும் புலிப்பள்ளியாரும் கலங்கமாலரையரும் செய்யும் காரியங்கள் மிகவிநோதமாகத்தான் இருக்கும். கலங்கமாலரையர் ஒரு துறவி போல் வேடம் போட்டுக் கொண்டு திரிகிறார். புலிப்பள்ளியாரோ துறவுக் கோலம் பூண்ட ஒரு பெண்ணைத் தம் மகனுக்கு மணம் முடித்து வைக்கப் பார்க்கிறார். என்ன விந்தை!" என்றாள், அருந்திகை பெருமூச்சு விட்டபடியே.

"இவர் தம் மகனுக்குத் துறவுக் கோலம் பூண்ட பெண்ணை மணம் முடித்து வைக்கப் பார்க்கிறாரா? அந்தப் பெண் யார்?" என்றாள் வைகைமாலை.

"அவள் ஒரு புத்தபிக்ஷுணி. நந்திபுர நகரத்து இடங்காக்கப் பிறந்தாரின் மகள். அவள் பெயர் திருபுவனி. அவள் அழகாக இருக்கிறாள். அதோடு மிகவும் புத்திசாலியாகவும் தெரிகிறது. ஏன் தான் அவளுக்கு இந்த யௌவன வயதில் துறவறத்தில் பற்றுதல் ஏற்பட்டதோ?"

"அப்படியா? அவள் இப்பொழுது எங்கே இருக்கிறாள்?"

"இடங்காக்கப் பிறந்தாரின் மாளிகையில்தான் இருக்கிறாள்."

"குடும்பத்திலிருக்கும் பெண்ணுக்கு எப்படித் துறவு வேஷத்தில் பற்றுதல் ஏற்பட்டது?"

''அவள் குடும்பத்திலிருந்தவள் இல்லை. இப்பொழுதுதான் இடங்காக்கப் பிறந்தாரின் மாளிகையில் இருக்கிறாள். அவள் சிறு குழந்தையாக இருக்கும்பொழுதே கள்வர்கள் அவளைத் தூக்கிக் கொண்டு போய் விட்டார்கள். அவள் புத்தப் பள்ளியில் சேர்ந்து புத்த பிக்ஷுணியாகி விட்டாள். இப்பொழுதுதான் அவள் அகப்பட்டாள். நெடு நாட்களுக்குப் பிறகு அகப்பட்ட தம் மகளைத் துறவறக் கோலத்துடனேயே தம் மாளிகையில் சிறைப்பிடித்து வைத்திருப்பது போல் வைத்திருக்கிறார் இடங் காக்கப் பிறந்தார். அதோடு மட்டுமல்ல; துறவுக் கோலத்திலுள்ள அவளைக் கல்யாணம் செய்து கொடுக்கவும் துணிந்துவிட்டார். புலிப்பள்ளியாரும் தம் மகன் கோளாந்தகனுக்கு அவளை மனைவியாக்கி வைக்கத் தீர்மானித்து விட்டார். இது விந்தையாக இல்லையா....?''

''விந்தைதான். நெடு நாட்களுக்குப் பிறகு அந்தப் பெண்ணை எப்படிக் கண்டு பிடித்தார்கள்? அவள் எங்கே இருந்தாள்..?'' என்றாள் வைகைமாலை.



''அவள் உங்கள் ஊரில் — காவிரிப்பூம் பட்டினத்துப் புத்த சேதியத்திலிருந்ததாகச் சொல்லிக் கொள்கிறார்கள்...''

''காவிரிப்பூம் பட்டினத்துப் புத்த சேதியத்திலா.,..?'' என்று சொல்லித் திகைப்படைந்து நின்றாள் வைகைமாலை.

''ஆம்! இதைக் கேட்டதும் ஏன் இப்படி ஆச்சரியத்தில் மூழ்கி விட்டாய்? அந்தப் பெண்ணை உனக்குத்தெரியுமா?'' என்றாள் அருந்திகை.

''அவள் பெயர் என்னவென்று சொன்னீர்கள்..?''

''அவள் பெயரா? திருபுவனி.''

''திருபுவனியா..? தன் பெயர் திருபுவனி என்று அவளே சொன்னாளா..?''

''அவள் சொல்லவில்லை. ஆனால் எல்லோரும் அவளை அப்படித்தான் அழைத்து வருகிறார்கள்.''

''உண்மையாகவே அவள் இடங்காக்கப் பிறந்தாரின் மகள் என்று உங்களுக்குத் தெரியுமா....?''

''அதுவும் எல்லோரும் சொல்லிக் கொள்வதினால்தான் தெரியும். எனக்குக் கூட அந்த விஷயத்தில் கொஞ்சம் சந்தேகம்தான். அவளை வேறு எங்கோ பார்த்த ஞாபகமாகக்கூட இருக்கிறது.''

''அப்படியா..? அவள் எங்கேயாவது யாழ் வாசித்துக் கேட்டிருக்கிறீர்களா?'' என்றாள் வைகைமாலை.

''நீ கேட்பதைப் பார்த்தால் அந்தப் பெண்ணை உனக்குத் தெரியும் போலிருக்கிறதே..'' என்றாள் அருந்திகை மிகுந்த ஆச்சரியத்துடன்.

''எனக்கொரு சந்தேகம். நான் நினைக்கும் பெண்ணாக இருந்தால் அவள் யாழ் வாசிப்பாள். அவள் பெயர் திருபுவனியல்ல....''

''அவள் யாழ் வாசிப்பாளா..? எனக்குத் தெரிந்தவரையில் உன் சகோதரி சுதமதி யாழ் வாசிப்பதைக் கேட்டிருக்கிறேன். சில வருடங்களுக்கு முன் என் தகப்பனார் இருந்தபோது பழையாறை நகரில் இந்திர விழாவில் பல்லவ மன்னர் சபையிலிருந்த இசைக் கணிகை ஒருத்தி வந்து யாழ் வாசித்தாள். அதைக் கேட்டிருக்கிறேன். அவள் பெயர் மறந்து விட்டது. அவள் சோழ மன்னர்கள் சபையில் பிரசித்தி பெற்ற நாட்டியக் கணிகையாய் இருந்த அலையூர் கக்கையின் பேத்தி என்று என் தகப்பனார் பெருமையாகச் சொல்லிக் கொண்டார். ஆமாம்! இப்பொழுது கொஞ்சம் ஞாபகம் வருகிறது. அந்த அலையூர் கக்கையின் பேத்தி இடங்காக்கப்பிறந்தாரின் பெண் திருபுவனியைப் போல்தான் இருந்தாள்..'' என்றாள் அருந்திகை.

''இப்பொழுது என்சந்தேகம் நிவர்த்தியாகி விட்டது. இடங் காக்கப் பிறந்தாரின் மாளிகையில் இருக்கும் பெண் உண்மையில் அவருடைய மகள் திருபுவனியல்ல. அலையூர் கக்கையின் பேத்திதான். அவள் பெயர் மாலவல்லி'' என்றாள் வைகைமாலை.

''மாலவல்லியா...? அவளை உனக்குத் தெரியுமா...?'' என்று அருந்திகை கேட்டுக் கொண்டிருக்கும்போது பராந்தகன் அங்கு வந்தான். வைகைமாலை அருந்திகையைப் பார்த்துக் கண் ஜாடை காட்டி, ''மறந்து விடாதீர்கள். அதைக் கேளுங்கள்'' என்று சொல்லிவிட்டு அந்த இடத்தை விட்டுச் சென்றாள்.

அருந்திகைப் பிராட்டியோடு பேச வேண்டுமென்ற எண்ணத்துடன்



மினர்வா டுடோரியல் காலேஜ் பிரின்ஸ்பால் திரு ஏ. என். பரசுராம் அவர்கள் குமாரி திருமதி லலிதாவுக்கும் சென்னை டி. டி. கிருஷ்ணமாச்சாரி அன்டு கம்பெனியின் பிரதம அக்கௌண்டண்ட் திரு கே. குப்புசாமிக்கும் 15-7-57 அன்று சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க, மணமக்கள்!

பராந்தகன் அங்கு வரவில்லை. வைகை மாலையின் நிலை எப்படி இருக்கிறது என்பதைக் கவனிப்பதற்காகவே தான் அவன் அங்கே வந்தான். பராந்தகன் அங்கு வந்ததும் இளங் காதலர்கள் இருவருக்கிடையே நாம் இருக்கக் கூடாது என்று உணர்ந்தவள் போல் வைகை மாலை அவ்விடத்தை விட்டுச் சென்றதைப் பராந்தகன் உணர்ந்தான். வைகைமாலை அவ்விடத்தை விட்டு அகன்றது, பராந்தகனுக்குச் சிறிது நன்மையாகவே பட்டது. தன் காதலி அருந்திகைப் பிராட்டி மூலமாக வைகை மாலை அவனோடு என்ன பேசிக் கொண்டிருந்தாள் என்பதை அறிந்து கொள்ளவும் விரும்பினான்.

அருந்திகை பராந்தகனை அன்பும் கோபமும் தழுவிய பார்வையோடு பார்த்துக் கொண்டு, "புலிப்பள்ளியார் சுதமதியை அவ்வளவு தூரம் பயமுறுத்தும் வரையில் நீங்கள் பார்த்துக் கொண்டு பேசாமல் இருந்திருக்க வேண்டாம்" என்றாள்.

பராந்தகன் கேலியாகச் சிரித்துக் கொண்டே, "பார்த்துக் கொண்டிருக்க வேண்டாம்தான். ஆனால் அதை என்னால் தடுக்க முடியவில்லை. சுதமதி இப்படித் திடீரென்று மயக்கமுற்று விழுந்து விடுவாள் என்று தான் நினைக்கவுமில்லை. நல்ல வேளை! வைகைமாலையும் அங்கு இல்லாமல் போனாளே? வைகை மாலைக்கு அப்படி ஏதேனும் ஏற்படாமல் இருக்க வேண்டுமே என்று தான் எனக்குப் பயம்...." என்றான்.

"புலிப்பள்ளியார் சுதமதியிடம் என்ன சொன்னார் என்று வைகைமாலைக்குத் தெரியாத வரையில் அவளுக்கு எதுவும் நேராது. அந்த விஷயம்தான் மர்மமாக இருக்கிறதே.." என்றாள் அருந்திகை பராந்தகனைச் சந்தேகக் கண்களோடு பார்த்துக் கொண்டே.

"ஆமாம்! அவ்விஷயம் அவளுக்குத் தெரியாமலிருக்க வேண்டுமே என்ற பயம்தான்எனக்கு" என்றான்பராந்தகன்.

"எவ்விஷயம்?" என்றாள் அருந்திகை ஆவலோடும் பதற்றத்தோடும்.

பராந்தகன் அப்பொழுதுதான் விழிப்படைந்தவன்போல், "அதுவா...? ஒரு விஷயம். அது அவளுக்குத் தெரியக் கூடாது. அது சாதாரண விஷயம்தான். அதிருக்கட்டும். விஜயன் எங்கே? எங்கே உன் முகத்தைக் காட்டு...உன் முகம் காலையில் மலர்ந்த தாமரை போலிருக்கிறது. நடுப்பகலில் நிழலிருந்தும் சிறிது வாட்டமுற்ற ரோஜா மலர் போலிருக்கிறது. மாலை வேளையில்.." என்று அவன் சொல்லிக் கொண்டு வரும் போது அருந்திகை இடைமறித்தாள். "இதழ்விரிப்போமா வேண்டாமாஎன்று தயங்கி நிற்கும் அல்லி மலர்போல இருக்கிறது என்று ஏதாவது சொல்லுங்கள். இந்த வர்ணனை எல்லாம் வேண்டுமென்று இப்பொழுது யார் கேட்டார்கள்..?" என்றாள்.

"அழகைக் கண்டவன் பிறருடைய விருப்பத்துக்காகவோ வேண்டுகோளுக்காகவோ அதைப்புகழ்வதில்லை. வர்ணனை செய்வதில்லை. அவனுடைய இருதயம் அழகின் வசம் ஒட்டி விடுகிறது. அந்தச் சமயம் அவன் அதைப் புகழாமலோ வர்ணனை செய்யாமலோ இருக்க முடிகிறதில்லை. ஒரு உண்மையான கவிஞன்..."

"நீங்கள் கவிஞரல்ல..."

"அழகில் மனத்தைப் பறிகொடுத்து விட்டானானால் ஒரு சாதாரண மனிதன் கூடக் கவிஞனாகி விடலாம்."

"நீங்கள் கவிஞராவதை நான் சிறிதும் விரும்பவில்லை..."

"எப்பொழுதுமே நான் கவிஞனாகி விடமாட்டேன். உன்னைப் பார்க்கும் நேரத்தில் மட்டும் என்னால் கவிஞனாகாமல் இருக்க முடியாது."

"அப்படியென்றால் உங்களை நான் பார்க்கவே இல்லை. அந்தப் பழி எனக்கு எதற்கு?" என்று கேட்டாள் அவள் சிரித்துக் கொண்டே.

"அந்தப் பழி உன்னைச் சேராது. உன்னைச் சரணடைந்து நிற்கும் எழிலைத் தான் சேரும்!"

"அப்படி என்றால் அந்த எழில் எனக்கு வேண்டாம்."

"இதென்ன விபரீதமாக இருக்கிறதே? எழிலை விரும்பாத பெண் உண்டா?" என்று அதிசயித்தான் பராந்தகன். (தொடரும்)

# சித்திரக் கலை



சித்திரம் கற்க விரும்பும் நேயர்களுக்கு
ஓர் அரிய சந்தர்ப்பம்

ஆண், பெண் இருபாலரும் இருந்த இடத்திலிருந்தே எளிய தமிழ்ப் பாடங்கள் மூலம் 2 வருடத்தில் கற்கலாம். இலங்கை, மலாயா, சிங்கப்பூர் முதலிய வெளியூர்வாசிகளும் தபால் மூலம் இதைக் கற்க முடியும்.

விவரங்களுக்கு நான்கு 6 நயா பைசா தபால் பில்லைகளுடன் எழுதவும்.

**சந்தனுவின் சித்திர வித்யாலயம்**
C/o சித்திரக் குள்ளன்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 2

இது பிரபல சித்திரக்காரர் சந்தனுவால் நடத்தப்படும் ஸ்தாபனம்

---



சகிக்க முடியாத உபாதை: தூக்கமும் கிடையாது; சுகமான நித்திரைக்கும் உபாதை நிவர்த்திக்கும்

# எப்ரிலைம்

# EPHRILIME



நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

**யூனியன் டிரக் கம்பெனி லிட்.**
மதராஸ் டிப்போ:
2, ஜோன்ஸ் லேன் :: மதராஸ் - 1

---

## உங்கள் வாழ்க்கையை

# மலச் சிக்கல்

## ஒரு பாரமாக்க வேண்டாம்.




தலைநோவுகள், உடம்பெரிச்சல், பசி மந்தம் தேகசக்தியின்மை, மேனியழகு மங்குதல், இவையெல்லாம் ஜீரண உறுப்புகளில் அசுத்தமிருப்பதன் நேரடியான விளைவாகும். மலச்சிக்கல் உங்கள் வாழ்வையே ஒரு சுமையாகக் கருதும்படி செய்ய விடக்கூடாது. ப்ருக்லாக்ஸை உட்கொண்ட மாத்திரத்தில் புதிய ஜீவசக்தியுண்டாகும். ருசியிருந்த இந்த சாக்லேட் பேதி மருந்து குடலின் வேலையை சகஜமாக ஊக்கி கழிவுடைப் பொருள்களை நிச்சயமாக வெளியேற்றுகிறது. இன்றிரவே ஒரு சாக்லேட் சாப்பிட்டு, காலை எவ்வளவு புத்துணர்ச்சியுடன் சக்தியுடன் விளங்குகிறீர்களென்பதை பாருங்கள். ஆனால் ப்ருக்லாக்ஸ் என்று கேட்டு கவனித்து வாங்குங்கள்!

**ப்ருக்லாக்ஸ்**
ஒரே இரவில்
உங்களை குணமாக்கும்
(லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் லாபரேடரீஸ் லிட். தயாரிப்பு)

இன்டெண்டிங் ஏஜண்டுகள் :
ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி
99-A, அரமனைக்காரத் தெரு, மதராஸ்-1

## 27. கார் காலத்தில்

"பத்தூஊ! உன்னை எத்தனை தரம் கூப்பிடுவது?"

"ஊம்ம்ம்!"

"அந்தப் பாட்டு வாத்தியார் இருக்கிறாரா? அல்லது வீட்டுக்குப் போய் விட்டாரா?"

"ஏனும்?" இது பத்துவின் பாட்டி.

"ஏனுமாவது புதுச்சேரியாவது? அந்த மனுஷ்யன் வீட்டுக்குப் போய்விட்டாரா, இல்லையா?"

'ஆம்' என்று பரத நாட்டிய பாஷையில் பதிலளித்தாள் பத்து.

"பாட்டு வாத்தியாரைப் பற்றித் திடீரென்று உங்களுக்கு என்ன அக்கறை வந்து விட்டது என்று கேட்கிறேன். புரிஞ்சுதோ?" இது பத்துவின் பாட்டி.

"அக்கறை இல்லாமலா கேட்கிறேன்? அந்த மனுஷ்யன் இரண்டு நாட்களாகப் பத்துவுக்குப் புதிதாக ஒரு பாட்டு சொல்லி வைக்கிறாரே...."

"ஆமாம், 'ஸொகஸுகா மிருதங்க தாளமு...' என்ற தியாகராஜ கீர்த்தனை! அதற்கென்ன?"

"அதில் நீ சொக்கிப் போகும்படி..."

"நன்றாகத்தான் இருக்கு...! உங்கள் ஆணவம், வரவர!"

"அடாடா! உன்னைச் சொல்லவில்லை. தியாகராஜன், ஸ்ரீராம பிரானைப் பார்த்துச் சொல்கிறதாக அமைந்துள்ளது அந்தக் கீர்த்தனை. 'மிருதங்க தாளாதிகளைச் சரிவர அமைத்துக் கொண்டு. நீ சொக்கிப் போகும்படி பாடும் தீரன் யாரோ?' என்று பல்லவி. புரிஞ்சுதோ?"

"அதற்கென்ன...?"

"பகவான் சொக்கிப் போகும்படி பாடக்கூடிய **வித்வான்** யாரோ என்றால் பொருந்தும். பாடக்கூடிய **தீரன்** யாரோ என்கிறாரே... இதில் பாட்டு பாடுவதற்குத் தீரனாக வேணுமா என்ற கேள்வி எழுகிறது. இந்த மாதிரி விஷயத்தில் எவ்வளவோ பொருட்களை புதைந்து கிடக்கிறது! அதற்குச் சான்றாக பக்திமான்களின் பாடல்களை மேற்கோளாகவும் காட்டி, தியாகய்யர்வாள் இங்கு 'தீரன்' என்ற பதத்தைப் போட்டிருப்பது எவ்வளவு பொருத்தம்.... என்பதை எல்லாம் இந்த மனுஷ்யன் புரிந்து கொண்டு பாடுகிறாரா?"

"போதுமே....உங்கள்...."

"இப்படி உட்பொருள்களை அறியாதவர்கள்...நானும் பாடுகிறேனென்று ஆரம்பித்து - ஸ்வானுபூதி இல்லாமல்




பாடினால், பாவம் குட்டிச் சுவராய்ப் போய் விடாதோ..?"

"போதுமே! உங்கள் வறட்டு வேதாந்தம் இதிலுமா வேண்டும்? நான் உங்களை ஒரு கேள்வி கேட்கிறேன்."

"ஒரு கேள்வி என்ன? இந்த 40-45 வருஷங்களாகக் கேள்வி கேட்பது நீ தான். அதற்குப் பதில் சொல்வது நான் தான். வழக்கம் போலவே கேளேன்!"

"வைத்திய விஷயத்தில் பாடகர் குறுக்கிடுகிறாரா? பாடகர் விஷயத்தில் வைத்தியர் குறுக்கிடுவானேன்? வைத்தியம் எழுதுகிறேன் என்று தொடங்கி உங்கள் வேதாந்தத்தைத்தானே எழுதி வருகிறீர்கள்! உருப்படியாக ஒரு வியாதிக்குக் குறிப்பாக நாலு மருந்து 'டக் - டக்' என்று எழுதினீர்களா? உங்கள் லக்ஷ... [சிரிப்பு - மழுப்பல்...] உங்கள் சமாசாரம் இப்படி இருக்க, இன்னொருவர் விஷயத்தில் ஏன் அழைக்காமல் இருக்கும்போது குறுக்கிடுகிறீர்கள்?"

"..............."

"என்ன, நான் சொல்வதில் தப்பு ஏதாவது இருக்கிறதா?"

"......உம் ம் ம்...."

"என்ன 'உம்' வேண்டிக் கிடக்கிறது? உங்கள் திருவாயைத் திறந்துதான் சொல்லுங்களேன்? ஒன்றும் முத்து உதிர்ந்து போய்விடாது!"

உண்மை. ஓரளவாவது உண்மையிருக்குமானால் ஒப்புக் கொள்ளாமல் முடியுமா? "ஒரு கப் சுடச்சுடக் காப்பி கொண்டு வா!" என்று பத்துவையும் அவள் பாட்டியையும் மெதுவாக உள்ளே அனுப்பி வைத்தேன்.

வரப் போவது மழைக்காலம். சீதோஷ்ண மாறுபாடுகளினால் சில வியாதிகள் ஏற்படுவது எல்லோருக்கும் இயற்கை. வேறு சிலரில் உள்ளே பதுங்கிக் கிடக்கும் சில வியாதிகள், இக்காலத்தில் தலை தூக்குவதுண்டு. காலத்தின் நிலையை யொட்டி சரீரத்தின் தத்துவத்தில் ஏற்படக்கூடிய அனுரோக்

வியபரமான மாற்றங்களைத் தடை செய்ய வேண்டி, நாம் அனுசரிக்க வேண்டிய ஆகாராதி திட்டங்கள் ஏற்கெனவே, [கட்டுரை 13-தேதி 5-5-57 கல்கியில்] விளக்கியாயிற்று.

எவ்வளவு ஜாக்கிரதையோடிருந்தாலும், நம்மையும் மீறிப் பருவத்தின் காரணமாக நோய்கள் வரலாமல்லவா! அவற்றுக்குப் பரிகாரமாக ஏதாவது சில மருந்துகளைச் சொல்ல வேண்டும் அல்லவா?



இக்காலத்தில், 'வந்தேன் வந்தேன்' என்று கொம்மாளம் போட்டுக் கொண்டு வரும் வியாதி ஜலதோஷம், இருமல், தலைவலி, உடம்பில் வலி, ஜுரம் என்று இப்படியான ஒரு கூட்டம். சிலரில் இந்த இருமலும் சளியும் அதிகமாயிருக்கும். சிலரில் ஜுரந்தான் மற்றெல்லாவற்றையும் விட அதிகமாக இருக்கும். சிலரில் உடம்பு வலி, முக்கியமாக இடுப்பு வலியும்—தலை வலியும்தான் அதிகமாக இருக்கும். இவ்வுபாதைகளின் கூட்டத்துக்கு ஒரு பெயர் கொடுத்தாக வேணுமே! பெயரைப் பல தரமாகச் சொல்வர். ஜலதோஷம் என்று சொல்பவர் சிலர். ''கொஞ்சம் தடுமன் பிடித்திருக்கிறது'' என்பர் வேறு சிலர். பிரதிசியாயம் என்றும் பிராதிசியாயிக ஜுரம் என்றும் சொல்வர் மற்றும் சிலர். இன்ப்ளுயன்ஸா என்பர் வேறு சிலர். 'நேஸோ பாரஞ்சியல் கெடார்' என்று வாண வேடிக்கை கேட்பது போல் சொல்வர் பின்னும் சிலர். பெயரைப் பற்றியா சிகிச்சையை நிச்சயிக்கப் போகிறோம்!

இதில் முக்கியமாக உபயோகப்படுவது ஜலதோஷத்தை முறிக்கவல்ல தலைப் பற்று. இதில் இரண்டு வகைகளை ['' தலைவலிக்குப் பற்று'' ''நீர்க்கோவை மாத்திரை ''] தெரிவித்தாயிற்று. குழந்தைகளுக்கானால் தனித்த குங்குமப் பூவைப் பாலிலோ — தாய்ப் பாலிலோ உரசி நெற்றிப் பொட்டுக்களில் பற்றிடுவது நலமென்றும் சொல்லியாயிற்று.

உள்ளுக்குக் கொடுக்க மிளகு கஷாயம் சிறந்தது. அன்னபேதி செந்தூரத்தில் அரை அரிசிப்பிரமாணம் முதல் இரண்டு அரிசி எடை வரையில் தேனில் குழைத்துக் கொடுத்து அதன்மேலே மிளகு கஷாயத்தைக் குடிக்கக் கொடுக்கலாம். ஏழு எட்டு வயதுக் குழந்தைகளானாலும் மிளகு கஷாயத்தில் சிறிது வெல்லத்தையோ அல்லது சர்க்கரையையோ கரைத்துக் கொடுக்கலாம். அதற்கும் குறைந்த வயதுச் சிறுவருக்கு மிளகு கஷாயம் வேண்டாம். ஒரு நெல்லளவு திரிகடு [சுக்கு, திப்பிலி, மிளகு இவற்றின் தனித்தனி சூர்ணத்தைச் சம பாகத்தில் ஒன்றாய்க் கூடியது] சூர்ணத்துடன் அன்னபேதி செந்தூரத்தையும் கூட்டி நிரம்பத் தேன் விட்டுக் குழைத்துக் கொடுக்கலாம். தினம் இரண்டு முறை போதும். [கடிதம் 241-ல் கேட்ட சேலம் நண்பர் கவனிக்கவும்.] ஒன்றிரண்டு வயதுக் குழந்தைகளானால் அவர்களுக்கு இந்தச் சுக்கையும் மிளகையும் கொடுக்கத் தகாதல்லவா? அவருக்குத் துளசியை ஆவியில் வேகவிட்டுப் பிழிந்த ரஸத்தில் சிறிது தேனும் கூட்டி அதிலேயே அன்னபேதி செந்தூரத்தைக் கூட்டிக் குழைத்துத் தினம் இரண்டு வேளை கொடுக்கலாம். அதற்கும் சின்னக் குழந்தைகளானால் வசம்பைத் தோல் நீக்கிய பிறகு சுட்டுச் சாம்பலாக்கியதில் நெல்லளவு தேனிலோ தாய்ப்பாலிலோ கொடுக்கலாம். இதையும் விடச் சிறந்தது குழந்தையின் தாயார் ஒரு பூண்டைச் சுட்டுச் சர்க்கரையுடன் தின்பது.

ஆனால், இப்போது புதிய பிரமன் ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு சிருஷ்டித் தொழிலை நவீன முறையில் நடத்தி வருகிறார். இவர், தாயின் வயிற்றில் குழந்தையை வைப்பார். அக்குழந்தையின் ஆகாரத்தைச் சீமையில் தயாராகும் பால் டப்பியிலோ புட்டியிலோ வைப்பார். இவ்விதத் தாய்மார்கள் குழந்தைக்காக மருந்து சாப்பிட்டுப் பயன் என்ன? அவர்கள் நேரில் குழந்தைக்கே மருந்தைக் கொடுக்க வேணும்.

கஸ்தூர்யாதி குடிகை என்பதில் நாலு முதல் எட்டு மாத்திரை வரையில் எடுத்து இரண்டு மூன்று சொட்டு தேன் விட்டுச் சந்தனக் கல்லில் உரசி எடுத்ததை ஒன்றிரண்டு அவுன்ஸ் ஜீரக கஷாயத்தில் கரைத்து ஒரு கோப்பையில் வைத்துக்கொண்டு ஒவ்வொரு ஸ்பூனைக் கலக்கி எடுத்து மணிக்கொரு தரம் புகட்டி வர வேணும்.

மூன்று நான்கு மாதக் குழந்தைக்கு மூன்று மாத்திரைகள் போதுமாகும். ஒன்று—ஒன்றரை வயதுக் குழந்தைக்கு எட்டு மாத்திரைகள் வரையில் கொடுக்கலாம்.

ஒன்றரை - இரண்டு வயதுக் குழந்தையாகி விட்டால் பவழ பஸ்மம் ஒரு அரிசி அளவு தினம் இரண்டு மூன்று வேளை தேனில் கொடுக்கலாமே! **(தொடரும்)**

# ஆரோக்கியத்தை விரும்புவோர்
# எப்பொழுதும் *லைப்பாய் சோப்*
# உபயோகித்தே நீராடுவார்

விளையாட்டுக்கள் ஆரோக்கியத்திற்கு இன்றியமையாதவை — ஆனால் விளையாடும்போதாகட்டும், வேலை செய்யும்போதாகட்டும் நாம் அழுக்காகி விடுவது சகஜம். நம் ஆரோக்கியத்திற்கு நிரந்தரமாக ஆபத்து விளைவிக்கும் நோய்க் கிருமிகள் அழுக்கில் இருக்கின்றன. அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக்களைந்து உங்களைக் காப்பது லைப்பாய் சோப்.

லைப்பாய் சோப் தேய்த்து ஸ்நானம் செய்வதால் ஓர் புதுமலர்ச்சியை உங்களால் உணரமுடியும்; சோர்வு நீங்கும். தினந்தோறும் லைப்பாய் சோப் உபயோகித்து நீராடுங்கள்—அழுக்கிலுள்ள கிருமிகளிடமிருந்து உங்கள் ஆரோக்கியத்தைக் காத்துக் கொள்ளுங்கள்.




L. 265-50 TM

# மாணவர் மன்ற விழா

சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாகத் தமிழ்நாடே பிரமிக்கும் வகையில் மிகச் சிறப்பாக நடைபெற்று வரும் மாணவர் மன்றத்துக்கு ஜூலை மாதம் இருபது, இருபத்தோராம் தேதிகளில் வெள்ளி விழா நடைபெற்றது. இரண்டு தினங்கள் மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்குதல், ஏழைகளுக்குப் பால் வழங்குதல் முதலிய பல நிகழ்ச்சிகளுடன் நடைபெற்ற இந்த வெள்ளி விழாவில் சுமார் பதினையாயிரம் மக்கள் கலந்து கொண்டனர்.

சென்னை, தியாகராயர் கல்லூரி மைதானத்தில் அமைக்கப்பட்டிருந்த மணிவாசகர் மண்டபத்தில் நடைபெற்ற இந்த விழாவில், கல்வி மந்திரி சுப்பிரமணியம், ஸ்தல ஸ்தாபன மந்திரி லூர்தம்மாள், திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் திரு சி. என். அண்ணாத்துரை, திரு கி. ஆ. பெ. விசுவநாதம், பச்சையப்பன் கல்லூரி தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர் மு. வரதராசனார், குழந்தைக் கவிஞர் திரு அழ. வள்ளியப்பா, சென்னைநகர உதவி மேயர் திரு கே. ராமதாஸ் முதலிய இன்னும் பல அறிஞர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

இந்த மாணவர் மன்றம் சிறப்பாக நடைபெற்று வருவதற்காகத் தம்முடைய உடல், பொருள், உழைப்பு அனைத்தையும் செலவழித்து வரும் மன்றத்தலைவர் மயிலை சிவமுத்து அவர்களையும், மன்றத்தின் செயலாளராக இருந்து மிகத் திறமையுடன் பணியாற்றி வரும் புலவர் திரு தணிகை உலகநாதன் அவர்களையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

மாணவர் மன்ற வெள்ளி விழாக் கொண்டாட்டக் காட்சிகள் சிலவற்றைப் படத்தில் காணலாம்.

1. வெள்ளி விழா அலங்காரத் தோற்றம். 2. விழாத் தலைவர் கல்வி அமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் அறிவுரை ஆற்றுகிறார். 3. சென்னை நகரசபை உதவிக் கமிஷனர் திரு சங்கரன் அவர்கள் சொற்பொழி வாற்றுகிறார். 4. டாக்டர் அழகப்பச் செட்டியார் திருவுருவப் படத்தைக் குழந்தைக் கவிஞர் திரு அழ. வள்ளியப்பா திறந்துவைக்கிறார். 5. மாணவர் மன்றப் பரிசு பெற்ற மாணவர் பாடுவதைக் கேட்டு மகிழ்கிறார் ஸ்ரீமதி லூர்தம்மாள். மைக்குக்கு அருகில் மலர்ந்த முகத்துடன் இருப்பவர்தான் மாணவர் மன்றச் செயலாளர், புலவர் திரு தணிகை உலகநாதன் அவர்கள்.






ஆயிரத்து எண்ணூற்று ஐம்பத்தேழாம் ஆண்டு. இளவேனில் பருவத்தில் ஒருநாள் இரவு.

அப்பொழுதுதான் கண்ணயர்ந்த ராணி லக்ஷ்மிபாய், நள்ளிரவைத் தெரிவிக்கும் கால அறிவிப்பு மணி ஓசை கேட்டுக் கண் விழித்துக் கொண்டாள். அவள் நெஞ்சிலிருந்த கவலைகளும் கூடவே விழித்துக் கொண்டன!

நாடு பிடிக்கும் ஆசையில் ஆங்கிலேயர் ஜான்ஸியைக் கைப்பற்ற வந்துள்ள நெருக்கடியில், இந்திய வீரர்கள், திரண்டு வந்து பட்டாளத்தில் சேர்ந்து எதிரியை விரட்டியடிக்க வேண்டியது அவர்கள் கடமை. ஆனால் பட்டாளத்தில் இருந்த போர்வீரர்கள், ஆங்கிலேயருடைய சேனையில் சேர்ந்து விட்டதாக, ராஜதந்திரி தாந்தியாதோபே மாலையில் சொன்னதிலிருந்து அவள் மனம் அவள் வசத்தில் இல்லை.

இந்திய மண்ணில் பிறந்த மக்கள், தேசத் துரோகிகளாகி, தங்கள் தாய்நாட்டையும், தங்கள் இனத்தாரையும் அழிக்கவா, போர் முறைப் பயிற்சி பெற்றார்கள் என்று நினைத்த பொழுது அந்த வீர வனிதை பொங்கியெழுந்தாள்! மானத்தை விட உயிரையும், உயிரை விடப் பொருளையும் பெரிதாக மதித்து எதிரிகளிடம் சரணாகதியடையத் துணிந்துவிட்டவர்களுடைய இழிமதியை எண்ணிப் பதைபதைத்தாள். கோபாவேசத்தினால் அவளுடைய உடல் பதறியது. பால் வடியும் அவளுடைய மலர் முகமும் சிவந்தது: கண்கள் தணல் துண்டுகளாக ஜொலித்தன! உஷ்ணமான பெருமூச்சினால், அவளுடைய செவ்விய உதடுகள் கருகி உலர்ந்தன.

அஞ்சா நெஞ்சமும், உடல் வலிமையும், போர்த்திறனும் படைத்த லக்ஷ்மிபாய், படுக்கையில் தூங்க மனமில்லாமல் எழுந்து வெளியே வந்து தாழ்வரையில் சாளரத்தருகில் இருந்த சுகாசனத்தில் சாய்ந்து கொண்டதும், பணிப் பெண்ணொருத்தி ஓடி வந்து சாளரத்தின் கதவை நன்றாகத் திறந்து வைத்தாள்.

தேய்பிறையின் சதுர்த்தியாதலால் வெளி உலகைக் காரிருள் கவிந்து கொண்டு விட்டிருந்தது! தொலைவில் தெரியும் ஆரவல்லி மலை இருளில் மை பூசியதுபோல, பின்னும் பயங்கரமான இருளைத் தோற்றுவித்தது!

நள்ளிரவின் நிசப்தம், காற்று கூட ஸ்தம்பித்திருந்த மோன நிலையில் இயங்கி இருந்தது இயற்கை.

சட்டென்று எழுந்த நினைவில் லக்ஷ்மிபாய் சரசரவென்று மாளிகையின் மேல் உப்பரிகையில் ஏறி நின்று கொண்டு, காத தூரத்திலிருந்த கானகத்தை உற்று நோக்கினாள்.

அங்குமிங்குமாகத் தீவர்த்திகளின் வெளிச்சம் தெரிவதும், மறைவதும், பெரிய தீப்பிழம்பு தெரிவதும், மறுவினாடி அதே இடத்தில் மையிருள் கப்பிக்கொள்வதுமாக இருந்ததைக் கண்டாள்.

அவள் மனம் முன்னிலும் அதிகமாகத் துடிக்க ஆரம்பித்தது. ஆங்கிலச் சிப்பாய்கள் நடமாடும் காட்டில், கிழத் தந்தையுடன் வசிப்பதாகச் சொல்லும் அனசூயா என்ற பெண் யார்? அவள் தாந்தியா தோபேக்கு என்ன ஆக வேண்டும்? அதைச் சொல்ல மறுக்கிறார் தோபே! ஆபத்து நிறைந்த எதிரிகள் நடமாடும் எல்லையில் பயமற்று வசிக்கும் அந்தப் பெண் யார்? எவ்வளவு ஆண்மையிருந்தால் அவள் அங்கு வசிப்பாள்?

இந்தக் கேள்வி ரம்பமாகி, ராணியின் நெஞ்சை அறுக்கத் தொடங்கியது! 'எந்தப் பிரச்னைக்கும் ஒரு முடிவு உண்டல்லவா? கேள்விக்குச் சமாதானமாக, நாளை இரவு, உரு மாற்றம் செய்து கொண்டு நானே போய் வருகிறேன். அவளைப் பார்த்தாலே 'யார் அவள்?' என்பது எனக்கு விளங்கிவிடும். ஆனால், என் பிரயாணத்தைத் தோபே தடுக்காதிருக்க வேண்டுமே? எல்லா விஷயங்களும், ரகசியங்களும், நிலைமையின் நிர்ப்பந்தங்களையும் கலந்து யோசிக்கும் தோபே, இதை மட்டும் ஏன் வெளியிட மறுக்கிறார்? இருக்கட்டும். இதை நான் கண்டுபிடிக்காமல் விடமாட்டேன். கேட்டால்தானே போகாதே என்பார்? கேட்காமலேயே போய் வந்துவிடுகிறேன்! அதனால் என்ன நேர்ந்தாலும் பாதகமில்லை!' என்ற முடிவுக்கு வந்த பிறகுதான் ஒருவாறு அமைதி பெற்றவளாகக் கீழே இறங்கி வந்தாள். மறுநாளிரவு எந்த மாறு வேஷத்துடன் அவளை அணுகுவது, எப்படி எந்த விதத்தில் பேச்சுக் கொடுத்து அவள் விருத்தாந்தத்தை அறிவது என்று எல்லாவற்றையும் யோசித்து முடிவு செய்து விட்டு

அலுப்படைந்தவளாக மஞ்சத்தில் சாய்ந்தாள். உடனே நித்திராதேவி தனது கைகளில் அவளை ஏந்திக் கொண்டாள்.

விடியற்காலை. வெள்ளி முளைக்கும் தருணம். அனசூயாவுக்கு அன்றென்னவோ விடிய விடியத் தூக்கம் வரவில்லை. மனத்துக்குள் ஒரு புறம் கடமை, மறுபுறம் காதல். இரண்டும் சம பலமுள்ள எதிரிகளாக ஒன்றை ஒன்று தகர்த்தெறியும் ஆவேச உணர்ச்சியில் அவள் மனத்தில் பெரிய போராட்டம் நடந்து கொண்டிருந்தது.

அந்த அதிர்ச்சியால் நெஞ்சில் இசிவு கண்டது! தலை கனத்தது. கண்கள் நீரைச் சொரிந்தன. நாக்கு வறண்டது!

இவ்வளவு உபாதைகளுக்கும் இடம் கொடுத்து இரவு முழுதும் போராடியவள் கானப் பறவைகளின் சலசலப்பால், இளங் காற்றின் சிலு சிலுப்பால், 'நல்ல வேளை. அருணோதயமாகி விட்டது போதும்!' என்று எழுந்தாள். பல் தேய்த்துக் கொண்டு, நிரப்பி வைத்துள்ள நீரைக் கொண்டு நீராடினாள். பகவத் கீதையை எடுத்துக் கொண்டு விளக்கின் அடியில் அமர்ந்து படிக்கத் தொடங்கினாள்.

கண்கள் கீதையின் ஏடுகளைக் கண்டன. அவள் மனமோ, தாயகமான ஜான்ஸி நகரையும், ஆங்கிலப் படைத் தலைவன் ஸ்டோனையும் பற்றி மாறி மாறி நினைத்துப் பார்த்தது! தாய் நாட்டுக்காகத் தன் உயிரைக் கொடுப்பதா, ஆருயிர்க் காதலன் ஸ்டோனுக்காக உயிர் வாழ்வதா?

பகவத்கீதையின் ஏடுகள் புரண்டு கொண்டே இருந்தன.

"அம்மா, அனு..." என்ற தந்தையின் குரல் கேட்டது.

எழுந்து சென்று, "ஏனப்பா?" என்று கேட்டாள் அனசூயா.

"தோபேஜிக்குச் செய்தி அனுப்பினாயோ?" என்று கேட்டார் கிழவர்.

அனசூயா நாக்கைக் கடித்துக் கொண்டாள். மீண்டும், "என்ன கேட்டீர்கள்?" என்றாள் கவனியாதவள் போல.



தந்தை மகளைப் பார்த்து விழித்து, "என்னவா? எங்கே நினைவு உனக்கு?" என்று வியப்புடன் கேட்டார்.

"காது கேட்கவில்லை, அப்பா!"

"மகளே! தாந்தியா தோபேக்கு, விவரம் அனுப்பினாயா, இல்லையா என்று கேட்டேன். இப்போதாவது விழுந்ததா காதில்?"

"நன்றாக விழுந்தது!"

"செய்தி அனுப்பவில்லையா?"

"இல்லை."

"ஏன்?"

"ஸ்டோன் இங்கே இல்லை. அதனால் அனுப்பவில்லை...."

"எங்கே போனான்?"

"கமாண்டர் அன்ட் சீப் வருகிறானாம். அதற்காகப் பம்பாய்த் துறைமுகத்துக்குப் போயிருக்கிறார்..."

பேசவும் இராணியற்றுக் குற்றுயிருடன் கட்டிலில் கிடந்த கிழவர் துள்ளி எழுந்து, "போயிருக்கிறாரா? நமது எதிரி அவன்... நம் ரத்தத்தை உறிஞ்ச வந்துள்ள பேய். அவனுக்கு மரியாதையா?" என்று கேட்டார்.

"இல்லை, அப்பா. அவர் உங்கள் எதிரி. ராணி லக்ஷ்மிபாயின் எதிரி, அவள் ஆட்சி செய்யும் ஜான்ஸி நகருக்கு எதிரி......ஆனால் என் வரையில் அவர் அதிதி. நம்மை நம்பி வந்து அடைக்கலம் புகுந்தவர். அவரை என்னும் காட்டிக் கொடுக்க மாட்டேன்" என்று கம்பீரமாக பதில் சொன்னாள் அனசூயா.

"என்ன, என்ன சொன்னாய்?"

"நம்மிடம் அடைக்கலம் புகுந்துள்ள அவரைக் காட்டிக் கொடுக்க மாட்டேன் என்றேன்."

கிழவரின் உடல் கிடு கிடுத்தது. தலையில் இடி இடித்தது போன்ற அதிர்ச்சி யடைந்தார். "பாவிப் பெண்ணே! எனக்குத் தெரிந்து விட்டது. புனித பாரதத்தின் பெண் மகள். பெண் குலத்துக்கு அழியாத மாசு கற்பித்து விட்டாயே! ஐயோ, அவன் கால்காயம் ஆறியதும் போகச் சொல் என்று முட்டிக் கொண்டேன். தாய்மை நிரம்பிய உன் வாழ்வைக் கறைப்படுத்திக் கொள்ள எப்படித்



துணிந்தாய்? சீ துரோகி, என்முன் நில்லாதே. பகைவனை, துணைவனாக நினைத்து ஜன்ம பூமியில் சத்துருவுக்கு இடம் கொடுத்து, அதன் பிறகு, உன் தேச மக்களையும் அவனுக்கு இரை கொடுத்து, தமது ராஜ்யம் சீரழிய, ராணி வீழ்ச்சி பெற உதவி செய்து ... கடைசியில் நீ பெறப்போவது எது? சிவலோகமா, வைகுண்டமா — எதுவுமில்லை. நரகம்—அழி நரகம், மீளா நரகம்... அழி! அழியவோ, உன்னை இதுகாறும் காத்து ரட்சித்தேன்? தெய்வமே, இதுவா என் முடிவு? தாயே, என் மகள்போன்ற லக்ஷ்மிபாய்? வீர ரமணீ! ஜான்ஸியின் அன்னையே, இனி நான் இருப்பது தகாது! நீ வெற்றி பெறுவாய். நம் நாடு மீளும் எனக்குறுதி உயிரை இழுத்துப் பிடித்துக் கொண்டு, மகான் தாந்தியா தோபேயின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு இந்த ஜன சஞ்சாரமில்லாத காட்டில் வசித்தேன்! எல்லாம் வீண்! இந்த ஒரு பெண்ணால் ஸர்வநாசம்! தேசத்துக்கு உய்வு தேட வந்து, நாச வேலைக்கு அடிகோலி விட்டேன்! லக்ஷ்மிபாய் மகாராணி தோபே! இருவரும் என்னை மன்னியுங்கள்! ஹா, கண்கள் பஞ்சடைகின்றன. கைகால்கள் செயலற்று விட்டன. பாரத பூமிக்காக...''



வார்த்தைகள் முடியவில்லை. கிழவர் மூச்சிழந்து கீழே விழுந்தார்.

அசைவற்று நின்று கொண்டிருந்த அனசூயாவின் உடலில் ரத்தம் உறைந்து விட்டது. கால்கள் பெயர்த்தெடுத்து அடி வைக்க இயலாமல் ஆணியடித்து நிறுத்தி யிருப்பது போல இருந்தது.

இப்பொழுதும், இன்னமும் கடமை பெரியதா, காதல் பெரியதா என்ற கேள்வி விசுவாகாரமான உருவில் அவள் முன் நின்றது. கடமையை உணரவும் தைரியமின்றி, காதலைத் துறக்கவும் மனமின்றி இக்கட்டில் அகப்பட்டுக்கொண்டு திணறினாள். தத்தளித்தாள்.

ஒரு நிமிஷம் ஜான்ஸியின் எழிலும், வீரம் மிகுந்த லக்ஷ்மி பாயின் அரண்மனையும் கொலுவும், ராணியின் கம்பீரமான செங்கோலும் நின்று காட்சி கொடுத்தன!

மறு விநாடி அதைத் தள்ளிவிட்டுக் கட்டழகனான வாலிபன்—முழுமதி நிலவு போன்ற முக ஒளியும், முத்துப் பற்களுமாக மோகனச் சிரிப்புடன் முன் வந்து நின்று, ''அன்பே! வா! என் மன அரங்கில் அன்பு அரண் அமைத்து, இன்ப மாளிகை கட்டி அதற்கு உன்னை அரசியாக்கி யிருக்கிறேன்! பார்! என் இதயத்தைத் திறந்து பார்! காதலையும் நிறத்தையும், எலும்புகளையும் நீக்கி, என் இதய வெளியைப் பார்! என்ன காண்பாய், தெரியுமா? உனது உருவமேதான்!''

அனசூயா இந்த விசித்திர, விபரீத கற்பனைகளுக்கு முன்பு வெலவெலத்துப் போனாள்! கண்களை மூடிக்கொண்டாள். அந்தகாரம் பின்னும் மிரட்டியது. கண்களைத் திறந்தாள். எதிரே, ஈன்று வளர்த்த தந்தையின் சடலம் கிடந்தது!

இவ்வளவு இதயக் குமுறலில்—பளிச்சென்று மின்னிய ஒரு நினைவு! அதே விநாடி பேரிடியாகக் கருத வேண்டிய ஒரு நாச வேலை நினைவுக்கு வந்து விட்டது.

தனது நிருபம் இந்நேரத்துக்கு ஸ்டோன்ஸ் கைக்குக் கிடைத்திருக்குமோ? அவன் கையில் கிடைத்திருந்தால்?.....

குடல் நடுங்கியது அவளுக்கு. கண்முன்பு விழுந்து கிடக்கும் தந்தையின் சரீரம் அவள் புத்தியைப் பேதலிக்கச் செய்து விட்டது போல உணர்ந்தாள்! அவர் வாயினின்றுவெளிப்பட்டு அவள் நெஞ்சில் தைத்த சொல் அம்புகள் தைத்தபடியே இருப்பது போலத்தோன்றி வேதனை அளித்தது அவளுக்கு.

அச்சமயம்— தாந்தியா தோபேயின் ஓலையுடன் அவசரமாக ஓடி வந்த ராம் தோபே தடதடவென்று பலமாகக் கதவைத் தட்டினான்.

அது, வழக்கமாக ஸ்டோன்ஸ் வரும் வேளையாதலால் அவன்தானோ என்று நினைத்து ஓடிச் சென்று கதவைத் திறந்தாள் அனசூயா.

ராம் தோபேயின் கையிலிருந்த ஓலைச் சுருள் அனசூயாவின் கைக்கு மாறியது. அதைப் பிரித்துப் படித்தாள்.

''அனசூயா! நீ வெறும் அனசூயா அல்ல! ஸதி அனசூயாவாக உன்னை மதிக்கிறேன்! தளபதி ஸ்டோன்ஸின் பெயரைக் கேட்ட மாத்திரம் சிம்மசொப்பனமாகக் கருதும் இந்த யுத்த காலத்தில் ராஜதந்திரமாக நீ புரியும் அற்புத சாதனைகளை ஹரிராம் மூலம் நேற்று உன் தந்தையார் சொல்லி யனுப்பினார். உன் தைரியத்தை மெச்சுகிறேன், அனசூயா! உன்னை நான் என் சகோதரி மகளாக நினைக்கவில்லை. என் பெண்ணாக, வீரம் மிக்க பெண்ணாகக் கருதித்தான் உன்னை அங்கே வைத்தேன். என் உத்தேசம் பழுதுபடவில்லை! அனசூயா! தேசபக்திக்கு, தாய்நாட்டுக் கேற்பட்ட ஆபத்தைத் தடுப்பதற்கு, உயிரையும், உடலையும் கூடத் தியாகம் செய்ய முன் வந்த உன் தியாகத்துக்கு இணையேது! ராம்தோபே அங்கு வந்து, செய்தி எனக்கு எட்டும் வரையில் ஸ்டோன்ஸை வெளியே விடக் கூடாது என்று, நீ வியக்கத்தக்க முறையில் அவன் மனத்தைக் கலைத்துக் கொண்டிருக்கும் உன் யுக்தியை நினைத்து என் உள்ளம் பூரித்து விட்டது! அனசூயா! வெற்றிபெற்று மீளுவோமாயின் நிச்சயமாக ராணி லக்ஷ்மிபாயின் அருகில் அமர உனக்கு ஒரு இடம் உண்டு! ஜனசஞ்சார மற்று — போர்வீரர்கள் நடமாடும் காட்டு வெளியில் — வாலிபனை முரட்டு ஆங்கிலேயனை வீட்டுக்குள் வைத்து,

# உங்கள் கேசத்தை அதிக கருமையுடனும் பளபளப்புடனும் வைக்க குளிர்ச்சியான வெண்ணிற

# ப்ரில்க்ரீம் உபயோகியுங்கள்



புகழ்பெற்ற இந்திய கிரிக்கெட்டரான திரு. வெற்றிபெறும் மற்றவர்களைப்போல், கேசத்தை அதிக பளபளப்புடனும் கருமையுடனும் வைக்க ப்ரில்க்ரீம் உபயோகிக்கிறார்.




* ப்ரில்க்ரீமின் சுத்தமான க்ரீமாக்கப்பட்ட எண்ணெய்கள் உங்கள் கேசத்தின் இயற்கை கருமை நிறத்தை சோபிக்கச் செய்கின்றன. சுத்தமான வெண்ணிற ப்ரில்க்ரீமை உங்கள் தலையில் தினந்தோறும் அழுத்தித் தேயுங்கள். பொடுகுகள் ஏற்படுவதை இது தடுத்து உங்கள் கேசத்தை சுத்தமாயும் ஆரோக்கியத்துடனும் வைக்கிறது.

* சிறிதளவு ப்ரில்க்ரீம் நீடித்த உபயோகத்திற்கு வருகிறது! இன்றே ஒரு ப்ரில்க்ரீம் ஜாடியை வாங்கி எவ்வளவு காலம் அது நீடித்த உபயோகத்திற்கு வருகிறதென்று பாருங்கள்.

வாழ்க்கையில் வெற்றிபெற்றவர்கள்

# ப்ரில்க்ரீம் BRYLCREEM

உபயோகிக்கிறார்கள்

குரூப் லாபரட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

பகைவனை அன்புடன் உபசரிக்கும் உன் நிதானமும், துணிவும், தீரமும், ராஜதந்திரமும் கேட்டு என் மனம் சந்தோஷத்தால் துள்ளுகிறது. உன் தந்தையின் கட்டளைப்படி இன்று நள்ளிரவில் நமது படை அங்கே வரும். விசேஷம் ஏதாவது இருந்தால், உதவி தேவையென்றால், ராம் தோபேயிடம் நிருபம் அனுப்பு. உன் தந்தையாருக்கு என் மனமார்ந்த நன்றிகளைச் சொல்லு. வீரமும், கற்பு நெறியும் உன்னைக் காக்குமாக!

தா....யா....பே.

அவளுடைய உள்ளம் கிடுகிடுத்தது. பதற்றத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தாள். உயிர் இழந்து கிடந்த தந்தையின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டு வெறிபிடித்தவள் போல ஓடத் தொடங்கினாள்.



கே. வெங்கடரமணய்யர் புதல்வியும், கல்கி காரியாலய அக்கௌண்டெண்ட் திரு வே. சீனிவாசன் சகோதரியுமான சௌபாக்கியவதி பத்மாவதிக்கும் சண்டேடைம்ஸ் மானேஜர் திரு கே. சுப்பிரமணிய ஐயர் புதல்வர் திரு கே. எஸ். ராமமூர்த்தி பி. ஏ. அவர்களுக்கும் ஜூலை மாதம் 14-ந் தேதி சென்னை ராயப்பேட்டை அஜந்தா பார்க்கில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கும் அன்று மாலையில் நடைபெற்ற வரவேற்பு வைபவத்துக்கும் ஏராளமான உறவினர்களும், நண்பர்களும், பிரமுகர்களும் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினார்கள். வாழ்க மணமக்கள்!

அந்த இணையற்ற தேசபக்தர் தாத்தியா தோபேயின் கடிதம் அவள் உள்ளத்தில் ஒரு விழிப்பை உண்டாக்கியது இதுவரை, அவளையும் அறியாமல் அவள் உள்ளத்தில் புகுந்துவிட்ட காதல் உணர்ச்சியினால், நாட்டுக்குச் செய்யவேண்டிய கடமையில் சிறிது நழுவிவிட்டாள். அது அவள் மனமறிந்து செய்த குற்றம்தான் என்றாலும், அவளது இளம் பருவத்தினால் ஏற்பட்ட உள்ள நெகிழ்ச்சி காரணமாக நேர்ந்து விட்டது.

இப்பொழுது, இத்தனை நாளும் அவளது இதயத்தில் கனன்று கொண்டிருந்த காதல் தீ தானாகத் தணிந்து விட்டது.

அந்த இடத்தில் கடமை உணர்ச்சி மேலோங்கி நின்றது. தேசபக்தர் தாத்தியா தோபேயின் கடிதத்தில் கண்ட வாசகங்கள் அவள் கண்ணெதிரில் நின்று அந்தக் கடமை உணர்ச்சிக்கு உரம் அளித்தன. அவள் கண்ணெதிரிலேயே உள்ளம் உடைந்து உயிர் துறந்த தந்தையின் பரிதாபமான தோற்றமும் அவள் இப்பொழுது மேற்கொண்டிருக்கும் தீரமான செயலுக்கு ஆதரவளித்தது.

நெஞ்சில் உறுதியும், தேகத்தில் இதுவரையில் அவள் அநுபவித்தறியாத திடமும் பிறந்து, அவளது ஓட்டத்துக்கு உயிர் கொடுத்து மேலும் விரைவுபடுத்தின.

ராம்தோபே அயர்ந்து போய் நின்றான். இருட்டு நிலவாக இருந்த வெளிச்சத்தைக் கொண்டு மேடு பள்ளம் கூடத் தெரியாமல் இடறி விழுந்து எழுந்து ஓடினாள், அனசூயா.

எதிரே தென்பட்ட காட்சி அவளைத் தூக்கி வாரிப்போட்டது. ஜான்ஸி நகரப் போர் வீரர்கள்—ஒவ்வொரு மரத்திலும் இருவர் மூவராகப் பிணைத்து வைத்திருந்ததைக் கண்டு அவள் உள்ளம் பதறியது.

கொஞ்ச தூரத்தில் ஆங்கிலத் தளபதி ஸ்டோன்ஸ் நின்றுகொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் ஆயுதம் தாங்கிய சிப்பாய்கள் இருநூறு பேர்களும் நின்றுகொண்டிருந்தனர்.

ஆவேசம் கொண்டவள் போல ஓடிச் சென்று மரத்தோடு பிணைக்கப்பட்டிருந்த இந்தியப் போர்வீரர்களின் கட்டுகளை அவிழ்க்கத் தொடங்கினாள்.

மறு விநாடி ஆங்கிலச் சிப்பாய்கள் அவளைப் பிடித்துக் கொண்டு வந்து தளபதியின் முன்னால் நிறுத்தினார்கள்!

ஸ்டோன்ஸ் அனசூயாவைக் கண்டதும் ஸ்தம்பித்துப் போய் நின்றான்!

கண்களில் கோப வெறி மிதக்க, தலைவிரி கோலமாக ரௌத்திராகாரமான ஆவேசத்தோடு, ஆங்கிலப் படையில் சேர்ந்திருந்த இந்தியப் போர்வீரர்களை ஏற இறங்கப் பார்த்தாள் அனசூயா!

"வெட்கம்! அவமானம்! தாய்நாட்டைக் காட்டிக் கொடுக்காதீர்கள்! இந்திய மக்களே! ஜான்ஸியின் வெற்றி வீரர்களே! பகைவனிடம் சரண் புகுந்து மானத்தை இழப்பதை விட, யுத்தம் செய்து வீர சுவர்க்கம் போங்கள்! ஜான்ஸி ராணியின் குடிமக்களே, ராஜத் துரோகிகளாகாதீர்!" என்று உரத்த குரலில் கர்ஜித்தாள்!

ஸ்டோன்ஸ் இப்பொழுது புரிந்துகொண்டு விட்டான். அனசூயாவின் மனத்தில் இனிமேல் காதலுக்கு இடமில்லை என்பதை அவன் கண்டு கொண்டான்!

தனது கடமையையும் சிந்தித்துப் பார்த்தான். அனசூயா அவனுடைய போர் திறனின் முன்பு துச்சமாகி விடவேண்டியதே! காதலுக்கு அங்கே இடமில்லை!

அனசூயாவின் வீர கர்ஜனையைக் கேட்டுக் கட்டுண்டிருந்த இந்தியப் போர்வீரர்கள் உயிருக்குத் துணிந்து, "வீரர்களே! இதோ, இந்தப் பெண்மணிக்கு உள்ள சுதந்திர உணர்ச்சியும், தேசபக்தியும் உங்களுக்கு இல்லையா? பகைவனுக்குக் கை கட்டாதீர்கள், எதிர்த்து



நமது 'கல்கி' பத்திரிகையின் முகில் ஏஜண்டு திரு. இராதாகிருஷ்ணனுக்கும், குளித்தலை நிலக்கிழார் திரு. இராமச் சந்திரன் செட்டியார் அவர்களின் புதல்வி திருமதி பிரேமாவுக்கும் 8-7-57ல் முசிறி யில் திருமணம் வெகு சிறப்பாக நடை பெற்றது. வாழ்க மணமக்கள்!

✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦

நின்று போராடுங்கள்! போராடுங்கள்!! போராடுங்கள்!!'' என்று ஒரே மாதிரி கூவி யழைத்தனர்.

ஸ்டோன்ஸுக்குக் கடமையுணர்ச்சி மேலோங்கியது! ஆக்ரோஷத்துடன் ''சுடுங்கள்!'' என்று கத்தினான்! அனசூயா தன்னை மறந்து ஓடினாள். ஆங்கிலேயச் சிப்பாய்களின் துப்பாக்கி முனைக்கு எதிரில் போய்நின்றாள்!

''போ, எட்டிப் போ!'' என்று கத்தினான் ஸ்டோன்ஸ்.

''போகமாட்டேன், ஸ்டோன்ஸ்! இப்போது என் மனத்தில் மயக்கமில்லை! என் சகோதரர்களைச் சுடுமுன் என்னைச் சுட்டுவிடு!''

''நீ அப்பால் போகிறாயா, இல்லையா?''

''எதற்காக? உயிருக்குப் பயந்தா?'' என்று அடித் தொண்டையில் பிளிறினாள் அனசூயா!

என்ன செய்கிறோம் என்பதை மறந்து அனசூயாவின் கையைப் பிடித்துத் தரதர வென்று இழுத்து வந்து ஒருபுறம் விட்டு விட்டு, ''சுடுங்கள்!'' என்று கரகரத்த குரலில் சொன்னான்!

டுமீல், டுமீல் டுமீல்.. ஒரே புகை!

ஓடிப்போய் ஒரு குண்டை நெற்றியில் வாங்கினாள்! ஒரு குண்டு மார்பில் பாய்ந்தது!

சுருண்டு கீழே விழுந்தாள் அனசூயா.

குண்டுபட்டு மாண்டவர் போக, மீண்டவர்கள் பொறி கலங்கி நின்றார்கள்!

அனசூயாவின் முகம் சுடர்விட்டுப் பிரகாசித்தது. அது அணையும் விளக்கின் இறுதி ஒளியல்லவா?

''வீரர்களே! உங்களுடைய சகோதரியை உங்கள் கண் முன்பு சுட்டுக் கொன்றதை—பகைவர்களால் அவள் சுட்டுண்டபடியே இறந்த கொடுமையைக் கண்ணாரக் கண்ட பிறகும் உங்கள் மனம் மாறவில்லையா? சகோதரர்களே! நமது தேசத்தைக்காட்டிலும் நமது மானத்தைக் காட்டிலும் பெரிதா உயிர்? உங்கள் சகோதரி, உங்கள் பெண், பெண்மையின் வாயால் சொல்லுகிறேன்! இதோ எனது ரத்தத்தைச் சிந்தி நான் எனது ஜன்மபூமிக்குச் செய்த—ஆம்! இயற்கையின் நியதிக்கு முன் மயக்கமுற்று—நம் படை வீரர்கள் இருக்குமிடத்தை இதோ நின்று வேடிக்கை பார்க்கும் இந்த வெள்ளைக்காரனுக்குக் காட்டிக் கொடுத்த பாபத்துக்கு என் ரத்தத்தைச் சிந்தி ஈடு செய்து விட்டேன். வீரர்களே! தாய் நாட்டின் தவப் புதல்வர்களே! தேச விடுதலைக்கு உங்கள் உயிர் தியாகம் செய்யப் படட்டும்! உங்கள் நரம்புகளில் ஓடும் ரத்தம்—இந்தியத் தாயின் ரத்தம்! ஆ! ஜான்ஸியின் வீரர்களே! போர் தொடுங்கள்! வெற்றி பெற்றால் புகழ்! இறந்தால் வீர மரணம்! பகைவனுக்குப் பணிந்து உயிரைக் காக்க முயன்ற தேசத் துரோகத்துக்கு—ரத்தம் சிந்தி, கடைசி மூச்சு வரையில் போராடுங்கள்! நாம் இன்று இறந்துபட்டாலும் நமது இந்தப் பாரத பூமி சாரமுள்ளது; உரமுடையது. நாம் சிந்திய இரத்தத்திலிருந்து எண்ணற்ற வீரர்கள் உதிப்பர். இன்றில்லாவிட்டாலும் நூறாண்டுகளுக்குப் பிறகாவது நம் தேசத்திலிருந்து அன்னியர்களை விரட்டி ஆட்சியை ஏற்றுக்கொள்வார்கள்! ராணி லக்ஷ்மிபாயின் மீது—பாரத தேசத்தின் மீது ஆணை...!''

அனசூயா உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு பேசினாள். ரத்த நஷ்டத்தால் நினைவு தடுமாறத் தொடங்கியது. ஜான்ஸியிருந்த திக்கை வெறித்துப் பார்த்தாள். சிரமத்துடன் பார்வையைத் திருப்பி, எதிரிகள் படையிலிருந்த வீரர்களைப் பார்த்து ஏதோ பேச வாயெடுத்தாள். நிமிர்ந்த தலை தொங்கி விட்டது!

அதைக் கண்ட இந்திய வீரர்களுடைய உள்ளம் சிலுப்பிக் கொண்டு எழுந்தது. மான உணர்ச்சியும் வீர உணர்ச்சியும் மேலோங்கியது! உயிருக்கும் பொருளுக்கும் ஆசைப்பட்டு, தேசத் துரோகிகளாக மாறிய தமது அவல நிலையை எண்ணித் துடித்துப் போய், கையிலிருந்த ஆயுதங்களை வீசி யெறிந்துவிட்டு வீராவேசத்துடன் அனசூயாவை நெருங்கி, ''சகோதரி! எங்கள் மயக்கத்தை அழித்த மாதரசியே! வந்து விட்டோம்! தேசத்திற்கு உயிரை, உதிரத்தை அர்ப்பணம் செய்ய இதோ வந்து விட்டோம்!'' என்றார்கள்.

''சுடுங்கள்!'' என்று கடுமை நிறைந்த ஸ்டோன்ஸின் குரல் கேட்டு அவர்கள் கம்பீரமாகத் திரும்பிப் பார்த்தார்கள்.

ஆங்கிலப் படை இந்திய வீரர்களின் உயிரைக் குடித்தது. மானத்துக்கு முன்பு உயிரைத் துரும்பாக மதித்த அனசூயாவின் வீர மொழிகளைக் கேட்டுத் திருந்திவிட்ட இந்திய வீரர்கள் சிரித்த முகத்துடன் தாய் நாட்டுக்காக உயிரைக் கொடுக்கும் பெருமையுடன் நிமிர்ந்து நின்று கொண்டார்கள்!

அந்தக் காட்சி, ஸ்டோன்ஸ் துரையை ஒரு கணம் திடுக்கிட்டுத் திகைக்கச் செய்தது.

இன்று 1957! நூறாண்டுகளுக்கு முன்பு ராணி லக்ஷ்மி பாய் ஆண்ட ஜான்ஸி நகரில் நடந்த இந்தச் சுதந்திரப் போராட்டம் பாரத நாட்டின் சரித்திரத்தின் பொன் ஏடாகப் போற்றப்படுகிறது!

# இந்தியாவிற்குப் பணியாற்ற புதிய இறக்கைகள்!




துரிதமாயும், சப்தமின்றியும், அநாயாசமாயும், மிகவும் சுகமாயும் செல்லும் இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷனின் விக்கர்ஸ் வைக்கௌண்ட் விமானத்தில் செல்லும்பொழுது உங்களுக்கு ஒரு புத்தம் புதிய அனுபவம் ஏற்படும்!

## இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன் அதன் விமானத் தொகுப்பில் டர்போ-பிராப் விக்கர்ஸ் வைக்கௌண்ட் விமானங்களைச் சேர்த்துள்ளது

**மேகமண்டலத்திற்கு உயரே சுகமான பிரயாணம்**

அபார சக்திவாய்ந்த நான்கு ரோல்ஸ்-ராய்ஸ் டர்போ-பிராப் என்ஜின்கள் கொண்டு இயங்கும் வைக்கௌண்ட் 20,000 அடிக்குமேல், அதாவது மேகமண்டலத்திற்கும் உயரே பறக்கும்பொழுது அதன் காற்றழுத்தம் செய்யப்பட்ட காபினில் உங்கள் வீட்டிலுள் இருப்பதுபோல் நீங்கள் சுகமாக இளைப்பாறலாம். நீங்கள் இதுபோல் துரிதமானதும் சுகமானதுமான பிரயாணம் செய்திருக்கவே மாட்டீர்கள்!

**ஒவ்வொருவருக்கும் வெளிக்காட்சியைப் பார்க்க வசதி**

வைக்கௌண்ட் விமானத்தில் செல்லும்பொழுது, பிரயாணிகளுக்கு சப்தத் தொல்லையே இருப்பதில்லை. விமானத்தின் அசைவும் தெரிவதில்லை. மெதுவாகப் பேசினாலும், தெளிவாகக் கேட்கலாம். சுகமானதும், அட்ஜஸ்ட் செய்யக் கூடியதுமான கைப்பிடி ஆசனங்களில் நீங்கள் நிம்மதியுடன் இளைப்பாறலாம். மற்றும் நீங்கள் எங்கு உட்கார்ந்தாலும், இதன் பெரிய ஜன்னல்களின்மூலம் வெளிக்காட்சி முழுவதையும் நன்குப் பார்க்கலாம்!

**முதன்மையானது . . . மற்றும் மேன்மையானது**

உலகிலே முதல்முதலாக டர்போ-பிராப் விமானங்களை தயாரித்தவர்களான விக்கர்ஸ் கம்பெனியார் இந்தியாவிற்குப் பணியாற்ற புதிய விமானங்கள் வழங்குவதில் பெருமை அடைகிறார்கள். வைக்கௌண்ட் மூலம் பறந்து சென்று, விமானப் பிரயாணம் எவ்வளவு சுகமானது என்பதை ஆயிரக்கணக்கான மற்றவர்களைப்போல் நீங்களும் தெரிந்து கொள்ளுங்கள்!

### வைக்கௌண்ட் பற்றிய சில விபரங்கள்:

- வைக்கௌண்ட் சாதாரணமாக மணிக்கு 320 மைல்கள் வேகத்தில் பறக்கிறது
- வைக்கௌண்ட் 44 பிரயாணிகளை ஏற்றிக்கொண்டு 1,250 மைல்கள் வரை ஒரே மூச்சில் பறந்துசெல்லக் கூடியதாகும்
- வைக்கௌண்ட் நான்கு ரோல்ஸ்-ராய்ஸ் டார்ட் டர்போ-பிராப் என்ஜின்கள் கொண்டு இயங்குகிறது
- வைக்கௌண்ட் விமானங்களை உலகெங்கும் 16 ஏர்லைன்ஸ் கம்பெனியார் உபயோகிக்கின்றனர்
- வைக்கௌண்ட் விமானங்கள் 6,00,000 'ஏர்லைன் மணி' நேரம் பறந்துள்ளன
- வைக்கௌண்ட் உலகிலே முதன்முதலாகத் தயாரிக்கப்பட்ட டர்போ-பிராப் விமானமாகும். இன்றும் விமானங்களிடையே அது தலைசிறந்து விளங்குகிறது



## இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன்

**விக்கர்ஸ்-ஆர்ம்ஸ்ட்ராங் (ஏர்கிராப்ட்) லிமிடெட்**

இந்தியாவில் பிரதிநிதிகள்:
விக்கர்ஸ் இந்தியா பிரைவேட் லிமிடெட், நெவில் ஹவுஸ், ஹோம் ஸ்ட்ரீட், பம்பாய் 1




"என்ன சத்தம்?"

"ஏன் தெரியவில்லையா?"

"யார் அது? சிரிப்புச் சத்தமல்லவா கேட்டது?"

"ஆமாம்! நான்தான் சிரித்தேன்!" என்று ஒரு குரல் கேட்டது. அக்குரலில் இருந்த கடுமையும், உறுதியும் என்னை நடுங்க வைத்தன. மனத்தைத் தைரியம் செய்து கொண்டு, "யார் நீ? ஏன் சிரிக்கிறாய்?" என்று கேட்டேன்.

உருவம் ஒன்றும் கண்ணுக்குப் புலனாகவில்லை. குரல் மட்டும் என் தலைமாட்டிலிருந்து வருவது போலத் தோன்றியது. "ஏன் நான் சிரிக்கக் கூடாதா, என்ன? மற்ற யாவரும் சிரிப்பது சந்தோஷத்தின் அறிகுறியாகக் கொள்ளும் உலகம் என்னுடைய சிரிப்பை மட்டும் வேறுவிதமாக நினைக்கிறதே, அது ஏன்?"

"நீ யாரென்பதைச் சொல்லாமலே கதை பேசுகிறாயே? நீ யார் சொல்லு!" என்று சற்று அதட்டினேன்.

"நான்தான் விதி!" என்றது குரல். பின்னும் தொடர்ந்து, "விபரீதத்தின் மறு பெயர்தான் விதியின் சிரிப்பு என்று சொல்லுகிறார்கள். வாஸ்தவம்தான்! என்னை மதியால் வெல்ல முடியும் என்று நினைத்து மனிதர்கள் தோல்வியுறும் பொழுது எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. எத்தனை எத்தனையோ காலமாக, மனித குலம் செய்து வரும் பலனற்ற செயல்களுக்காகச் சிரிக்காமல் என்ன செய்ய முடியும்? நேற்று இரவு அவ்வளவு நேரம் சர்ச்சை செய்தாயே, உனக்குப் புரியும்படியாக ஒரு கதை சொல்கிறேன், கேள்!" என்று கூறிவிட்டு என்னுடைய பதிலையும் எதிர்பார்க்காமல் விதியின் குரல் கதை சொல்ல ஆரம்பித்து விட்டது.

இரவு நானும், ஊரிலிருந்து வந்திருந்த என் தங்கையும் "சாவித்திரி" சினிமாவைப் பார்த்துவிட்டு வந்து வெகு நேரம் வரை பேசிக் கொண்டிருந்தோம். பேச்சு முற்றி வாதத்தில் இறங்கினோம். விதியைப் பற்றி வாதம் நடந்தது. 'மனிதர்களின் செயலற்ற தன்மையை மறைத்துக் கொள்ளும் கவசம்தான் விதி என்பது' என்று வெகுநேரம் நான் கட்சி பேசினேன். அப்படியே தூங்கி விட்டேன். நடு இரவில் கேட்ட ஒரு சிரிப்பொலியால் கண் விழித்தேன்.

* * *

"காளிங்கபுரம் ராமு சர்மாவைப் பற்றி உனக்குத் தெரியுமல்லவா?" என்று கேட்டது அந்தக் குரல்.

"யார்? மேலத்தெரு மந்திரமூர்த்தி ராம சர்மாதானே? நன்றாகத் தெரியுமே! ஆனால் இப்பொழுது கொஞ்ச நாளாக அதிகப் போக்குவரத்து இல்லை!" என்றேன் நான். ராமசர்மாவைப் பற்றி என்ன கதை வரப்போகிறதோ என்னும் ஆவலில் கதை கேட்கத் தயாரானேன்.

"எல்லாவிதமான வித்தைகளிலும் தேர்ச்சி மிகுந்தவர் சர்மா. உனக்குத் தெரியுமே. ஐம்பது வயதிலும்கூட எப்படி இருப்பார் என்று! தினசரி பழக்க வழக்கங்களிலும், கட்டுப்பாடுகளிலும் சரீரத்தை மிகவும் பலம் கொண்டதாகவும், தேஜஸ் மிகுந்ததாகவும் வைத்துக் கொண்டிருந்தார். கைராசியோ கேட்கவே வேண்டாம். காளிங்கபுர வட்டாரங்களிலும், ஏன், அதன் சுற்றுப்புறங்களிலும் அவருடைய பெயர் - மந்திரத்தின் மகிமை பரவி இருந்தது. 'பாம்புக் கடிக்கு அவர் மந்திரித்தால் போதும், எழுந்து உட்கார்ந்து விடுவான்!' என்று எல்லோரும் சொல்வதுண்டு.

"இதெல்லாம் எனக்குக் கேள்வியுண்டு! அதற்கு என்ன இப்பொழுது?"

என்னுடைய பேச்சில் இருந்த அசிரத்தையைக் கவனித்த விதி, "சொல்லுகிறேன், கேள்! அவசரப்படாதே! உங்களுக்கே அவசரமும், சஞ்சலமும் அதிகம்! என்னைப் பார்! எதற்காவது மாறுகிறேனா? சஞ்சலித்துத் தயங்குகிறேனா?" என்று வேதாந்தம் பேசியது.

"போதும்! உன் பிரதாபம்! மேலே கதையைச் சொல்லு!" என்றேன்.

"ராமசர்மா சர்ப்ப விஷத்தைக் கண்டிப்பதில் நிகரில்லாதவர். காளிங்கபுரத்து முருகன் சன்னதியில் உட்கார்ந்து அவர் மந்திரம் ஜெபிக்கும்பொழுது தினமும் அவர் எதிரில் ஒரு சர்ப்பம் வந்து படமெடுத்து ஆடும் என்று சொல்லுவார்கள். அவ்வளவு பரிசுத்தமான

மாந்திரீகர் அவர். அநேகமாகத் தினமும் இரண்டு பேர்வழிகளாவது அவரால் மந்திரிக்கப்படுவது வழக்கம். ஆனால் அதற்காகக் காலணா வாங்கமாட்டார்.''

''ஐயோ விதியே! உன் வாயாலேயே ஒப்புக் கொண்டு விட்டாயே! மந்திர பலம் என்பது மதி நுட்பம்தானே? விதியால் பாம்பு கடித்தாலும் மதியால் மீட்கமுடிகிறது, பார்!''என்றேன் நான்.

''இரு! ரொம்பக் குதிக்காதே! உன்னுடைய ஊகமும், தர்க்கமும், அவ்வளவும் தப்பிதமானது! பாம்பு கடித்து, மந்திரத்தின் மூலம் சுகமடைய ஒருவன் தலையில் விதித்திருந்தால்தான் அவன் சர்மாவிடம் வருகிறான். அல்லாதவன் அப்படியே மரிக்கிறான்! தெரிந்ததா? எதுவும் விதியின்றி நடக்காது!'' ஒரு வெற்றிப் புன்னகையுடன் கதையை மேலே தொடர்ந்தது விதி.

''ராம சர்மாவுக்கு வெகு நாள் கழித்து முருகனின் திருவருளால் பிறந்த



மகன்தான் குமார சர்மா! அவனுக்குச் சகல சாஸ்திரங்களையும் போதித்ததுடன்கூட, சர்மா தம்முடைய குலதனமான மந்திரங்களையும் உபதேசம் செய்து வைத்தார். உற்சாகத்துடன் பயின்ற குமாரசர்மா தந்தையை மிஞ்சியவனாக இருந்தான். தன்னுடைய மந்திர பலத்திலும், மதியூகத்திலும் அபார நம்பிக்கை கொண்டான். தனக்கு முன்பாக விதி என்ன செய்யும் என்று கருதினான். சகல தெய்வங்களும், துர்த்தேவதைகளும், நவக்கிரஹங்களும் தன்னுள் அடக்கம் என்பதுபோல் நினைத்திருந்தான். தந்தையைவிட மேலானவன் என்று பெயர் பெற்றான். நீராடி நனைந்த ஆடையணிந்து வெண்ணீறு பூசிப் பூஜைக்கு உட்கார்ந்திருப்பதைப் பார்த்தால் கார்த்திகேயனையே நேரில் காண்பதாக நினைத்தார்கள் காளிங்கபுர வாசிகள். எல்லோரும் கூடி அவனுக்கு ''சர்பராஜ்'' என்று பட்டம் வழங்கி இருந்தார்கள். குமாரசர்மா சோதிடமும் கற்றிருந்தான். எங்கோ ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களின் குணகுணங்களைப் பூலோகத்திலுள்ள மனிதர்களின் வாழ்க்கையில் புகுத்திப் பலாபலன்களைச் சொல்லிக் கொண்டிருந்தானே யொழிய, அவர்களின் தலையிலேயே இருக்கும் என்னை அடியோடு மறந்து விட்டான். அத்துடன் கூடத் தன் தகப்பனார் பரோபகாரமாகச் செய்து வந்த தொண்டைப் பணம் பண்ணுவதற்காக உபயோகிக்க ஆரம்பித்தான் குமார சர்மா. அவனுடைய மந்திர பலத்தால் சௌகரிய மடைந்தவர்கள் அவன் சாமர்த்தியத்தால் தான் தாங்கள் விஷக் கடியினின்றும் மீண்டதாகப் புகழத் தொடங்கினார்கள்.''

''ஜெயிக்கும்பொழுது தங்கள் சாமர்த்தியத்தையும், தோற்கும்பொழுது 'தலைவிதி'யையும் தானே மனிதர்கள் காரணம் கூறுவது வழக்கம்! அதுதான் மனித இயல்பு!'' என்றேன் நான்.

''ஆமாம்! அது உண்மைதான்! நல்ல சந்தர்ப்பத்தில் என் பெயரை எவனாவது சொல்லுகிறானா, பார்! 'தலைவிதியால் நன்றாக இருக்கிறான்' என்று ஒருவரும் ஒப்புக் கொள்வதில்லை! அது போகட்டும்! கதையைக் கேளு!'' என்று கூறியது விதி. அதன் குரலில் குறை தொனித்தது.

''நாளுக்கு நாள் குமாரசர்மாவின் கர்வம் ஓங்குவதை ராமசர்மா கவனித்தார். அப்படி இருக்காதே யென்று எத்தனையோ முறைகள் எச்சரித்தும் பார்த்தார். பயன் இல்லை. இப்படி இருக்கும்பொழுது குமாரனுக்குக் கல்யாணம் ஆயிற்று. ரதிதேவியைப் போன்ற பெண் பார்வதி. கல்யாணமானதும் புக்ககம் வந்து அவள் குடித்தனம் நடத்தின அழகு ஒன்றே போதும்! குமாரசர்மா மட்டும் தன் வழக்கப்படியேதான் இருந்தான். அவனுடைய குரங்குப் பிடியும், கோணல் கட்சியும்....''

''அப்படி இருக்க வேண்டும் என்பது தான் அவன் விதியோ என்னவோ?'' என்று கூறி விதியை ஏறிட்டுப் பார்த்தேன்.

''பார்த்தாயா? என்னையே மடக்குகிறாயே! அப்படித்தான் இருக்கும்! இல்லாவிட்டால் அருமைத் தந்தையும், இளம் மனைவியும் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் கேளாது உக்கிரமான மந்திரங்களை உருப்போடுவதிலும், கெடுதலான வழிகளில் பிரயோகம் செய்வதிலும் இறங்குவானா? அவனுடைய கேடு

காலம்தான் என்று சொல்ல வேண்டும். யார் விதியை யார் கண்டார்கள்!

''மூன்று வருஷங்களுக்குமுன் ஒருநாள் பங்குனி மாதம், செவ்வாய்க்கிழமை விடியற்காலம் ஐந்து மணி இருக்கும். ராமசர்மாவின் வீட்டுக் கதவு தடதட வென்று தட்டப்பட்டது. சர்மா எழுந்து கதவைத் திறந்தார். மாங்குடியிலிருந்து ஒரு வண்டியுடன் இரண்டு பேர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் வீட்டில் அன்று இரவு மூன்று மணிக்கு ஒரு கிழவியைப் பாம்பு கடித்து விட்டதாம். ஸ்மரணையே இல்லையாம்! உடனே சர்மாவையாவது அவர் மகனையாவது தங்களுடன் வர வேண்டுமென்று கூப்பிட்டார்கள். குமாரன் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தான். பார்வதி மட்டும் சத்தம் கேட்டு எழுந்து வந்தாள். அவளிடம் சொல்லி விட்டுத் தம்முடைய விபூதிப் பையுடன், வண்டியில் அவர்களுடன் புறப்பட்டுப் போய் விட்டார் ராமசர்மா.

''பொழுதுவிடிந்த பிறகு குமாரசர்மா எழுந்தான். தன்னுடைய காலைக் கடனை முடித்துக்கொண்டு பூஜை செய்ய வந்து உட்கார்ந்தான்.

''வாசலில் ''ஐயா! ஐயா!'' என்று பெரிய குரலில் யாரோ அழைத்தார்கள். பார்வதி வாசலில் சென்று பார்த்தாள். மாயனூரிலிருந்து ஒரு ஆள் வந்திருந்தான். அவனுடைய மகனை நாகம் கடித்து விட்டதாம்! உடனே வரவேண்டுமென்று குமார சர்மாவை அழைத்தான். உடனே எழுந்தான் குமாரன். தான் வந்த பிறகு பூஜையைச் செய்வதாகச் சொல்லிவிட்டுத் தன்னுடைய வண்டியைப் பூட்டிக் கொண்டு, மாயனூரார் ஆளையும் அழைத்துக் கொண்டு கிளம்பிச் சென்று விட்டான்.

''வீட்டில் ஒருவரும் இல்லை! பார்வதி வாசற் கதவைத் தாழிட்டு விட்டுச் சமையலறையில் வேலையாக இருந்தாள். அவளுக்கு அப்பொழுதுதான் பூஜைக்குத் தேங்காய் எடுத்துவைக்க மறந்துவிட்டது நினைவு வந்தது. கையில் அரிவாளை எடுத்துக் கொண்டு கொல்லைப் புறம் சென்று பின் கட்டுத் தாழ்வாரத்தில் கொட்டி யிருந்த தேங்காய்க் குவியலைப் புரட்டினாள். அம்மம்மா...அவ்வளவு தான். காலில் ஏதோ ஒன்று கவ்வியதை உணர்ந்தாள். தன் உயிரையே ஏதோ கவ்விவிட்டதாகத் தோன்றியது! நெருப்பாக எரிந்தது. ''ஐயோ!'' என்று கூவிய படி திரும்பினாள்! ஒரு பெரிய சர்ப்பம்! அது நகர்வதைக் கண்டாள். கையிலிருந்த அரிவாளை அதன்மேல் எறிந்தாள்....அதுதான் தெரியும்! பிறகு மயங்கித் தடாரென்று விழுந்தாள்.''

''அடடா! அப்புறம் என்ன ஆயிற்று?'' என்று கேட்டேன் நான்.

விதி கொடூரமாகச் சிரித்தது. அந்தப் பயங்கரச் சத்தம் என் அடிவயிற்றில் ஏதோ செய்தது.

''பிறகு என்ன? சத்தம் போடக்கூட முடியாமல் அவள் குரல் ஒடுங்கிவிட்டது. நான்கு மணி நேரம் அப்படியே கிடந்த பார்வதியின் உடலினின்றும் உயிர் பிரிந்து சென்று விட்டது. பத்து மணிக்கு மேல் மாங்குடியில் ஒரு கிழவிக்கு மந்திரித்துக் குணம் கண்டதும் ராம சர்மா களைத்துப் போய் வீட்டை அடைந்து கதவைத் தட்டினார். பதில் இல்லை. நெடுநேரம் தட்டியும் பதில் வராததால் பக்கத்து வீட்டில் சென்று விசாரித்தார். காலையில் குமார சர்மா மாயனூருக்குப் போன விவரம் சொன்னார்கள். பார்வதிவீட்டில்





இன்ஷூரன்ஸ் கம்பெனியை நம் நாட்டில் 'மரண பண்டு' என்று சொல்லுவார்கள். இன்ஷூரன்ஸ் திட்டத்தில் சேர்பவர்கள் இறந்தால்தான், அந்தத் திட்டத்தினால் பயன் என்பதாக ஒரு தவறான எண்ணம் மக்கள் கொண்டிருந்தார்கள். ஆனால் இன்ஷூரன்ஸைத் தேசிய உடைமையாக்கியதிலிருந்து இத்திட்டத்தில் சேர்பவர்களது பணம் அவர்களுக்கோ உறவினர்களுக்கோ எதிர்காலத்தில் உதவுவதோடு, நாட்டின் முன்னேற்றத் திட்டங்களுக்கும் பயன்படுகிறது. ஆகவே இன்ஷூரன்ஸ் திட்டத்தில் சேர்பவர்கள் தங்களுக்கு உதவி செய்து கொள்வதோடு நாட்டின் சுபிட்சத்துக்கும் உதவுகிறார்கள். இந்த அரும் வாய்ப்பு நாட்டின் எளிய மக்களுக்கும் கிடைக்கவேண்டும் என்று சென்ற மே மாதம் ஜனதா இன்ஷூரன்ஸ் திட்டம் என்று ஓர் திட்டத்தைத் துவக்கி யிருக்கிறார்கள். அந்தத் திட்டப்படி மாதம் ஒரு ரூபாய் சேமிக்கக்கூடியவர்களும் 'ஜனதா பாலிஸி' எடுத்துக் கொள்ளலாம். இந்தப் புது முறை ஜனதா திட்டத்தைச் சென்னை நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் சென்ற மே மாதம் 29ம் தேதி துவக்கி வைத்தார். இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷனின் தென் பகுதி மானேஜர் திரு கே. பால சுப்பிரமணியம் திட்டம் எப்படித் தொழிற்படும் என்று விளக்குவதைப் படத்தில் காணலாம்.

---

தானே இருக்க வேண்டும்! தவித்துப் போன ராமசர்மா ஒரு சிறுவனைச் சுவர் ஏறிக் குதித்துக் கதவைத் திறக்கச் செய்து உள்ளே சென்றார். 'பார்வதி! பார்வதி!' என்று கூப்பிட்டார். எங்கும் அவளைக் காணோம். கூவியபடி பின்கட்டுக்குச் சென்ற சர்மா வழியில் பார்வதி கீழே விழுந்து கிடப்பதைக் கண்டார். சந்தேகத்துடன் குனிந்து அவளைப் பார்த்த சர்மா திடுக்கிட்டு அலறினார்! உயிர்ப் பின் சின்னமே இல்லாமல் அவளுடைய தங்க மேனி நீலமாகி யிருந்தது. அவளுக்குச் சற்றுத் தொலைவில் ஒரு பெரிய நாக சர்ப்பம் தலை துண்டிக்கப்பட்டுக் கிடந்தது. விஷயம் விளங்கி விட்டது சர்மாவுக்கு! எத்தனையோ தலைமுறைகளாகத் தங்களுக்குக் கட்டுப்பட்டு இருக்கும் சர்ப்பராஜன் இன்று பழி தீர்த்துக் கொண்டு விட்டான்! எங்கோ எதிலோ தவறு நடந்துவிட்டது! அபசாரம் என்ன என்று அவர் புரிந்துகொண்டு விட்டார்! 'பார்வதி! பார்வதி!' என்று கதறினார். முட்டிக் கொண்டார்! பலன்?...

"குமார சர்மாவுக்கு ஆள் போய் அழைத்து வந்தான். பதறிக்கொண்டு ஓடிவந்தான். பார்வதியின் நிலை கண்டு அலறித் துடித்தான். அவன் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை.... எல்லாம் முடிந்து விட்டது.

"தங்கள் இருவருடைய மந்திர, தந்திர சாமர்த்தியங்களை யெல்லாம் பயன்படுத்திக் கொள்ளாமல், அதற்கு ஒரு வாய்ப்புக்கூடக் கொடுத்துப் பார்க்காமல்-தன் அருமை மனைவி தன்னை விட்டுச் சென்றதைக் கண்டபின் தான் குமார சர்மா, 'விதி' என்று ஒன்று இருக்கிறது, அதை வெல்ல முடியாது என்பதை ஒப்புக் கொண்டான்!" என்று கதையை முடித்துவிட்டு மறுபடியும் சிரித்தது விதி.

"போதும், நிறுத்து! உன் சிரிப்பைக் கண்டால் எனக்குப் பயமாக இருக்கிறது!" என்று கூவியபடி எழுந்து உட்கார்ந்து கொண்டேன்.

"கனவு கண்டாயா, என்ன? ஏதேதோ பிதற்றுகிறாயே!" என்று கேட்ட என் கணவருக்குப் பதில் சொல்லக்கூட முடியாமல் என் மனம் திகில்பட்டுக் கொண்டிருந்தது. பிறகு தூக்கமே வரவில்லை.

பொழுது விடிந்து என் தங்கையிடம் விதி சொன்ன கதையை முழுவதும் சொன்னேன். நிதியும், மதியும் நிறைந்து இருந்தும்கூட "நல்விதி" மட்டும் அற்றவளான பார்வதியை எண்ணி யெண்ணி என் மனம் உருகிற்று.




கப்பல் என்றுமே — மெல்லக்
கடலில் நீந்துவதாம்
தப்பித் தப்பியே — ரயிலும்
தரையில் ஊருவதாம்

வானமீதேறுவேன் — அங்கே
வட்டம் சுற்றிடுவேன்
கானம் மலையெல்லாம் - யானோர்
கணத்தில் தாண்டிடுவேன்

நன்மை செய்யவந்தேன் - அதை
நன்குணராமல்
உன்னைப் போரினிலே - இழுத்து
மாட்டிவிட்டாரையோ

தீவினை செய்ய — என்னைத்
தினமும் ஏவுகிறார்
பூவுலகமெல்லாம் — சுட்டுப்
பொசுக்கச் சொல்கிறார்

அன்பைக் கொன்று விட்டார்-மனிதர்
அரக்கராகி விட்டார்
துன்பம் செய்திடவே— இன்று
துணிந் திறங்கி விட்டார்

சாந்தமூர்த்தியின் - அகிம்சா
தருமம் மேற்கொண்டு
மாந்தர் இவ்வுலகில்-நன்றாய்
வாழ்வதெந்நாளோ?

— கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

## அரசகுமாரி
# ஆயிஷா

கதை: 'கௌசிகன்'
படம்: 'பாபு'

(6)



கழுகின் பிடியில் சிக்கிய காசிம் அது பறந்து சென்ற வேகத்தில் திக்குமுக்காடிப் போனான். தன்னைக் கொன்று தின்பதற்குத்தான் கொண்டு போகிறது என்று நடுங்கியது அவன் மனம். கழுகு காசிமை மேலே மேலே தூக்கிக் கொண்டு பனி மூடிய மலை முகடுகளைக் கடந்து மறுபக்கத்தில் வேகமாக இறங்கிற்று. காசிமுக்கு மூச்சுத் திணறியது.



கழுகு காசிமை மெதுவாகத் தரையில் கொண்டு வைத்தது. தனது உறுதியான அலகினால் அது தன்னைக் கொத்திக் கொல்லப் போகிறது என்று நினைத்தான் காசிம்.



பயத்தினால் கண் மூடிப் படுத்துக் கிடந்த காசிம் வெகுநேரமாகியும் ஒன்றும் நேராததைக் கண்டு கண்களைத் திறந்து நிமிர்ந்து பார்த்தான். கழுகு கூச்சலிட்டபடி பறந்து



போய்க் கொண்டிருப்பதைக் கண்டு வியப்படைந்தான். கழுகு தன்னைக் கொல்லாதது மட்டுமல்ல, கடக்க முடியாத சிகர மலையையும் கடந்து கொண்டு வந்து விட்டது.



தன் அதிர்ஷ்டத்தை எண்ணி சந்தோஷமடைந்தாலும் அவன் பயம் நீங்கவில்லை. பறந்து சென்ற கழுகு திரும்பி வந்து விட்டால்? திரும்பிப் பார்க்காமல் ஓடலானான்.





அவன் திரும்பிப் பார்த்திருக்கலாம் தூரத்தில் இரண்டு பூதாகாரமான கரிய உருவங்கள் பாறையின் மீது உட்கார்ந்திருப்பது அவன் கண்ணில் பட்டிருக்கும். அது வேறு

யாருமல்ல பார்க்கும் திறமையற்ற பச்சைப் புகை பூதமும் இவனைத் தூக்கி வந்த பேரண் டிறகக் கழுகும்தான். 'விதியை வென்ற அதிசயங்களால் மனிதர்களுக்கு உதவமுடியாது.



ஆனால் தன் கண்பார்வையைக் கொண்டு அதனால் உதவி செய்ய முடியும்' என்று சங்கைப் பார்த்துக் கண் சிமிட்டியபடி சொல்லிற்று பூதம். கழுகும் அதை ஆமோதிப்பது போலத் தலையை ஆட்டிற்று. காஸிம் ஓடி ஓடி ஜ்வலிக்கும் மணல் நிறைந்த பயங்கரமான பாலைவனத்தின் எல்லையை அடைகிறான்.





பாலைவனத்தைப் பார்க்கவே கண்களைக் கூசியது. ஜகஜ்ஜோதியான வெளிச்சம் பார்வையைக் குருடாக்கியது. நெருப்புப் பிழம்புகள் காட்சியளித்த பிரதேசத்தைக்

காண சகியாமல் கைகளால் கண்களைப் பொத்திக் கொண்டு ஒரு பாறையின் நிழலில் உட்கார்ந்து எப்படி இந்த மணல் வெளியைக் கடப்பது என்று சிந்திக்கலானான்.

(தொடரும்)

# பாலர் மலர்

## செய்து பாருங்கள்




எட்டு அங்குல நீளம், மூன்று அங்குல அகலம் ஒரு கனத்த அட்டையில், படத்தில் உள்ளதுபோல் கோடு இழுக்கவும். பிறகு அந்த உருவத்தைக் கத்திரித்து எடுத்து ஒரு கனத்த புஸ்தகத்தின்மேல் படத்தில் காட்டியபடி வைக்கவும். பிறகு ஒரு எலாஸ்டிக் ரப்பரைப் புஸ்தகத்தின் ஒரு மூலையில் மாட்டி, அதன் ஒரு மூலையை ரப்பரினுள் செலுத்தி எலாஸ்டிக்கை இழுத்து விட்டால் அது மேலே சென்று திரும்பி உங்கள் காலடியிலேயே வந்து சேரும். புத்தகத்தைச் சற்று மேல், நோக்கி, வையுங்கள்.





“இட்டு! வா, வரக்கொத்தவரங்காய் மாதிரி இருக்கே!”

“ஆமாம், அதுதாண்டா, நான் எங்கள் வீட்டுச் சமையற்காரன் கண்ணிலேயே படாமல் இருக்கிறேன்.”



விச்சுவும் விசாலமும் சினிமாவுக்குப் போக நினைத்தார்கள். தகப்பனாரிடமிருந்து அதற்கும் பணம் வாங்குவது அவ்வளவு சுலபமல்ல. அதற்கு ஒரு யோசனை செய்தார்கள். ஒரு விளக்குத் தண்டை எடுத்துப் போய், “நாங்கள் இந்த விளக்குத் தண்டைக் கீழே வைக்கிறோம். நீங்கள் தாண்டிவிட்டால் நாங்கள் தோற்றோம். தாண்டாவிட்டால் நீங்கள் எங்களைச் சினிமாவுக்கு அழைத்துப் போக வேண்டும்” என்றான். அதற்கு அப்பா இசைந்தார். விச்சு அதைச் சுவரின் மூலையில் வைத்து விட்டான். இனி தாண்டுவதற்கு இடம் இருந்தால்தானே? அப்பாவும் தோற்றார். குழந்தைகளும் சினிமா போய்ப் பார்த்தார்கள்.



சாமா

## 19. தண்டனை கிடைத்தது!

மால்கோஷும் கலாவும் தாங்கள் தான் அவர்களுக்குப் பொம்மையி லிருந்து உயிர் கொடுத்தவர்கள் என்று அறிவித்ததும் அரண்மனைச் சேவகர்கள் அவர்களைப் பைத்தியம் என்றே கருதிச் சிரித்தார்கள் அல்லவா?

அவர்கள் சொல்லுவதைக் கேட்டு மால்கோஷுக்குக் கோபம் வந்தது. "அனுவசியமாகப் பேசி எங்களை வழி மறிக்காதீர்கள். நாங்கள் அரண்மனை யில் அரசனுக்கு எதிரில் நடந்து கொண்டிருக்கும் நாட்டியக் கச்சேரியை யும், சங்கீதக் கச்சேரியையும் கேட்க ஆவல் கொண்டிருக்கிறோம். நீங்கள் உடனே அரசனிடம் சென்று நாங்கள் வந்திருப்பதாகச் சொல்லுங்கள். அவர் இப்பொழுது அரசனுக இருப்பதற்கு நாங்கள்தான் பொறுப்பாளி என்று அறிந்தவுடன் எங்களை உடனே உள்ளே வரக் கட்டாயம் அனுமதிப்பார். போங் கள், சீக்கிரம். கச்சேரி முடிந்துவிடப் போகிறது!" என்றான் மால்கோஷ்.

உடனே ஒரு சிப்பந்தி சிரித்துக் கொண்டே அரசனிடம் சென்றான். அப்பொழுது அரசனுக்குப் பக்கத்தில் மந்திரிகளும் மற்றவர்களும் வீற்றிருந் தார்கள். அரசனுக்கு எதிரில் மிகவும் அழகான பெண் பக்க வாத்தியங்க ளுடன் நாட்டியம் ஆடிக் கொண்டிருந் தாள். சற்றுத் தூரத்துக்கு அப்பால் ஒரு சங்கீத கோஷ்டியார் அருமை யாகப் பாடிக் கொண்டிருந்தார்கள். அதற்கும் சிறிது தூரத்தில் வாத்தி யங்கள் முழங்கிக் கொண்டிருந்தன. பொம்மைப் பட்டணத்தில் எப்படி எப் படிக் காணப்பட்டனவோ, அவை யெல்லாம் அப்படியே இருந்தன.

சிப்பந்தி அரசனிடம் மால் கோஷ் கூறியதைச் சொன்ன வுடன், அரசன் கடுங்கோபம் அடைந்தான். "என்ன அரச னுக்கியவர்களா? இதைக் கேட்க வேடிக்கையாக அல்லவா இருக்



கிறது ? உடனே அவர்களை என் எதிரில் அழைத்து வாருங்கள்!'' என்றான். உடனே அரசன் எதிரில் மால்கோஷையும், கலாவையும் கொண்டு வந்து நிறுத்தினர் சேவகர்கள்.

''நீங்கள் யார்? உங்கள் பெயர் என்ன?'' என்று கேட்டான் அரசன்.

''என் பெயர் மால்கோஷ். இவள் என்னுடைய தங்கை கலா'' என்றான் மால்கோஷ்.

''இந்த அரண்மனைக்கு நீங்கள் வந்த காரணம் என்ன ?''

''அரண்மனையில் நடக்கும் உன்னத நாட்டியங்களையும் இனிமையான சங்கீதக் கச்சேரிகளையும்கேட்க ஆவலுடன் வந்தோம் !''

''அப்படி வருகிறவர்கள் என் அனுமதியை முன்பே பெற்றுக் கொள்ளாமல், என் சிப்பந்திகளிடம் ஏதோ பிதற்றினீர்களாமே. என்னை யார் என்று நீங்கள் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை !''

''உங்களைத் தெரியாமல் நாங்கள் எப்படி இருக்க முடியும்? இந்த இடத்தில் சற்று முன்பு மரப் பொம்மையாக உயிரற்று உட்கார்ந்திருந்தீர்கள். நாங்கள் எங்களிடத்தில் உள்ள மந்திர சக்தியினால் பொம்மை ராஜாவை உயிருள்ள ராஜாவாக ஆக்கினோம் !'' என்றான் மால்கோஷ்.

மால்கோஷ் சொல்லியதைக் கேட்ட அரசனுக்கு மிகவும் கோபம் வந்தது. ''என்ன அநியாயம் ! இம்மாதிரி என் எதிரிலேயே சொல்லுவதற்கு உனக்கு என்ன தைரியம் ? என்னை என் மந்திரிகளின் முன்னிலையிலும் மற்றப் பிரஜைகளின் முன்னிலையிலும் அவமதித்து விட்டாய் ! இதற்குரிய தண்டனையை நீ ஏற்கவேண்டும். மந்திரிகளே! இவர்கள் இருவருக்கும் என்ன தண்டனை விதிக்கலாம், சொல்லுங்கள் !'' என்றான்.

''எங்களுக்குத் தண்டனை எதற்காக விதிக்க வேண்டும் ? நாங்கள் உண்மையைச் சொல்லியதற்காகவா தண்டனை ? அதுவும் பொம்மை மந்திரிகளாக இருந்தவர்களை உயிருள்ள மந்திரிகளாக நாங்கள் மாற்றினோம். அவர்களிடமே எங்களுக்குத் தண்டனை விதிக்க ஆலோசனை கேட்கிறீர்கள்! இதுதான் உலகம்'' என்று மால்கோஷ் சொன்னதுதான் தாமதம்; மந்திரிகளும் கோபமடைந்து தாங்கள் உட்கார்ந்திருந்த ஆசனத்தை விட்டு எழுந்தார்கள்.

''என்ன அநியாயம்! நீங்கள் இந்த வாலிபன் சொல்லியதை எப்படிக் கேட்டுப் பொறுத்துக் கொண்டிருக்கிறீர்கள்? பொம்மை ராஜாவாக இருந்த உங்களை உண்மையான உயிருள்ள அரசனாக ஆக்கினதாகச் சொன்னான். பிறகு எங்களையும் உயிருள்ள மந்திரிகளாக்கினேன் என்கிறான். சற்றுப் போனால்......'' என்று மந்திரிகள் சொல்லி முடிப்பதற்குள் மால்கோஷ்






குறுக்கிட்டான். "சற்றுப் போனால் என்ன, இப்பொழுதே சொல்லுகிறேன். சிறிது நேரத்துக்கு முன்பு பொம்மைப் பட்டணமாகக் காட்சி அளித்த இந்த மாயப் பட்டணத்தை உயிருள்ள உண்மையான பட்டணமாக ஆக்கியவர்கள் நானும் என் தங்கையும்தான்! அதற்குச் சந்தேகமில்லை. எப்படி உயிர் கொடுத்தோம் என்று உங்களிடம் இப்பொழுது நிரூபிக்க முடியாமல் இருக்கிறோம்!" என்றான் கோபத்துடன்.

"போதும், போதும். நீங்கள் பைத்தியக்காரர்களைப்போலப் பேசுகிறீர்கள். ஒரு நகரத்தை உண்டாக்கி, அந்த நகரத்தில் வசிப்பவர்களுக்கும் நீங்கள் கடவுளைப்போல உயிர் கொடுத்தீர்கள் என்று சொன்னால் யாராவது சிரிக்கப் போகிறார்கள்!" என்று அரசன் சொல்லிக்கொண்டே இருக்கும்பொழுது யாரோ இரண்டு அரண்மனைச் சிப்பந்திகள் அரசன் முன்னிலையில் வேகமாக ஓடி வந்தார்கள்.

"அரசே, அரசே! என்ன அநியாயம். நமது நகரத்தில் உள்ள பெரிய நதியைக் கடப்பதற்காகப் பாலம் கட்டப்பட்டிருந்ததே, அது திடீரென்று உடைந்துபோய் விட்டது. அப்பொழுது பாலத்தின்மீது போய்க் கொண்டிருந்த வண்டிகள் மாடுகளுடன் தண்ணீரில் விழுந்து விட்டன. பாலத்தின் மீது போய்க் கொண்டிருந்தவர்கள் அலை வரும் நதியின் வெள்ளத்தில் விழுந்து விட்டார்கள்!" என்று தெரிவித்தார்கள்.

"அப்படியா, ஒரு நல்ல பாலம் திடீரென்று விழுவதற்குக் காரணம் என்ன? மந்திரிகளே! சொல்லுங்கள், சீக்கிரம்!" என்று கோபத்தினால் குதித்தான் அரசன்.

"மால்கோஷும் கலாவும்தான் இதற்குப் பொறுப்பு ஏற்க வேண்டும்" என்றார்கள் மந்திரிமார்கள்.

"அரசே! பாலம் உடைந்ததற்கு நாங்கள் பொறுப்பாளிகள் அல்ல. நாங்கள் இந்நகரத்துக்கு உயிர் கொடுப்பதற்கு முன்பே அந்தப் பாலம் உடைந்துதான் இருந்தது!" என்றான் மால்கோஷ்.

அந்தச் சமயத்தில் சில அரண்மனைச் சேவகர்கள் ஓடி வந்து, "அரசே! அரசே! அநியாயம்! நமது பட்டணத்தில் உள்ள பெரிய ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஆற்றின் கரையில் உடைப்பு எடுத்து விட்டது. அதனால் தண்ணீர் பல கிராமங்களில் பாய்ந்து உயிர்களுக்கும், பயிர்களுக்கும் சேதம் விளைவிக்கிறது. இதை உடனே தடுக்காவிட்டால் மேலும் ஆபத்து அதிகரிக்கும்!" என்று கதறினான்.

"என்ன! நதி உடைப்பு எடுத்துக் கொண்டதா? இதற்குப் பொறுப்பாளி நீதான் மால்கோஷ்! ஏன் நல்ல பலமான கரைகளாக நதிக்கு இரு பக்கங்களிலும் அமைத்திருக்கக்கூடாது? சொல், சீக்கிரம்" என்று அரசன் கர்ஜனை செய்தான்.

உடனே மால்கோஷ் "அரசே, அதற்கு நாங்கள் என்ன செய்வது? நாங்களா கரை அமைத்தோம்? இல்லவே இல்லை. பொய்க் கரையை உண்மையாக்கினோம். கரை ஏற்கனவே உடைபட்டுத்தான் இருந்தது. அதை நாங்கள் எங்கள் கண்களாலேயே பார்த்தோம்" என்றான்.

"இது நியாயமா! உன் கண்களினாலேயே உடைந்த கரையைப் பார்த்து விட்டு அதைச் செப்பனிடாமல் அப்படியே உண்மையாக்கினாயா? அது மன்னிக்க முடியாத குற்றம்" என்று அரசன் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது அந்தப்புரத்துத் தாதிகளும் ராணியும் அழுதுகொண்டே ஓடி வந்தார்கள்.

"என்ன நேர்ந்தது? ஏன் இப்படி எல்லோரும் அழுகிறீர்கள்?" என்று பதற்றத்துடன் கேட்டான் அரசன்.

"ஐயோ, மகாராஜா! அரசகுமாரியின் அழகிய கை ஒடிந்திருக்கிறது. அதை என்னால் சகிக்கவே முடியவில்லை!" என்று ராணி விம்மிக்கொண்டே சொன்னாள்.

"அடே, உன்னால்தான் இக் கொடுமை ராஜகுமாரிக்கு நேர்ந்திருக்கிறது! உண்மையைச் சொல்" என்று சீறினான் அரசன்.

"அரசே! இது விஷயம் எனக்குத் தெரியாது. அரசகுமாரி பொம்மையாக இருக்கும்பொழுதே அவளுடைய கை உடைந்திருப்பதைப் பார்த்தோம். பொம்மையாக இருக்கும்பொழுது அதன் கையை உடைத்தது யார் என்று விசாரித்து அவர்களுக்குத் தண்டனையைக் கொடுங்கள்! அதுதான் நியாயம்!" என்றான் மால்கோஷ்.

"நியாயத்தைப்பற்றி எனக்குத்தெரியும். நீ சொல்வது உண்மையாயிருந்தால், பொம்மையாயிருந்த ராஜகுமாரியின் கை ஒடிந்திருப்பதை அறிந்தும் நீ அவளுக்கு உயிர் கொடுத்து எல்லோரையும் வேதனைக்கு ஆளாக்கினாய் என்று முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. ஆகவே, அதற்கு உனக்குக் கடும் தண்டனை விதிக்க வேண்டும்..." என்று அரசன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, கையிழந்த ராஜகுமாரி ராஜசபைக்கு ஓடி வந்தாள். "அப்பா! இவர்கள் யோசியாமல் செய்த காரியத்துக்குச் சரியான தண்டனை ஆயுள் தண்டனைதான். ஆயுள் முழுவதும் சிறைச்சாலையில் இருந்தால்தான் அவர்கள் செய்த பிழையை அவர்களே உணர்ந்து வருந்துவார்கள்.." என்று கூறினாள்.

உடனே அரசன், அரச குமாரியைத் தடவிக் கொடுத்து, "நீ சொல்லியபடியே இவர்கள் இருவரும் இவர்களது ஆயுள் காலம் வரையில் சிறையில் இருக்கும்படி உத்தரவு இடுகிறேன்" என்றான்.

உடனே ராஜசேவகர்கள் மால்கோஷையும், கலாவையும் சிறைக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். *(தொடரும்)*

அத்தியாயம் 43

## கொடிகள் ஆடின

ஜயந்தியும், மாதவியும் அன்றுமுதல் இணைபிரியாமல் இருந்து வந்தார்கள். ஜயந்திக்கு மாதவி தன்னுடன் இருப்பது ஆறுதலாக இருந்தது. மாதவிக்கும் மலைச்சாரல் பங்களாவில் தன்னந்தனியாக இருக்கப் பிடிக்கவில்லை. அங்கே இருந்தால் தனக்குப் பைத்தியமே பிடித்துவிடும் என்று அவள் எண்ணினாள்.

சித்தப்பா முகுந்தன் ஏதாவது தவறாக எண்ணிக் கொள்வாரென்று அன்று கோவிந்தனிடம் சொன்னாளே தவிர, உண்மையில் மாதவிக்கு அந்தப் பயம் இல்லை. சித்தப்பா என்ன நினைத்தால் தான் என்ன? அவரால் தன்னுடைய துயரத்தைக் குறைத்துவிட முடியுமா, என்ன? இத்தனை நாள் அவர் தவறாக நினையாதது எதுதான் இருக்கிறது? என்பது அவளுடைய எண்ணம். ஆகவே அதை அவள் சிறிதும் பொருட்படுத்தவில்லை.





ஆயினும் இரண்டு நாட்களுக்குப் பிறகு ஜயந்தியிடம், ''நான் எவ்வளவு நாட்கள் இங்கே இருக்க முடியும் ஜயந்தி? நான் வீட்டுக்குப் போகிறேன்'' என்றாள். ஜயந்தி தன்னிடம் பிரியமாக இருக்கிறாள் என்ற காரணத்தினால் விஜய ராகவனின் வீட்டில் ரொம்ப நாட்கள் இருப்பது அவளுக்குச் சரியென்று படவில்லை. மேலும் ஜயந்தியின் சின்னம்மாவுக்குத் தான் அங்கு இருப்பது பிடிக்காது என்று உள்ளுணர்வு கூறியது.

ஜயந்திக்கு அதைக் கேட்டதும் கோபம் வந்து விட்டது. ''சரி, அக்கா! நீங்களும் போய் விடுங்கள்'' என்று வெடுக்கென்று பதில் சொன்னாள்.

'' ஏனம்மா கோபித்துக் கொள்கிறாய்? நான் நியாயத்தைத்தானே சொன்னேன் '' என்றாள் மாதவி.

'' நீங்கள் மலைச்சாரல் பங்களாவில் போய்த் தன்னந்தனியாக இருப்பது ரொம்ப நியாயமா அக்கா? அதுவும் இந்தமாதிரி சமயத்தில் தனியாக இருக்கலாமா? உங்கள் சித்தப்பா வீட்டாருக்கு அக்கறையைக் கைது செய்திருப்பதால் உங்களிடம் கோபம். அவர்களும் அங்கே வருவதில்லை. சிவசங்கரனும், அவர் தாயாரும் ஊரில் இல்லை. அப்பாவுக்கு உடம்பு சரியாக இல்லை. என்னை இந்த அறையை விட்டு நகரவிட மாட்டேனென்கிறார்கள். இப்படி எல்லாமே ஒரே குழப்பமாக இருக்கும்போது நீங்கள் அந்தப் பங்களாவில் தன்னந்தனியாக இருப்பதாகச் சொல்கிறீர்களே, இது நியாயமா?'' என்று பொரிந்து தள்ளினாள் ஜயந்தி.

மாதவி ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஜன்னல் வழியாக எதையோ வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பிறகு, ''உன் சின்னம்மா நான் இங்கே இருப்பதை விரும்புவாரா ?'' என்று கேட்டாள் மாதவி.

"ஓ! அதற்குத்தான் இவ்வளவு பீடிகை போட்டீர்களா? அதை முன்னமேயே சொல்லக் கூடாதா? நான் முதலில் சின்னம்மாவிடம் கேட்டு விட்டேன். நீங்கள் இங்கே இருப்பதில் தனக்குச் சந்தோஷந்தான் என்று சொல்லிவிட்டாள். அது என்னுடைய கவலை அல்லவா? நிம்மதியாக இருங்கள் அக்கா. சிவசங்கரன் திரும்பி வரும் வரையில் இங்கேயே இருங்கள். அதன் பிறகு அவர் கூறுவது போல் செய்து கொள்ளலாம்" என்று சமாதானப்படுத்தினாள் ஜயந்தி.

மாதவி அங்கே இருக்க விரும்பாததற்கு இன்னொரு காரணமும் இருந்தது. அதை ஜயந்தியிடம் சொல்ல அவள் விரும்பவில்லை.

கோவிந்தன் ஜயந்தியையும், மாதவியையும் பார்க்க அடிக்கடி வருவார்.



சில சமயம் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து தகவல்கள் கொண்டு வருவார். அவர்களுடன் அனுதாபத்துடன் பேசிக் கொண்டிருப்பார்.

கோவிந்தனிடம் ஜயந்திக்குச் சற்று வெறுப்பு ஏற்பட்டிருந்தது. கருணாகரன் கோவிந்தனைப் பற்றிக் குறிப்பிட்டுக் கடிதம் எழுதியது முதல் அவளுக்குக் கோவிந்தனுடன் பேசிப் பழக விருப்பமில்லாமல் போய்விட்டது. 'இவரோடு நான் பழகியதால்தானே அவர் என்னைப் பற்றித் தவறாக எண்ணிக் கொண்டார்' என்று வருத்தப்பட்டாள்.

'கோவிந்தன் மீது என்ன தவறு? இப்படிப்பட்ட பைத்தியக்காரத்தன எண்ணம் அவர் உள்ளத்தில் அல்லவா எழுந்தது; அப்படி நினைத்தவரிடம் தானே கோபம் வரவேண்டும்?' என்று தன்னையே கேட்டுக் கொண்டாள் ஜயந்தி. ஆனாலும் அவளுக்குக் கோவிந்தனிடம் பழகப் பிடிக்கவில்லை. ஆகவே கோவிந்தன் வந்தால் மாதவியைப் பேச வைத்து விட்டுத் தன் அறைக்குச் சென்று விடுவாள். மாதவி எவ்வளவு நேரந்தான் கோவிந்தனுடன் பேசிக் கொண்டிருக்க முடியும்? இது அவளுக்குத் தர்மசங்கடமாக இருந்தது. தன்னைப் பற்றி ஜயந்தியின் வீட்டார் ஏதாவது எண்ணிக் கொண்டால் என்ன செய்வதென்று பயந்தாள். கோவிந்தனோ வந்தால் சீக்கிரம் போக மாட்டார். ஜயந்தியின் அறைக்கு முன்னால் இருந்த திறந்த வெளியில் உட்கார்ந்துகொண்டு மணிக்கணக்காகப் பேசுவார். அவர் சென்ற பிறகு அவர் என்ன பேசினாரென்பது மாதவிக்கு நினைவில் இருக்காது. ஆனாலும் நிமிஷம்கூட ஓயாமல் பேசிக் கொண்டிருப்பார். இதனால் மாதவிக்கு அங்கிருப்பது பிடிக்காமல் போயிற்று.

ஜயந்தியின் அறைக்கு முன்னால் ஒரு வராந்தா இருந்தது. அதன் கூரையைத் தாங்குவதற்காக நிறுத்தியிருந்த தூண்கள் மழமழ வென்று தந்தத்தால் செய்த மாதிரி காட்சியளித்தன. அந்த நான்கு தூண்களுக்கு இரு பக்கத்திலும் சில பூந்தொட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. மூன்று சங்கிலிகளால் பிணைத்த மண் தொட்டிகள் மேலேயிருந்து தொங்கிக் கொண்டிருந்தன. அவற்றிலிருந்து கரும் பச்சை நிறமுள்ள கொடிகள், ஊதா நிறப் புஷ்பங்களுடன் கீழ்நோக்கி வளர்ந்து மண் தொட்டியை மறைத்தன. காற்றடிக்கும் போது அந்த ஊஞ்சல் தொட்டிகள் ஆடுவது மிக அழகாக இருந்தது. அவ்வப்போது அந்தத் தொட்டிகளில் வந்து உட்கார்ந்து ஊஞ்சலாடிய சிட்டுக் குருவிகளைக் கண்டால் மனத்தில் இன்பம் சுரந்தது.

மாலை வெய்யிலின் பொன்னொளியினால் அந்தப் பூந்தொட்டிகளின் நிழல்கள் ஜயந்தியின் அறை ஜன்னல் திரையின் மீதும், சுவரின் மீதும் விழுந்து ஆடி அசைந்து விளையாடின. ஏதோ ஒரு கைதேர்ந்த சித்திரக்காரனின் நிழல் படத்தைப் பார்ப்பது போல அவை தோற்றமளித்தன.

இந்த வராந்தாவின் எதிரே பெரிய திறந்த வெளி முற்றம் இருந்தது. அதிலும் பலவித செடி கொடிகள் வைத்து, அலங்காரம் செய்யப்பட்டிருந்தது.

ஜயந்தியின் அறைக்கு இடது பக்கத்தில் முற்றத்துக்கு நேர் எதிரே பெரிய ஹால் இருந்தது. நீல நிறப் பூக்கள் நிறைந்த அழகிய திரைகள் அந்த ஹாலின் ஜன்னல்களையும், கதவுகளையும் அலங்கரித்தன.



# மாஸ்டா பல்புகள்



பிரகாசம்
அதிகம்
நீடித்து
உழைக்கும்










அஸோஸியேடெட் எலெக்ட்ரிகல்
இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா)
பிரைவேட் லிட்.

6, மிஷன் ரோ, கல்கத்தா



கிளை ஆபீஸ்கள்:
பம்பாய்
புதுடெல்லி
மதராஸ்
பெங்களூர்
கோயம்புத்தூர்

AIC-174 TM

---




அக்கௌன்ட்
புக் தயாரிப்பவர்களுக்காக
புக் பைண்டிங்
செய்பவர்களுக்காக
பிரின்டர்ஸ்களுக்காக

தி ஸ்டான்டர்ட் மில்ஸ் கோ. லிட், நியு பிரபாதேவி ரோட்,
பம்பாய் 28.

SM-S-S-TAM



கெட்டியாயும் பாங்கான தோற்றத்துடனும் விளங்கும் ஆல்வின் பைலிங் காபினெட், அலுவலகத்தின் அலாதி 'கள'யையும் கவர்ச்சியையும் கூட்டும். அதன் டிராயர்களை இழுக்கும் பொழுது அவைகள் சப்தமிடாமல் சுகமாக இயங்குகின்றன.

---

## ஆபீஸ் பைலிங் காபினெட்டுகள்

---

தீ, திருடு மற்றும் பூச்சிகளிலிருந்து இதற்குள்ளிருக்கும் பொருள்கள் நன்கு பாதுகாக்கப்படுகின்றன. நீங்கள் ஆபீஸ் பர்னிச்சர் வாங்கும்பொழுது ஆல்வினை முதலாவது தேர்ந்தெடுங்கள். விஷயமறிந்தவர்கள் செய்வது இதுவே!

பல்வேறு கார்டு ஸைஸ்களுக்கு ஏற்றவாறு, 1, 2, 4 மற்றும் 6 டிராயர்கள் கொண்டுள்ள கார்டு இன்டெக்ஸ் காபினெட்டும் உள்ளன. டிராயர் பாக்ஸ்கள் 10½"X5"X15" ஸைஸ்களில் உள்ளன. முழுத்தாள் ஸைஸ் அளவிற்கு வேண்டுமென்றால், இவைகள் லேபில்-ஹோல்டர்கள் மற்றும் இறுக திரையிடப்பட்ட மூடியுடன் உள்ளன.

# ஆல்வின் தற்காலத்திய அபிவிருத்திகள் யாவும் கொண்டது



உங்களுக்கு அருகிலுள்ள வியாபாரியை சந்திக்கவோ அல்லது விபரங்கடங்கிய புத்தக தொகுப்பிற்கு எழுதவோ செய்யுங்கள்.

டிஸைன் மற்றும் உறுதிக்கு

# ஆல்வின்

புகழ்பெற்ற பர்னிச்சர்



ஹைதராபாத் ஆல்வின் மெட்டல் ஒர்க்ஸ் லிட்.,
ஸனத்நகர் ஹைதராபாத்-18.

---

HAM 57 4 TM.

சென்னை, கேரள மற்றும் ஆந்திர ராஜ்யங்களுக்கு ஏஜண்டுகள்
மெஸர்ஸ் அடிஸன் அண்டு கோ. பிரைவேட் லிட்., 158, மவுண்ட் ரோடு, சென்னை-2
விஸ்தரிக்கப்பட்ட மைசூர் ராஜ்யத்திற்கு ஏஜண்டுகள்
மெஸர்ஸ் அடிஸன் அண்டு கோ. பிரைவேட் லிட்., ஸெயின்ட் மார்க்ஸ் ரோடு, பெங்களூர்
எல்லா முக்கிய நகரங்களிலும் டீலர்கள் உள்ளனர்

மாதவி முற்றத்தில் போட்டிருந்த பிரம்பு நாற்காலி ஒன்றில் ஜயந்தியின் அறையைப் பார்த்து உட்கார்ந்து கொண்டு ஒரு கதை புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தாள்.

"ஜயந்தி! இங்கே வந்து சற்றுக் காற்றாட உட்கார்ந்து கொள். எப்போதும் ஏன் அறையில் அடைந்து போய்க் கிடக்கிறாய்?" என்று அழைத்தாள் மாதவி.

ஜயந்தி கதவின் முன்னால் தொங்கிய திரையைத் தள்ளிக் கொண்டு வெளியே வந்தாள். அவளுடைய முகத்திலும் சூரியனின் மஞ்சள் வெய்யில் பளிச் சென்று வீசியது.

அவளுடைய தோற்றம் மாதவியின் மனத்தில் துயரத்தை உண்டாக்கியது. சில நாட்களிலேயே உடல் மிகவும் இளைத்து, முகம் வாடிப் போயிருந்தாள் ஜயந்தி. அவளிடம் மாதவிக்கு அளவில்லாத பச்சாத்தாபம் ஏற்பட்டது.

'அவளுடைய எதிர்காலம் எப்படி இருக்கும்?' என்ற கேள்வி அவள் உள்ளத்தில் எழுந்தது. 'தனக்காவது சிவசங்கரன் திரும்பி வந்து விடுவார் என்று தெரியும். மன்னித்து விடுவார் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. ஆனால் பாவம், ஜயந்தியின் நிலை மிகவும் பரிதாபமானது. அவளை எப்படியாவது தேற்ற வேண்டும். இனியும் அவள் கருணாகரனை நினைத்து ஏங்கவிடக் கூடாது. அவள் அவனை நினைத்து வருத்தப்படும்போது அதற்குத் தூபம் போட்டு அவள் துயரத்தை யாரும் அதிகப்படுத்தும்படி விடக் கூடாது' என்று சங்கல்பம்செய்து கொண்டாள் மாதவி.

'இந்தத் தரித்திரம் பிடித்த ஊரில் யாராவது அபசகுனம் மாதிரி ஏதாவது சொல்வார்கள். ஜயந்திக்கு விவாகம் நிச்சயமானதினால்தான் கருணாகரனுக்கு ஆபத்து வந்தது என்று பேசிக் கொள்வார்கள். தானே முயற்சி எடுத்துக் கொண்டு சிவசங்கரனிடம் சொல்லி ஜயந்திக்கு நல்ல பையனாகப் பார்க்க வேண்டும். அவள் இப்படியே கன்னியாகக் காலம் கழிக்க முடியுமா? பதினெட்டு வயது கூடப் பூர்த்தியாகாத குழந்தை அவள்' என்று எண்ணமிட்டாள் மாதவி.

"என்ன அக்கா! கூப்பிட்டு விட்டு ஏதோ யோசனை செய்து கொண்டிருக்கிறீர்களே" என்றாள் ஜயந்தி.

"ஒன்றுமில்லை, அம்மா! நீ இப்படி இளைத்துப் போய் விட்டாயே என்று வருத்தமாக இருக்கிறது. உடம்பைத் தேற்றிக் கொள்ள வேண்டும் ஜயந்தி. உடம்பு தேறுவதற்கு முன்னால் மனம் அவசியம் தேற வேண்டும்."



புது டில்லி பிரஸ் டிரஸ்ட் ஆப் இந்தியாவின் முக்கியஸ்தரான ஸ்ரீ கே. எஸ். ராமச்சந்திரன் அவர்களின் புத்திரி சௌபாக்கியவதி சாந்தாவுக்கும் சென்னை ஹிந்து பத்திரிகை ஆசிரியரின் காரியதரிசி ஸ்ரீ எஸ். நாராயணன் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி என். சிவராமனுக்கும் ஜூலை 15-ந் தேதி யன்று திருவான்மியூரில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

"அக்கா! இனிமேல் இந்த உடம்பு தேறி என்ன ஆக வேண்டும்?" என்று கூறி விட்டுப் பொல பொல வென்று கண்ணீர் உகுத்தாள் ஜயந்தி.

"நீ இப்படி இனிமேல் கண்ணீர் விடவே கூடாது, ஜயந்தி! நம்மால் நினைத்தவுடனே உயிரை விட்டுவிட முடிவதில்லை. உலகில் இருக்கும் வரை மற்றவர்களுக்குப் பாரமாக இல்லாமலாவது வாழ்க்கை நடத்த வேண்டும். அதை உத்தேசம் செய்தாவது உடம்பை நன்றாக வைத்துக் கொள்ள வேண்டும். நீ வியாதியாகப் படுத்துக் கொள்ளாமலிருந்தாலே உன் தந்தைக்குப் பெரிய சேவை செய்த மாதிரி" என்றாள் மாதவி.

"நீங்கள் சொல்வது நியாயம்தான் அக்கா. அப்பா ஏற்கனவேயே என்னைப் பற்றி ரொம்பக் கவலைப்படுகிறார். என்னால் மிகவும் வேதனைப்பட்டு விட்டார். இனியும் அவருக்குத் துன்பம் அளிக்கக் கூடாதுதான். இதெல்லாம் என் அறிவில் எட்டுகிறது, அக்கா. ஆனால் இந்தப் பாழாய்ப் போன இதயம் ஒன்றை இறைவன் கொடுத்து விட்டாரே! அதில் இதெல்லாம் உறைக்க மாட்டேனென்கிறதே" என்று கூறி விம்மினாள் ஜயந்தி.

"என்ன ஜயந்தி இது? நீ எவ்வளவோ படித்தவள், விவேகமுள்ளவள் என்று நினைத்துக் கொண்டிருந்தேனே. என்னை இப்படி ஏமாற்றமடையச் செய்கிறாயே" என்ற குரல் கேட்டு இரு

வரும் திரும்பிப் பார்த்தார்கள். கோவிந்தன் ஹாலைத் தாண்டி முற்றத்துக்கு வந்து கொண்டிருந்தார்.

ஜயந்தி கண்களைத் துடைத்துக்கொண்டாள். மாதவி தான் உட்கார்ந்திருந்த நாற்காலியை ஜயந்தியின் அருகில் இழுத்துப் போட்டுக் கொண்டிருந்தாள். கோவிந்தனும் அவர்கள் எதிரில் உட்கார்ந்து கொண்டார்.

''உங்களிடம் இன்று ஒரு முக்கியமான விஷயம் சொல்ல வந்தேன். சந்தர்ப்பம் சரியாக இல்லை போலிருக்கிறது'' என்றார் கோவிந்தன்.

ஜயந்தி எழுந்து, ''நான் போய் முகத்தைக் கழுவிக் கொண்டு வருகிறேன். நீங்கள் பேசிக் கொண்டிருங்கள்'' என்று கூறிவிட்டு உள்ளே சென்றாள்.

''பாவம்! எவ்வளவு செல்வமாக வளர்ந்த பெண்? விஜயராகவன் இந்த நவீன வசதிகளுடன் கூடிய வீட்டைக் கட்டிய போது, ஜயந்திக்காகவென்றே கட்டினார். சாதாரணமாக இந்தப் பக்கங்களில் எங்கே இவ்வளவு விசாலமாக வீடு கட்டுகிறார்கள்? சென்னையில் தாம் பார்த்த வீடு மாதிரி ஜயந்திக்குக் கட்டித் தரவேண்டும் என்று மிகுந்த ஆசையுடன் கட்டினார். கூரை ஓட்டுக் கூரையாக இருந்தாலும், உள் பக்கம் மிக உயர்ந்த மரத்தினால் தளம் போட்டிருக்கிறார். இதைக் கட்ட அவருக்கு ஏகப்பட்ட செலவாயிற்று. கருணாகரனும், ஜயந்தியும் இந்த வீட்டில் உற்சாகமாக வாழ்க்கை நடத்தப்போகிறார்கள் என்று மனக்கோட்டை கட்டினார். அது இப்படி விபரீதமாகி விட்டது. ஜயந்தியின் மனம் இவ்வளவு மென்மையானது என்று நான் நினைக்கவே இல்லை'' என்றார் கோவிந்தன்.

''அவள் இனிமேல் துயரப்பட இடம் கொடுக்கக் கூடாதென்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறினாள் மாதவி.

''ரொம்ப சரி. உங்களால்தான் அவள் மனம் மாறவேண்டும்.''

'இவருக்கு ஒரு வேளை ஜயந்தியை மணந்து கொள்ள விருப்பமிருக்குமா?' என்று ஒரு கணம் நினைத்தாள் மாதவி. ஆனால் ஜயந்தி அவரைச் சிறிதும் விரும்பாத போது தானாக எதையாவது கற்பித்துக் கொள்ள வேண்டாமென்று அந்த நினைவைத் தள்ளி விட்டு, ''உங்களுக்குக் காலில் அடிபட்டிருந்ததே, சரியாகி விட்டதா?'' என்று கேட்டாள்.

''ஓ! குணமாகி விட்டதே!''

''ஏதோ முக்கியமான விஷயம் என்று சொன்னீர்களே?''

''ஆமாம்! இப்போது தான் இன்ஸ்பெக்டரைப் பார்த்து விட்டு வருகிறேன். அச்சுதன் ஒப்புக்கொண்டுவிட்டானாம்!''

மாதவிக்குத் தேள் கொட்டிய மாதிரி இருந்தது. சரேலென்று எழுந்து, ''என்ன?'' என்று கூவினாள்.

''பொறுங்கள் மாதவி. இப்படி ஒரேயடியாகப் பயந்து விட்டீர்களே. அச்சுதன் குற்றத்தை ஒப்புக் கொண்டதாக நான் சொல்ல வில்லை. குற்றம் நடந்த ஸ்தலத்துக்குத் தான் இரண்டாம் தடவை போகவே இல்லை என்று சாதித்தான் அல்லவா? இப்போது போனதாக ஒப்புக் கொண்டிருக்கிறான். அதைத்தான் சொன்னேன்'' என்றார் கோவிந்தன்.

மாதவி மறுபடியும் நாற்காலியில் உட்கார்ந்தாள்.

அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. ''ஏன் முதலில் அதை மறுத்தானாம்?'' என்று கேட்டாள்.

''எனக்கென்ன தெரியும்? ஏதோ அங்கே சொல்வதைக் கேட்டு உங்களிடம் வந்து சொல்கிறேன். அச்சுதன் இப்போது யாரிடமும் பிடி கொடுத்துப் பேசுவதில்லை'' என்றார் கோவிந்தன்.

மாதவியின் மனம் குழம்பியது.

## அத்தியாயம் 44.

# அச்சுதன் செய்த காரியம்

அச்சுதன் ஏன் பின்னால் ஒப்புக் கொண்ட விஷயத்தை முதலில் மறைக்க வேண்டும் என்பது மாதவிக்குப் பெரிய புதிராக இருந்தது. அவன் அங்கே போய் என்ன செய்திருக்கக்கூடுமென்று எவ்வளவு தடவை யோசனை செய்த போதிலும் புரியவில்லை.

அன்று நடந்தது என்று தான் கேள்விப்பட்டதை யெல்லாம் மறுபடியும் சிந்தனை செய்து பார்த்தாள் மாதவி. முகுந்தன் வீட்டில் நிறைய மாடுகள் உண்டு. அதை மேய்ப்பதற்காகத் தினமும் மாட்டுக்காரச் சிறுவன் வந்து ஓட்டிக் கொண்டு போவான். அநேகமாகப் பக்கத்து மைதானங்களில் மேய்ப்பான். சில சமயம் மலைமீது ஓட்டிக் கொண்டு போவான். அப்படிப் போனால் அஸ்தமனத்துக்கு வெகு நேரத்துக்கு முன்பே திருப்ப ஓட்டிக் கொண்டு வந்து விடுவான். அவனுக்குத் துஷ்ட மிருகங்களை நினைத்தாலே பயம்.

ஞாயிற்றுக்கிழமையன்று அதிகாலை அவன் வழக்கம்போல மாடுகளை ஓட்டிக் கொண்டு கிளம்பினான். மலைமீது அவன் மாடுகளை ஓட்டிக் கொண்டு போன போது நன்றாக வெளிச்சம் பரவவில்லை. முதல் நாள் இரவு மழை வேறு பெய்திருந்தது. ஆதலால் மலைப்பாதை ஈரமாக இருந்தது. கொஞ்ச தூரம் போவதற்குள்ளேயே நன்றாகப் பொழுது விடிந்து விட்டது.

ஏதோ ஒரு சினிமாப் பாட்டை முணு முணுத்துக் கொண்டே உற்சாகமாய்ப் போய்க் கொண்டிருந்தான் அந்தச் சிறுவன். பெரிய பாதையிலிருந்து திரும்பும் ஒற்றையடிப் பாதையில் ஒரு மாடு புகுந்து மேய ஆரம்பித்தது. அதைச் சரியான பாதைக்கு இழுத்து வருவதற்காக ஒற்றையடிப் பாதையில் காலடி எடுத்து வைத்தான். அடுத்தகணம் அவனுடைய ரத்தமே சுண்டிப் போகும் படியானதொரு பயங்கரக் காட்சியைக் கண்டான்.



வலது பக்கத்திலிருந்த புதருக்கு வெளியே ஒரு கை நீட்டிக் கொண்டிருந்தது. ஒரு கிளையைப் பிடித்துச் சாய்த்து யாரென்று பார்த்தான் அந்தச் சிறுவன். கீழே கிடந்தது கருணாகரன் என்று தெரிந்ததும் அவனுக்குச் சப்தநாடிகளும் ஒடுங்கிப் போய் விட்டன.

மாட்டைப் பற்றிய எண்ணமே அவனுக்கு அடியோடு மறந்துபோய் விட்டது. பதைக்கும் நெஞ்சத்துடன் ஓட ஆரம்பித்தான். வீட்டில் போய் விஷயத்தைச் சொல்ல வேண்டும் என்ற துடிப்பினால் இரண்டொரு தடவைகள் சறுக்கிவிழுந்ததைக்கூட அவன் பொருட்படுத்தவில்லை. அவன் மலைப்பாதையிலிருந்து இறங்கும் வரையில் யாரும் அவனுடைய கண்களில் தட்டுப்படவில்லை.

ஊருக்குள் வந்து நாலு வீடுகள் தாண்டுவதற்கு முன்னால் அச்சுதன் எதிரே வந்தான். அவரைப் பார்த்தவுடனே அந்தப் பையன் விஷயத்தைக் கூற முயன்றான். அவசரத்திலும் பயத்திலும் அவனால் விஷயத்தைத் தெளிவாகவே சொல்ல முடியவில்லை.

ஒருவாறு அவன் உளறிக் கொட்டியதைப் புரிந்து கொண்டதும் அச்சுதன், ''அடே மடையா! நீ ஏதாவது உளறாதே'' என்று கூறினான்.

''இல்லீங்க! சத்தியமாய்ச் சொல்கிறேனுங்க'' என்றான் சிறுவன்.

இதற்குள் தெருவில் நாலைந்து பேர்கள் அவர்கள் பேசுவதைக் கவனித்தார்கள். அச்சுதன் மலையில் ஏறி ஓடத் தொடங்கியதும், அவர்களும் கூடவே தொடர்ந்தார்கள். மாடு மேய்க்கும் சிறுவன் முகுந்தனிடம் விஷயத்தைச் சொல்வதற்காக ஓடினான். போகும்போதே வழியில் எதிர்ப்பட்டவர்களிடம் எல்லாம் சொல்லிக் கொண்டே போனான்.

ஆகவே, சற்று நேரத்துக் கெல்லாம் மலைப் பாதையை நோக்கிப் பல பேர்கள் ஓடிக் கொண்டிருந்தார்கள். மாட்டுக்காரச் சிறுவன் வீட்டில் போய் விஷயத்தை விளக்கிச் சொன்னான். பின்னர், திரும்ப ஓடிவந்து மாதவியின் வீட்டில் நுழைந்து அவளிடமும் விஷயத்தைக் கூறினான். அதன்பிறகுதான் அவனுக்குத் தன்மாடுகளின் நினைவு வந்து அவற்றைக் கவனிக்க ஓடினான்.

மாதவியின் உடலில் ஏற்பட்ட பதற்றமும், நடுக்கமும் அடங்குவதற்கு முன், முகுந்தன் அங்கே வந்து விட்டார். வெளியே ஓடப் பார்த்த மாதவியைத் தடுத்து நிறுத்தி, முடிந்த அளவு சமாதானம் செய்யத் தொடங்கினார்.

சற்றைக் கெல்லாம் ஊரார் அச்சுதனுடைய தூண்டுதலின் பேரில் உடலைத் தூக்கிக்கொண்டு வந்து விட்டார்கள்.

இது போலீஸாருக்கு மிகவும் கோபத்தை உண்டாக்கி விட்டது.

அச்சுதன்தான் முதலில் குற்றம் நடந்த இடத்துக்குச் சென்றான். பத்து நிமிஷம் ஆவதற்குள் அவனைப் பின்தொடர்ந்து சென்றவர்களும் அங்கே வந்து விட்டார்கள். கருணாகரனுடைய உடல் ஈரத்தரையில் விழுந்து கிடப்பதைப் பார்த்து அச்சுதனால் சகிக்க முடியவில்லை. ஆகவே கூடவந்த ஆட்களை விட்டு உடலைத் தூக்கிக்கொண்டு வரச் சொன்னான்.

இதுதான் இன்ஸ்பெக்டருக்குக் கோபத்தை வரவழைத்தது. இவ்வளவு படித்தவரான அச்சுதன்கூடப் போலீஸாருக்குத் தெரிவிக்காமல் இப்படி ஒரு காரியம் செய்யலாமா என்று பொருமினார். அதுவே அச்சுதனின் நோக்கத்தைப் பற்றிச் சற்றுச் சந்தேகமளித்தது. உண்மையாகவே அச்சுதன் மனம் பொறுக்காமல்தான் அப்படிச் செய்தானா, அல்லது போலீஸார் வருவதற்கு முன் உடலை அப்புறப்படுத்தும் நோக்கத்துடன் செய்தானா என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் சந்தேகப்பட்டார்.

பிறகு அவருடைய சந்தேகம் ஊர்ஜித மாவதற்கு இன்னொரு சாட்சியம் கிடைத்தது. ''உடலைத் தூக்கிக்கொண்டு வந்த போது அச்சுதன்கூட வரவில்லை'' என்று சிலர் சொன்னார்கள்.

உடல் மலைச்சாரல் பங்களாவுக்குக் காலை ஏழு மணிக்கு வந்தது என்று முகுந்தன் கூறினார். அச்சுதன் ஏழரை மணிக்கு மேல்தான் மலைச்சாரல் பங்களாவுக்கு வந்தான் என்று இரண்டு பேர்கள் சாட்சி சொன்னார்கள். அதுவும் மலைப் பாதையிலிருந்து இறங்கி வந்ததைப் பார்த்ததாகவும் கூறினார்கள்.

அப்படியானால் உடலை அனுப்பிவிட்டு அச்சுதன் மலைமீது அரை மணி நேரம் இருந்திருக்கிறான். அப்போது என்ன செய்திருப்பான் என்று இன்ஸ்பெக்டர் தம் மண்டையைக் குழப்பிக் கொண்டார். கடைசியாக ஏதோ ஒரு தடையத்தை மறைக்கத்தான் போயிருக்க வேண்டும் என்று நிச்சயம் செய்தார்.

அச்சுதனை இதைக் குறித்து விசாரித்த போது, தான் அங்கே இருக்கவில்லை யென்றும் உடனேயே மலைச்சாரல் பங்களாவுக்கு வந்து விட்டதாகவும் சொல்லிக் கொண்டிருந்தான்.

கடைசியாக அதைத்தான் அன்று அவன் ஒப்புக் கொண்டிருக்கிறான். அங்கு இருந்ததை ஒப்புக் கொண்டானே தவிர, எதற்காக அவன் அங்கே இருந்தானென்பதைக் கூற மறுத்து விட்டான். இது இன்ஸ்பெக்டரின் கோபத்தை அதிகரிக்கச் செய்து விட்டது.

ஏற்கனவே முதல் நாளிரவு மழை பெய்ததாலும், ஈரத்தரையில் பலருடைய காலடி அடையாளங்கள் இருந்தபடியாலும் போலீஸாரால் ஒரு துப்பும் துலக்க முடியவில்லை. சுமார் பதினைந்து பேருடைய காலடி அடையாளங்கள் ஈரத்தரையில் ஒன்றன்மீது ஒன்றாகப் பதிந்து முதல் நாள் அங்கு வந்திருக்கக் கூடியவர்களுடைய காலடி அடையாளங்களை அழித்து விட்டன. இதில் அச்சுதன் வேறு குழப்பம் விளைவித்திருந்தான். அவன் அங்கே என்ன செய்திருக்க வேண்டுமென்று ஊகிப்பதற்கும், அந்த ஊகத்தை ருசுப்படுத்துவதற்கும் வேண்டிய முயற்சிகளையெல்லாம் இன்ஸ்பெக்டர் செய்து கொண்டிருந்தார்.

மாதவி இதையெல்லாம் நினைத்துப் பார்த்தாள். இன்ஸ்பெக்டர் அவனைக் குற்றவாளியாக நினைத்தபோதிலும், அவளால் அதை நம்ப முடியவில்லை. அச்சுதன் ஒருகாலும் இதைச் செய்திருக்க முடியாது என்று நம்பினாள்.

மாதவிக்கு ஒரு எண்ணம் தோன்றியது. அச்சுதன் இதைச் செய்திருக்க முடியாது. அவன் அங்கே போனது என்னவோ உண்மை. அங்கே அவன் என்ன செய்தான் என்பதைக் கண்டு பிடித்து விட்டால் ஒரு வேளை யார் குற்றவாளி என்று தெரிந்து விடும்.

அவளுக்கு ஒரு பயங்கரமான சந்தேகம் எழுந்தது. 'ஒரு வேளை சித்தப்பாவே இந்தக் காரியத்தைச் செய்திருப்பாரோ? அவரைத் தப்புவிப்பதற்காக அச்சுதன் இப்படி ஏதேனும் செய்தானோ என்னவோ?' என்று நினைத்துக்கொண்டாள்.

அச்சுதனை எப்படியாவது பார்த்துப் பேசி இதைப் பற்றிக் கேட்டுவிட வேண்டும் என்று மிகவும் துடிப்பாக இருந்தது மாதவிக்கு.

கோவிந்தனிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்தாள். ''எனக்கு அச்சுதனைப் பார்த்துப் பேச வேண்டும். அதற்கு உங்களால் ஏற்பாடு செய்ய முடியுமா?'' என்று கேட்டாள்.

கோவிந்தன் அவளை ஒரு மாதிரி பார்த்தார். ஏதோ கேட்க வாயெடுத்தவர், அதை மாற்றிக் கொண்டு, ''அதற்கென்ன? அழைத்துப் போகிறேன்'' என்று பதில் சொன்னார்.

**ம**றுநாள் மாதவி அச்சுதனைப் பார்க்கப் போனாள். அவளுக்கு அவனைப் பார்க்க மிகவும் வேதனையாக இருந்தது. கருணாகரவின் பிடிவாதமான மூர்க்க குணத்தினால் எத்தனை பேருக்குக் கஷ்டம் என்று நினைத்து வருத்தப்பட்டாள்.

அச்சுதனிடம் மிகவும் பிரியமாகப் பேசினாள் மாதவி.

''நீ என்னைப் பார்க்க வருவாய் என்றே நான் நினைக்கவில்லை அக்கா. என்மீது உனக்கு எப்படி அனுதாபம் ஏற்பட்டது? நான் உன்னுடைய பரம வைரி அல்லவா?'' என்றான் அச்சுதன்.

''நீ இதை ஒரு நாளும் செய்திருக்க மாட்டாய் என்பது எனக்கு நன்றாகத் தெரியும், அச்சுதா!''

''ரொம்ப சந்தோஷம். வேறு யாரும் நான் நிரபராதி என்று நம்பாவிட்டாலும் நீயாவது நம்புவது எனக்கு அளவற்ற நிம்மதியை அளிக்கிறது.''

''அது சரி! உன்னிடம் எனக்கு எப்போதுமே தனியான பிரியம் உண்டு. நீ நல்லவன் என்ற நம்பிக்கை உண்டு. ஆனால் ஏன் இப்படி வீண் பிடிவாதம் பிடிக்கிறாய்? அங்கே ஏன் போனாய் என்பதைச் சொல்லாமல் உன்னையே கெடுத்துக் கொள்கிறாயே, அச்சுதா! அங்கே ஏன் போனாய் என்று சொல்லக் கூடாதா?'' என்று மிகவும் இரக்கமான குரலில் அச்சுதனை வேண்டிக் கொண்டாள் மாதவி. **(தொடரும்)**

சிறு குழந்தையும் அறியும்...

# ரின்ஸோ அதிவெண்மையாக வெளுக்கும் என்பதை!



சலவைக்கு ரின்ஸோ உபயோகிக்கும் தாய்மார்களின் எண்ணிக்கை மேன்மேலும் பெருகி வருவதன் காரணம் ரின்ஸோ வெள்ளைத் துணிகளை அதிவெண்மையாகவும், வர்ணத் துணிகளை அதிகப் பிரகாசத்துடனும் வெளுப்பதனால்தான்.

சலவைக்கு ரின்ஸோ உபயோகியுங்கள். உங்கள் குழந்தைகளின் ஆடைகள் உள்பட, குடும்பத்தின் சகல துணிகளையும் அற்புதமான சுத்தத்தோடு சலவை செய்வதைக் காண்பீர்கள். ரின்ஸோவின் விறுவிறுப்பான நுரை அழுக்குகளை அறவே அகற்றிவிடுகிறது — அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டியதில்லை!




... உங்கள் வேலையை
இலகுவாக்கும் அற்புத
சோப் பவுடர்

R. 13-50 TM

# படித்துப் பாருங்கள்

## மனிதனின் குடும்பம்

மேலே கண்ட பெயருள்ள புகைப்படக் காட்சி ஒன்று சென்னைக் கடற்கரையில் நடந்தது. பொருட்காட்சியின் பெயரே ஒருவாறு அதன் நோக்கத்தை வெளியிடுவதாக அமைந்திருக்கிறபடியால், அப்படி என்ன படங்களைக் கொண்டு 'எல்லோரும் ஓர் குலம்' என்ற உண்மையை நிரூபிக்கப் போகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள அனைவருக்கும் ஆவலாக இருக்கும்.

நாம் ஆசைப்படும் எத்தனையோ விஷயங்கள் நிறைவேறாதது போல இந்தப் புகைப்படக் காட்சிக்கும் சிலரால் போக முடியாமல் இருக்கும். இதனால் யாரும் ஏமாற்றம் அடைய வேண்டிய அவசியம் இல்லை.

நியூயார்க்கிலுள்ள "மியூஸியம் ஆப் மாடர்ன் ஆர்ட்" மழ மழவென்ற உயர்ந்த காகிதத்தில், சிறந்த முறையில் வெளியிட்டிருக்கும் புத்தகம் மேற்படி பொருட் காட்சியைப் பார்க்காத குறையைத் தீர்த்துவிடும்.

உலகம் முழுவதும் மனிதகுலம் ஒரேமாதிரி தான் பிறந்து, வாழ்ந்து, மறைந்து வருகிறது என்பதை மிகவும் பிரயாசைப்பட்டு இந்தப் படங்களின் மூலம் விளக்கி யிருக்கிறார்கள்.

ஐந்நூற்று மூன்று படங்களில் மனித உள்ளத்தின் பலவிதமான உணர்ச்சிகளை எடுத்துக் காட்டியிருப்பது மிகவும் அதிசயமாக இருக்கிறது. காதல், கல்யாணம், குழந்தைப் பேறு, சிறுவர் சிறுமியரின் விளையாட்டுக் கோலாகலங்கள், உற்சாகம், ஆக்திரம், பயம், அன்பு, துயரம், கருணை, பசிக்கொடுமை, பக்தி, அகங்காரம், குழந்தைப் பருவத்தின் களங்கமற்ற தன்மை இவை எல்லாவற்றையும் பலவிதமான கோணங்களில் பல தேசங்களில் படம் பிடித்து வெளியிட்டிருக்கிறார்கள்.

ஒரு மகத்தான சாதனை. இந்தப் புத்தகத்திலுள்ள படங்களைப் பார்த்துக் கொண்டே வரும்போது தேசத்துக்குத் தேசம், நடை, உடை பாவனைகள் வித்தியாசமாக இருந்த போதிலும், மனித உள்ளத்தின் அடிப்படை உணர்ச்சிகள் எங்கும் ஒரேமாதிரிதான் இருக்கின்றன என்பதைக் காண்கிறோம்.

ஹாலந்து தேசத்தில் இருந்தாலும், அமெரிக்காவிலிருந்தாலும், அல்லது இந்தியாவிலிருந்தாலும் குழந்தையைப் பெற்ற தாயார் ஒரே மாதிரிதான் மகிழ்கிறாள்.

ஜப்பான், சீனா, ரஷ்யா, ஜெர்மனி, இஸ்ரேல், இத்தாலி, பிரான்ஸ் ஆகிய எல்லாத் தேசங்களிலும், குழந்தைகள் ஒரேமாதிரிதான் உற்சாகமாக விளையாடுகிறார்கள்.

இரண்டு குழந்தைகள் சண்டை போடும் படம் ஒன்று மனத்தைக் கவருகிறது. நம் ஊரில் நம் வீட்டில் தினசரி நாம் பார்க்கும் காட்சியாகத் தோன்றுகிறதே தவிர அமெரிக்காவில் எடுத்ததாகத் தோன்றவில்லை.

இந்தப் புத்தகத்தின் கடைசியில் பச்சிளங் குழந்தைகள் கைகோத்துக் கொண்டு நடந்து போகும் படம் ஒன்று இருக்கிறது. அதைப் பார்க்கும்போது, அவை தங்கள் வாழ்க்கைப் பாதையில் நடக்க ஆரம்பித்திருப்பதாகவே தோன்றுகிறது. ஒவ்வொருவர் வாழ்க்கையும் இப்படித்தானே ஆரம்பமாகிறது!

ஸ்ரீ எட்வர்ட் ஸ்டீசென் என்பவர் மிகவும் சிரமப்பட்டு இந்தப் புகைப்படங்களைச் சேகரித்திருக்கிறார். அவரை எவ்வளவு பாராட்டினாலும் தகும். பிரபலமான புகைப்பட நிபுணர்களிலிருந்து, முன்பின் தெரியாத போட்டோக்காரர் வரை படங்கள் அனுப்பி யிருக்கிறார்கள். மொத்தம் இரண்டு லட்சம் படங்கள் வந்தனவாம். அவற்றில் பத்தாயிரம் படங்களைப் பொறுக்கினார்களாம். அதிலிருந்து ஐந்நூற்று மூன்று படங்களைவடிகட்டி எடுத்து, அமெரிக்காவிலுள்ள நவீனக் கலைப் பொருட்காட்சியில் வைத்திருக்கிறார்கள்.

கிடைக்குமிடம்: அமெரிக்கச் செய்தி இலாகா காரியாலயம், மவுண்ட் ரோட், சென்னை—2; விலை ரூ. 3-00.

## சித்தார்த்தன்

இந்தத் தலைப்பைப் பார்த்தவுடனேயே பகவான் புத்தரைப் பற்றிய கதையோ என்று நினைக்கத் தோன்றும். ஆனால் பகவான் புத்தரைப் பற்றிய கதையல்ல. பகவான் புத்தரைப் போல் அரும் பாடுபட்டு ஞானம் பெற்ற ஒருவனின் கதை!

இந்தக் கதை வேதகால சூழ்நிலையிலேயே தொடங்குகிறது. சித்தார்த்தன் என்ற பிராம்மணச் சிறுவன் பிராம்மணியத்தில் நம்பிக்கை யிழந்து, சமணனாக மாறுகிறான். சமண மதமும் அவனுடைய அலைபட்ட மனத்துக்கு அமைதியை அளிக்கவில்லை. பகவான் புத்தரைக் காண்கிறான். அளவளாவுகிறான். அவர் ஒரு மகான் என்று காண்கிறானே தவிர அவன் உள்ளத்தில் அமைதி பிறக்கவில்லை. பிறகு சம்சாரத்தில் உழல்கிறான். கடைசியில் ஓடக்காரனிடம் தனது சந்தேகங்களுக்கும் கேள்விகளுக்கும் விடை காண்கிறான் ஓடும் நதியையே குருவாய்க் கொண்ட வாசுதேவனிடம் ஞானம் பெறுகிறான்!

"ஞானத்தை ஒருவன் அடையலாம்; அதில் வாழலாம். எனினும் ஒருவன் அதைப் பிறருக்கு வழங்கவோ புகட்டவோ, மட்டும் இயலாது" என்கிறான் சித்தார்த்தன்.

"கண்டவர் விண்டிலர்
விண்டவர் கண்டிலர்"

என்ற அரிய பாரத நாட்டுக் கருத்தை விளக்குகிறது இந்த நவீனம்!

இந்நூலாசிரியர் ஜெர்மானிய தேசத்தைச் சேர்ந்தவர். நோபல் பரிசு பெற்ற ஆசிரியர். பாரத நாட்டின் மத கருத்துக்களில் ஊறித் திளைத்து வேதாந்தக் கருத்தை இந் நவீனத்தில் வெகு அழகாக நிலை நிறுத்துகிறார். நாவல் முழுதும் வேதாந்த தத்துவ விமரிசனமாக அமைந்திருந்தாலும், படிப்பதற்குப் பேராசிரியர் கே. சுவாமிநாதன் தமது முன்னுரையில் கூறுவது போல் ஏதோ ஒரு துப்பறியும் கதையைப் படிப்பது போலத்தான் இருக்கிறது!

மொழிபெயர்ப்பு: திரிலோக சீதாராம்; பிரசுரம்: ஏ. கே. கோபாலன், திருவல்லிக்கேணி, சென்னை - 5; விலை: ரூ. 1 - 75.

# மங்களம்

**பீஷ்மன்**



கூடத்தில் ஒரே கூச்சலும் கும்மாளமுமாக இருந்தது. பாகீரதியின் பெரிய பெண் சென்னையிலிருந்து அன்று காலையில்தான் வந்திருந்தாள். காலையில் வந்திறங்கியதும் நேராகச் சித்தி படுத்திருந்த அறைக்குத்தான் வந்தாள் அவள். வீட்டுக்குப் பெரிய எஜமானி போல அதிகாரம் செய்து கொண்டு பம்பரமாகச் சுற்றி வரும் சித்தி, வற்றியுலர்ந்து உருமாறிப் பாயோடு பாயாகப் படுத்திருந்த கோலத்தைப் பார்த்ததும் அவள் கண்கள் கலங்கிப்போய் விட்டன.

"என்ன சித்தி, இப்படிப் படுத்துக் கொண்டு விட்டாயே!" என்று நாக்குழறச் சொல்லிக் கொண்டே படுக்கையில் அவள் உட்கார்ந்த போது மங்களம் அந்தப் பரிவை ஆசையுடன் அனுபவித்தாள். சில நாட்களாகவே சூழ்நிலை ஒரே வெப்பமாகத்தான் இருந்து வந்தது அவளுக்கு. தங்கம் காட்டிய இந்தப் பரிவின் குளுமை அவளுக்கு மிகவும் தேவையாக இருந்தது.

"எனக்கு ஒன்னுமில்லேம்மா தங்கம். இப்போதுதான் நீ ஊரிலேயிருந்து வந்திருக்கிறாய். கண்ணைக் கசக்கிக் கொண்டு நிற்கலாமோ, அசடு! சித்திக்கு என்றும் பதினாறு வயசா? எழுந்திரு, அம்மா, போய்க் குளித்து விட்டுச் சாப்பிடு. ஊரிலே எல்லோரும் சௌக்கியம்தானே?" என்று அந்தத் தள்ளாத நிலையிலும் பாசம் அளித்த தெம்பில் மங்களம் பேசினாள்.

என்ன இருந்தாலும் தங்கம் வளர்ந்து பெரியவளானதே அவளது மடியிலும் தோளிலும்தானே? அந்தப் பாசம் அவளை விட்டுப் போய் விடுமா?

சித்திரை மாதத்துக் கொடும் வெய்யில் வெளியே அனல் பரப்பிக் கொண்டிருந்தது. மங்களத்துக்குத் தாகம் நாக்கை வறட்டியது.

"தங்கம்!........தங்கம்!"

ஈனஸ்வரத்தில் எழும்பிய அவள் குரல் உள்ளே கேட்டிருக்கவே முடியாது. அவ்வளவு கூச்சல போட்டு ரகளை செய்து கொண்டிருந்தார்கள் குழந்தைகள்.

காலை பத்து மணிக்குத் தங்கம் கஞ்சி கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போனாள். அப்புறம் அந்த அறைப் பக்கம் யாரும் எட்டிக்கூடப் பார்க்கவில்லை. பாகீரதி அவளுக்கு உடன்பிறப்புத்தான். என்றாலும் அந்தத் தங்கத்துக்கு இருக்கும் பரிவுகூட அவளுக்கு இல்லை. ஒவ்வொரு கணமும் இப்போதெல்லாம் ஒவ்வொரு முள்ளாகத்தான் உறுத்தியது மங்களத்தை.

உள்ளே பாகீரதி எதற்கோ உரக்கச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

"தங்கம்....தங்கம்!"

"சித்தி கூப்பிடுகிறாள் போலிருக்கிறது, அம்மா! என்னவென்று கேட்டு விட்டு வருகிறேன்" என்று தங்கம் சொல்லிக் கொண்டிருப்பது மங்களத்துக்குக் கேட்டது.

"அவளுக்கு வேறு என்ன வேலை? எப்போதும் ஒரே தொணதொணப்பு! நீயும் பார்க்கிறாயே! தான் கஷ்டப்படும் போது பிறர் சிரித்தாலே அவளுக்குப் பிடிக்கிறதில்லை. என்ன தொந்தரவோ!"

என்ன பாகீரதியா பேசினாள்?—

மங்களத்தின் மனத்தை யாரோ முறுக்கிப் பிழிந்தார்கள்.

இந்தப் பாகீரதியின் நல்வாழ்வுக்காக அவள் ஓடி

ஓடி உழைத்திருக்கிறாள். குழந்தைகளைப் பெற்று விட்டாளே தவிர, அவர்களை வளர்க்கும் பொறுப்பு முழுவதையும் மங்களம்தானே ஏற்றுக் கொண்டிருந்தாள்? இப்போது படுக்கையில் விழுந்ததும் அந்த மங்களம் இவ்வளவு வேண்டாதவளாகி விட்டாளா?

''சாப்பிட்டாயா, சித்தி?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் தங்கம்.

''தாகம் நாக்கை வறட்டுகிறது! அரை மணி நேரமாகக் கூப்பிடுகிறேன். உங்களில் யாரும் கேட்கவில்லை!''

''இந்தக் கூச்சலிலே உன் குரல் கேட்கத்தான் இல்லை சித்தி. சற்று இரு. இதோ கஞ்சி கொண்டு வருகிறேன்!''

'தங்கம் தங்கம்தான்' என்று நினைத்துக் கொண்டாள் மங்களம்.

பாகீரதி மட்டுமென்ன? அவளுக்கும் தங்கமான மனசுதான். ஆனாலும், வயசுதான் ஆகிவிட்டதே தவிர, வியாதியஸ்தருக்குப் பணிவிடை செய்து அவளுக்குப் பழக்கமேயில்லை. அதுதானோ என்னவோ எதற்கெடுத்தாலும் சலிப்பும் சிடுசிடுப்புமாக இருக்கிறாள். இது மட்டுமே காரணமாக இருக்க முடியாது. மங்களம் கண்ணை மூடி விட்டால் இன்று அவள் பெயருக்கு இருக்கும் இரண்டு ஏக்கர் நிலமும் அவள். தம்பி ரகுராமனைத்தான் சேரும். அவளுக்குப்பிறகு அவளது ஆஸ்தியை அனுபவிக்கப் போகும் அவன், அக்காவின் பராமரிப்பைப் பற்றியோ, அவளது உடல் நலனைப் பற்றியோ அக்கறையே கொண்டதில்லை. 'அவனே அப்படியிருக்கும்போது' என்ற ஏதோ அசட்டு எண்ணம் பாகீரதியின் மனத்தைக் குழப்பியிருக்க வேண்டும்.

இதை நினைத்தபோது மங்களத்துக்குச் சிரிப்புத்தான் வந்தது. 'என்ன விசித்திரமான உலகம்!' என்று முனகினாள் அவள்.

''என்ன சித்தி, என்னவோ தனக்குத்தானே பேசிச் சிரித்துக் கொள்கிறாயே!''

''என்னவோ நினைப்பு!''

தங்கம் கஞ்சியை ஆற்றிக் கொடுத்தாள். அவள் சாப்பிட்டு முடித்ததும் காலியான பாத்திரங்களை எடுத்துக் கொண்டு சற்றைக்கெல்லாம் உள்ளே போய்விட்டாள்.

மங்களம் மறுபடியும் தனியே விடப்பட்டாள். அவளுக்கு ஏனோ இந்த உலகத்திலேயே அவள் தனித்து விடப்பட்டது போலத்தான் இருந்தது.

கூடப் பிறந்த தம்பி செயலாக வாழ்கிறான். அக்காவுக்கும் ஒன்றிலும் குறைவில்லை. ஏன்? அவளுக்குத்தான் என்ன குறைந்துவிட்டது?

அவள் மனத்திலே கேள்விகள் தாமே கிளம்பி விடையைத் தேடிக்கொண்டிருந்தன.

சாப்பிட்டால் 'ஏன்' என்று கேட்கும் இரண்டு ஏக்கர் நிலம் இருக்கிறது. அது மட்டும் இருந்தால் ஆயிற்றா? அவள் திடமாக இருந்தால் ஆயிற்றா? அவள் திடமாக இருந்த நாட்களில் கொட்டிக் கொடுத்தாளே, அந்த அன்பிலும் பரிவிலும் ஒரு துளி தரத் தங்கத்தையும் பக்கத்து வீட்டுப் பையன் வாசுவையும் விட்டால் வேறு நாதியில்லையே!

அவள் வாழ்வே ஒரு சோகக்கதையாக அல்லவா ஆகிவிட்டது.

வாழ்வுப் பூஞ்சோலையில் புகும் மகிழ்ச்சியுடன் அவள் உடுத்திக் கொண்ட கூறைப் புடவையே கோடிப் புடவையாக மாறிவிடும் என்று அவள் கனவுகூடக் காணவில்லை. ஆனால் அப்படிப்பட்ட ஒரு பேரிடிதான் அவள் தலையில் விழுந்தது.

கழுத்தில் தாலி கட்டிய ஒரு மணி நேரத்திலேயே மாரடைப்பினால் அவள் மணாளன் மறைந்து விட்டான்.

அதன் பிறகு பிறரிடம் அன்பு செலுத்துவது ஒன்றில்தான் அவள் வாழ்வின் இன்பமே உறைந்து விட்டது.

இதையெல்லாம் இப்போது நினைத்துப் பார்க்கும்போது அவள் கண்களை நீர்த்திரை மறைத்தது.

அவளுக்கு இந்தக் கதி நேர்ந்தபோது அப்பா உயிருடன் இருந்தார். தம்பி ரகுவுக்குப் பத்து வயதிருக்கும். பாகீரதிக்கு மட்டும் கல்யாணம் ஆகியிருந்தது. அவளுடைய இந்த நிலை கண்டு வீடே, ஏன், ஊரே அழுது புலம்பியது. அப்பா பட்ட துயரம் சொல்லி முடியாது. ஒரு மாதம் வரை அவர் சரியாகச் சாப்பிடக்கூட இல்லை. மகளின் முகத்தைப் பார்க்கும்போதெல்லாம் 'குபீர் குபீர்' என்று அவருக்கு அழுகை பொங்கும்.

இந்த வேதனையே அவருக்கு யமனாக வளர்ந்து அவரைப் படுக்க வைத்து விட்டது.

இப்போது நடப்பது போல, அப்பாவின் கடைசி நாட்கள் அவள் நினைவுக்கு வந்தன.

வெய்யில் மறைந்து கொண்டிருக்கும் நேரம் கொல்லைப்புறத்துப் படிக்கட்டில் உட்கார்ந்து வானத்தை வெறித்து நோக்கியபடி ஏதோ உருத் தெரியாத சிந்தனைகளில் ஈடுபட்டிருந்தாள் மங்களம்.

''மங்களம்! அப்பா கூப்பிடுகிறார்!'' என்று ரகுராமன் அவள் தோள்பட்டையைத் தொட்டு உலுக்கியபோதுதான் திடுக்கிட்டு எழுந்தாள் அவள்.

''எதுக்குடா?''

''தெரியாது அக்கா!''

அவள் உள்ளே போனபோது அப்பாவின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பாகீரதி அவர் கண்களை முந்தானையால் துடைத்துக் கொண்டிருந்தாள்.

''என்ன அப்பா?'' என்று கேட்கும்போதே மங்களத்துக்கும் ஏனோ அழுகை வந்துவிட்டது.

அவள் கையைப் பிடித்து ஆதரவோடு அவளைத் தம் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டார் அப்பா.

''மங்களம்...! உன்னை நினைத்தால்தான் என்னை என்னவோ செய்கிறது! பாகீரதியும் ரகுராமனும் உன்னைக் கை விட்டுவிட மாட்டார்கள். இருந்தாலும் காலம் எப்படி எப்படி மாறுமோ? யார் கண்டது! உன் பேருக்குக் கொஞ்சம் நிலம் எழுதி வைத்திருக்கிறேன். உனக்குப் பிற்காலம் அது உன் தம்பிக்குச் சேரும். எப்படியோ அக்காவையும் தம்பியையும் பகைத்துக் கொள்ளாமல் நீ நல்லபடியாக உன் காலத்தைக் கழிக்க வேண்டும்....'' — மேலே அவரால் ஒன்றும் பேச முடியவில்லை. துயரம் தொண்டையை அடைத்தது.

உணர்ச்சி வசத்தில் மூச்சு இரைத்தது'

''ஏன் மாமா! வீணாக மனசை அலட்டிக் கொள்கிறீர்கள்? என் உயிர் உள்ளவரை மங்களம் பாகீரதி கூடவே இருப்பாள். எனக்

குக்கூடப் பிறந்தவர் யாரும் இல்லை. மங்களம் என் தங்கையாக, பாரேதிக்குத் துணையாக இருக்கட்டுமே!''

சோக இருள் படர்ந்திருந்த சூழ்நிலையிலே புதியதொரு ஜோதி பிறந்தது போலக் கணீரென்று அந்தக் குரல் எழுந்த திசையில் மூன்று ஜோடிக் கண்களும் ஆவலுடன் திரும்பின. குரலின் இடம் முகத்திலே பொலிய, ஆஜானுபாகுவாய் அங்கே பாரேதியின் கணவர் நின்றார்.

''மாப்பிள்ளை...!'' என்று நன்றிப் பெருக்கில் ஏதோ சொல்ல வாயெடுத்தார் பெரியவர். குரல் எழும்பவில்லை.

அன்று சொன்ன சொல்லை இன்றுவரை அத்திம்பேர் காப்பாற்றி விட்டார். அக்கா மட்டுமென்ன? அவளும் எவ்வளவோ ஆதரவுடன்தான் இருந்தாள். இப்போது சில நாட்களாகத்தான், அதிலும் முக்கியமாகச் சேர்ந்தாற்போல நான்கைந்து மாதம் மங்களம் படுத்த படுக்கையாக ஆனபின்புதான் அவளிடம் ஒரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறது.

'வியாதி' என்று சொல்லி மங்களம் பகலில் படுக்கை விரித்துப் படுத்துக் கொண்டதே இப்போதுதான். அதுவரை அவளுக்குப் பிரமாதமாக நோய் நொடி என்று வந்ததே இல்லை. அப்படியாகக் காலைத் தலையை வலித்தாலும் மங்களம் அதைச் சிறிதும் பொருட்படுத்த மாட்டாள்.

இவ்வளவு நாட்களாக இல்லாத தற்கெல்லாம் வட்டி சேர்த்துக் கொண்டு இப்போது அவளுக்கு நோய் வந்து விட்டது. சாதாரண இருமலும் ஜுரமுமாக ஆரம்பித்த அது இப்படி இரைப்பும் இழுப்புமாக வளர்ந்துவிட்டது. ஆரம்பத்தில் பாரேதி எவ்வளவோ பரிவுடன்தான் உபசாரம் செய்தாள். இடையிலே அவள் தம்பி ரகு வந்து விட்டுப் போனான். அதன் பின்புதான் அவள் குணமே மாறிப் போய் விட்டது.

'மங்களத்துக்கு ஒரு மாதமாக உடம்பு சரியில்லை' என்ற விவரத்தைக் கடிதம் மூலம் தெரிந்து கொண்டு தான் வந்திருந்தான் ரகு. வந்தவன் ஆறுதலாக ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. அதற்குப் பதில், ''உன் கடிதாசைப் பார்த்ததும் பயந்து போய்விட்டேன், அக்கா. கிராமத்திலே அவசரமாக வேலையிருந்தது. புறப்பட்டுக் கொண்டிருந்தேன். கடிதாசி வந்தது. கலவரத்திலே ஒன்றுமே ஓடாமல் அப்படி அப்படியே போட்டு விட்டு வந்தேன். கொஞ்சங்கூட உனக்கு நிதானமே யில்லை அக்கா. அப்படி இப்போ என்ன வந்து விட்டது?'' என்று அவன் பேசியபோது மங்களத்துக்குக்கூட எரிச்சலாகத்தான் இருந்தது.

ஆனாலும் 'அது அவன் போக்கு!' என்று நினைத்துக் கொண்டு விட்டாள். அக்காவால் அப்படியிருக்க முடியவில்லை.

''நாளைக்கு அவள் உயிர் போனால் இரண்டு ஏக்கர் நிலமும் ஓடி வந்து விடாதா அவனுக்கு! அதனாலேதான் ஆத்திரம் வருகிறது. என்னடா இது, பிரமாதமாக அக்கா எழுதியிருந்தாளே! கண்ணை மூடியிருக்குமென்று நினைத்தோமே, இங்கேயானால் இது இன்னும் மூச்சு விட்டுக் கொண்டிருக்கிறதே என்று அயர்ந்து போய் விட்டான். கோபம் வராதோ கோபம்!'' என்று அடிக்கொரு முறை சொல்லி மிகவும் அலுத்துக் கொண்டாள் அவள்.

''மாமி....!''

மங்களம் சிந்தனைப் பிணைப்பிலிருந்து விடுபட்டுத் திரும்பினாள். நிலையோரம் வாசு நின்று கொண்டிருந்தான்.

''வா, வாசு!''

''இன்றைக்கு உடம்பு எப்படியிருக்கிறது, மாமி?'' என்று பரிவுடன் விசாரித்துக் கொண்டே அவள் அருகே வந்து உட்கார்ந்து கொண்டான் வாசு.

மங்களம் அவன் முகத்தையே பிரமை பிடித்தாற்போல உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். தானும் எல்லோரையும் போல



வாழ்ந் திருந்தால் அவளுக்கு இப்போது வாசுவைப் போல மகனும் இருந்திருப்பான். அந்தக் குறையை நீக்குவதற்குத்தான் தெய்வம் வாசுவுக்கு இந்தப் பாசத்தை அளித்திருக்கிறதோ, என்னவோ?

''ஏன் மாமி, அப்படிப் பார்க்கிறீர்கள்?''

''ஒன்றுமில்லேடா வாசு! இந்த மாமியிடம் உனக்கு என்ன அவ்வளவு பிரியம்னு யோசிக்கிறேன்!''

அவன் முகத்தில் ஏதோ விரும்பாத ஒன்றைக் கேட்டு விட்ட வேதனை படர்ந்தது.

''ஏன், நான் பிரியமாக இருக்கக்கூடாதா?''

''அதற்கில்லை, அசட்டுப் பிள்ளையே! மாமிக்கு இப்போ உடம்பு சரியில்லையா, என்னமோ பிதற்றுகிறேன். நீ அதையெல்லாம் மனசிலே போட்டுக் கொள்ளாதே!''

வாசுவின் சிந்தனை அதற்குள் வேறு எங்கோ ஓடிவிட்டது. மாமியின் நெற்றியில் கையைவைத்துப் பார்த்தான். ''இன்று ஜுரம் வரவில்லை, மாமி!'' என்று குதூகலத்துடன் சொன்னான்.

அந்தப் பிஞ்சு உள்ளத்தின் அன்பிலே மனத்தின் பாரம் சற்று இறங்கியதை உணர்ந்தாள்



கல்கத்தா ஸ்ரீ கே. எஸ். கே. ஐயர் அவர்களின் குமாரர் ஸ்ரீ கே. நடராஜனுக்கும் சென்னை ஸ்ரீ எஸ். கே. சுப்பராய ஐயர் அவர்கள் குமாரி சௌ. சகவரிக்கும் சென்னை, ராயப்பேட்டையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க, மணமக்கள்!

---

மங்களம். உணர்ச்சி வசத்தில் அவள் கண்கள் ஏனோ கலங்கின. அன்புடன் வாசுவின் தலையை வருடி விட்டாள்.

தங்கமும் வாசுவும் இல்லையென்றால் அவள் உயிர் என்றோ இந்தச் சடலத்திலிருந்து பிய்த்துக் கொண்டு ஓடியிருக்கும். அவர்களுடைய அன்புதான் அதைக் கட்டி நிறுத்தியிருக்கிறது. அந்த உள்ளங்களின் அன்புக்காகத் தான் அவள் வாழ வேண்டும். மற்றவர்கள் அவள் வாழ்வதைவிட மறைவதைத்தான் விரும்பினார்கள்.

"நீ ஒருவனாவது என்றைக்கும் ஒரே மாதிரி இரு, வாசு!" என்று கூறினாள் அவள்.

திடீரென்று ஒரு நாள் அவளுக்கு இருமலும் இழுப்பும் அதிகமாகி விட்டன. நிலை கொள்ளாமல் துடித்தாள் அவள். வாசுவும் தங்கமும் அவள் தலைமாட்டை விட்டு நகரவேயில்லை. அவள் படும் அவஸ்தையைக் கண்டு பாகீரதியின் கண்களும் கலங்கி விட்டன. என்ன இருந்தாலும் உடன்பிறப்பல்லவா?

டாக்டர் வந்து ஏதோ ஊசி போட்டார்.

"ஒன்றும் உறுதியாகச் சொல்வதற்கில்லையம்மா!" என்று சொல்லிப் போய் விட்டார். உடனே பாகீரதி தம்பிக்குத் தந்தி கொடுத்து விட்டாள்.

நடப்பது ஒன்றையுமே உணராமல் நோயின் வேதனையில் தவியாய்த் தவித்துக் கொண்டிருந்தாள் மங்களம்.

இரவு ரகு வந்து விட்டான். மங்களத்தைப் பார்த்தபோது 'நிஜமாகவே அபாயமான நிலைதான்' என்று ஊர்ஜிதமாகத் தெரிந்தது. "ஏன் அக்கா, டாக்டர் என்னதான் சொல்கிறார்?" என்று ஆவலுடன் கேட்டான் அவன். பாகீரதிக்கு அவனுடன் பேசவே பிடிக்கவில்லை.

"என்னத்தைச் சொல்லுவார்? இன்றைக்கோ, நாளைக்கோ..ஒன்றும் நிச்சயம் சொல்ல முடியாதாம். இனிமேல் அவ்வளவுதான் என்று கையை விரித்து விட்டார்!" என்றாள் வேண்டா விருப்புடன்.

மங்களத்துக்கு அவர்கள் பேசியதெல்லாம் தெளிவாகக் கேட்டன. அவளால் ஏதும் பேச முடியவில்லை. நன்றாக நினைவு மட்டும் ஓடிக் கொண்டிருந்தது. அவளுக்குத் தன் மீதிருந்த நம்பிக்கை அறவே போய்விட்டது. இடைவிடாமல் கயிறு கட்டி இழுப்பதைப் போல அந்த இரைப்பை அவளால் தாங்க முடியவில்லை.

ரகு இரண்டு நாட்கள் தங்கிப் பார்த்தான். மங்களத்தின் இரைப்பு ஓரளவு அடங்கி விட்டது. அவனுக்கு ஏனோ எரிச்சலாக வந்தது. இரண்டு நாட்கள் இங்கே தங்கி விட்டதில் எத்தனையோ காரியங்கள் தடைப்பட்டுப் போனதாகச் சொல்லிக்கொண்டான்.

"அக்கா! இனிமேல் ஏதாவது ஒன்று ஆனுலொழிய எனக்குச் செய்தி அனுப்பாதே!" என்று அவன் பாகீரதியிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

மங்களத்துக்குக் கண்ணீர் பொங்கியது. அவளால் இன்னும் படுத்துக் கொள்ள முடியவில்லை. முன்னே தலையணைகளை அடுக்கி அவற்றின் மீது தலையைக் கவிழ்த்துக் கொண்டுதான் உட்கார்ந்திருந்தாள். ஒரு வாரமாக இந்த நிலைதான். உடம்பெல்லாம் ரணமாகி வலித்தது. இழுப்பைத் தாங்கமுடியாது நெஞ்செல்லாம் உலைந்தது. அவள்படும் இந்த அவஸ்தையைக் கண்டு வாசுவும் தங்கமும்தான் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தனர். பெரியவர்கள் அவளது முடிவு நேரத்தைத்தான் ஆவலுடன் எதிர்பார்ப்பதாகத் தெரிந்தது.

இத்தனை நாட்களாக வாழ்ந்ததற்கெல்லாம் ஏதோ அர்த்தம் இருந்தது. இப்போது வாழ்வதில்தான் அர்த்தமேயில்லை' என்று எண்ணிக் கொண்டாள் அவள். அந்த வீட்டிலே ஏதோ வேண்டாத பொருளாக, அனுவசியமாகத் தான் ஒரு பளுவாக, இருப்பதாகத் தோன்றியது அவளுக்கே!

அத்திம்பேருக்கு வீட்டிலே என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளவே நேரம் கிடையாது. ஆபீஸ் வேலைகளைக் கவனிப்பதற்கே அவருக்குப் பொழுது போதாது. எப்போதாவது "எப்படியிருக்கிறது? டாக்டர் வந்தாரா?" என்று இந்த மாதிரி ஏதாவது மேலோட்டமாகக் கேட்டுக் கொண்டு போய் விடுவார்.

உடன்பிறந்தவர்களின் ஆதரவே அற்று விழுந்து கொண்டிருக்கும்போது மற்றவர்களைப் பற்றி எண்ணி என்ன பயன்?

ரகு ஊருக்குப் போய் விட்டான்.

தன் இதயத்தில் ஏதோ வேதனை ஜனித்து மலையாக வளர்ந்து விட்டதை மங்களம் உணர்ந்தாள். உடலின் வேதனையைக் கூடப் பொறுத்துக் கொள்ளலாம் போல இருந்தது. இந்த மன வேதனையைத் தான் அவளால் தாள முடியவில்லை.

இரவு முழுவதும் அவள் பிரார்த்தனை செய்து கொண்டேயிருந்தாள்: 'தெய்வமே! என்னை உன் பொன்னடிக்குச் சேர்த்துக் கொள்!' என்று தெய்வத்துக்கு அவள் முறையிட்டது எட்டியதோ என்னவோ?

மறுநாள் வீட்டிலே ஒரே பரபரப்பாக இருந்தது. 'அத்திம்பேரின் தம்பி பிள்ளைக்கு ராமேசுவரத்தில் கல்யாணம்' என்று கடிதம்



*புதுமை பெறுக!*
*இதம் பெறுக!*
*நளினமாய் இருங்கள்! நிச்சயமாகும்!*

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோ ரம்மிய மணம் கொண்டது.




# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

உன்னத, மனோரம்மிய மணத்துடன்.

---

## கவலையற்ற
## சைகிள்
## சவாரிக்கு

# ராலே
# ராபின் ஹூட்

ஒவ்வொரு ஸென்–ராலே உற்பத்தியும் மிக்க உயர்ந்த சாமான்களைக் கொண்டு மிகுந்த நவீன விஞ்ஞான முறையில் தயாரித்தது; ஒவ்வொரு அங்கமும் தனித்தனியே பரிசோதிக்கப்பட்டது. இதன் பலன்-குறைந்த செலவில் கவலையற்ற சைகிள் சவாரி!



# ஸென்-ராலே





"ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே!" என்றார் பாரதியார். ஆண்களுக்கு நாங்கள் எந்தவிதத்திலும் சளைத்தவர்கள் இல்லை என்று பெண்மணிகள் பல துறைகளிலும் நிரூபித்து வருகிறார்கள். மதுரைக்கு அருகில் இருக்கும் திருநகர் காலனியில் கஸ்தூரிபா மாதர் சங்கம் என்று ஒரு கழகம் நிறுவி அதன் மூலம் மாதர் குலத்துக்குத் தொண்டாற்றி வருகிறார்கள். மேற்படி கஸ்தூரிபா சங்கத்தார் நான்காவது ஆண்டு விழாவைச் சென்ற ஜூன் மாதம் சிறப்பாகக் கொண்டாடினார்கள். இந்த ஆண்டு விழாவுக்குத் திருமதி சரஸ்வதி அவர்கள் தலைமை வகித்துச் சிறப்பித்தார். விழாத் தலைவரையும் சங்கத்தைச் சேர்ந்த பெண்மணிகளையும் மேலே படத்தில் காணலாம்.

---

வந்திருந்தது. பிரயாணத்தைப் பற்றிய ஆலோசனையில் விடே திமிலோகப்பட்டது.

மங்களத்தை எப்படி விட்டு விட்டுப் போவது?—இந்தப் பிரச்னை குறித்துத்தான் அவர்கள் மனம் போன போக்கில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஆயினும் பிறரை நம்பி வீட்டை ஒப் படைத்து விட்டுப் போவதில் பாகீரதிக்கு விருப்பமில்லை. கடைசியில், தங்கத்தை விட்டு விட்டுப் போவது என்று தீர்மானித்தார்கள்.

சித்தியை இந்த நிலையில் தனியே விட்டு விட்டுப் போவதில் தங்கத்துக்கு விருப்பமே யில்லை. ஆகவே அவள் முழுமனத்துடன் சித்திக்குத் துணையாக இருக்க ஒப்புக் கொண்டாள். புறப்படும்போது பாகீரதி மங்களத்திடம் வந்து சொல்லிக்கொண்டாள். "நாங்களெல்லாம் ராமேசுவரம் போய்விட்டு வருகிறோம். தங்கம் மட்டும் இங்கே இருக் கிறாள். உன்னைக் கவனிச்சுக்க!" மங்களம் சிரமப்பட்டுத் தலையை நிமிர்த்தினாள்.

"போய் வா!" என்று முனகினாள்.

இரவு வந்தது. வாசுவும் தங்கமும் மங்களத் தின் அருகே வந்து உட்கார்ந்திருந்தார்கள்.

தன் நோயெல்லாம் தீர்ந்து விட்டாற்போல ஏதோ உணர்ச்சி மங்களத்துக்கு. மாலையில் அவர்களெல்லாம் புறப்பட்டுப் போன சில கணத்திலேயே அவளுக்குத் திடீரென்று இழுப்பு நின்று விட்டது.

அவளை வெறுத்தவர்களெல்லாரும் ஒதுங்கி விட்டார்கள். இப்போது அவளுக்கருகே அவளை இதயபூர்வமாக விரும்பும் இரண்டு உள்ளங்கள் இருந்தன. அவளுக்கு இந்தச் சூழ்நிலை மிகவும் பிடித்திருந்தது.

"வா...சு..!" என்று முனகினாள் அவள்.

"என்ன மாமீ...?"

"இந்தத் தலையணைகளை யெல்லாம் தள்ளிப் போட்டுவிட்டு, என்னைப் படுக்க வையேன்!"

"இரண்டு வாரங்களாகப் படுக்காமலேயே கழித்துவிட்ட சித்தி இப்போது எப்படிப் படுத்துக் கொள்ளப் போகிறாள் என்று தங்கத் துக்கு யோசனையாகி விட்டது. "முடியுமா, சித்தி?" என்று கேட்டாள் அவள்.

"எனக்கு வியாதியெல்லாம் தீர்ந்து விட் டது. இனிமேல் ஒண்ணும் இல்லை. உங்கள் இரண்டு பேருடைய அன்பு இருக்கிற இடத் திலே வியாதி நிற்குமா...?" மங்களம் அசா தாரணமான பொலிவுடன் விளங்கினாள்.

"தங்கம்! நீ தலையணைகளை மெதுவாக எடு. நான் தலையைத் தாங்கிக்கிறேன்!" என்றான் வாசு. சொல்லி விட்டு நகர்ந்து போய், மாமியின் தலையைத் தூக்கி மார்போடு சாத்திக் கொண்டான். தங்கம் தலையணைகளை நகர்த்தி வைத்தாள்.

"இப்படியே படுத்துக்கறேன், வாசு! எனக் குத் தலையணை யெல்லாம் வேண்டாம்!" என்றாள் மங்களம்.

வாசுவின் மடியில் தலை வைத்துக் கொண்டு நிம்மதியாகப் படுத்துக் கொண்டாள் அவள்.

"கொஞ்சம் தண்ணீர் கொடு, தங்கம்!"

தங்கம் பக்கத்திலிருந்த பிளாஸ்கிலிருந்து வெந்நீர் எடுத்துக் கொணர்ந்தாள்.

"வாயைத் திற, சித்தி!"

ஒரு மிடறு தண்ணீர்தான் உள்ளே போயிருக்கும். மங்களத்தின் கண்கள் மூடி விட்டன. தலை சாய்ந்து போயிற்று. அவள் முகத்திலே மட்டும் நிம்மதியின் பேரொளி வீசிக் கொண்டிருந்தது.

அவள் மரணத்தை எதிர்நோக்கித் தவ மிருந்தவர்கள் தொலை தூரத்தில் இருக்கும் போது, தான் விரும்பிய சூழ்நிலையில் அவள் கண் மூடி விட்டாள்.

வாசுவும் தங்கமும் எழுப்பிய அழுகை ஒலி அவள் காதுகளுக்குக் கேட்கவில்லை.

அன்பின் சன்னிதானத்தில் அவளுக்கு அமைதி கிடைத்து விட்டது.




ஒரு தாமரை மலர் தான் பிறந்த தடாகத்தையே விளங்கச் செய்வது போல், இந்தப் படத்தில் நடித்திருக்கும் ஒரு குழந்தை படத்தையே பன்மடங்கு உயர்த்தி விட்டது.

என் நண்பர் ஒருவர், குறிப்பிட்ட சில ஹிந்திப் படங்களுக்குப் பல முறை போவார். ஆனால் அவருக்கு ஹிந்தி பாஷை தெரியாது. பின் ஏன் ஹிந்திப் படங்களுக்குப் போனார்? அவருக்கு ஹிந்துஸ்தானி மெட்டுக்களில் உயிர்; நல்ல பாட்டுகள் அடங்கிய படம் என்று தெரிந்தால் அந்தப் படத்துக்குப் பல முறை போவார். படத்தில் கதை, வசனம் எதுவும் அவருக்கு லட்சியம் இல்லை.

எனக்கு நல்ல நடிப்பைக் காண்பதில் அளவு கடந்த ஆசை. நாகையாவின் உணர்ச்சி மயமான நடிப்பைக் காண்பதற்காகவே, ''ஏழை படும் பாடு,'' ''என் வீடு'' முதலிய படங்களைப் பலமுறை பார்த்திருக்கிறேன்.

குழந்தை டெய்சி இராணியின் கள்ளங் கபடமற்ற சிரிப்பையும், நடிப்பையும் பார்ப்பதற்கே, விஜயா பிலிம்ஸாரின் ''யார் பையன்?'' படத்துக்குப் போகலாம்.

இது வரையில் நாம் பல முறையும் பார்த்து அலுத்துப் போன சினிமாப் படங்களிலிருந்து இது கொஞ்சம் வேறுபடுகிறது.

யுவனையும் யுவதியையும் சுற்றியே நம் சினிமாக் கதைகள் அமைவது வழக்கமாக இருந்து வருகிறது; காதலையும் அதில் குறுக்கிடும் சங்கடங்களையுமே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன.

இந்தக் கதையிலும் காதல் இருக்கிறது. அதைச் சுற்றி, அதை நிறைவேறவொட்டாமல் ஏராளமான சந்தேகங்கள் குறுக்கிட்டுக் குழப்புகின்றன. ஆனால் ஒரு குழந்தை தான் படத்தின் நாயகமாக விளங்குகிறது. தாயன்பையும் தந்தையன்பையும் இழந்து இனம் தெரியாத குழந்தைப் பருவத்தில் தாத்தாவிடம் வளர்கிறான் அந்தப் பையன். பையனின் நச்சரிப்பைப் பொறுக்க முடியாமல் தாத்தா அவனுக்கு ஒரு தந்தையைத் தேடுகிறார். பார்க்கில் உட்கார்ந்திருந்த சுந்தர் அவர் கண்ணில் படுகிறான். தூரத்தில் இருந்தபடியே பையனுக்கு 'அவர்தான் உன் அப்பா' என்று காட்டி அவனிடம் அனுப்பி விடுகிறார், தாத்தா. பையன் சுந்தரிடம் ஒட்டிக் கொள்கிறான். சுந்தருக்கும் பையனிடம் ஒரு வாஞ்சை ஏற்படுகிறது. பார்க்கை விட்டு வீட்டுக்குப் புறப்பட்ட போதும் பையன் விடாமல் ஒட்டிக்கொண்டு சுந்தரை, 'அப்பா' என்றே அழைத்துப் பழி வாங்குகிறான். தன் தகப்பனாரின் சுபாவம் தெரிந்த சுந்தர் பையனைத் தன் வீட்டுக்கு அழைத்துப் போகாமல், தன் காதலி லதாவின் வீட்டுக்கு அழைத்துப் போகிறான்; லதாவுக்குச் சுந்தரிடம் சந்தேகம் உண்டாகிறது. சுந்தரின் கல்யாணம் இதனால் தடைப்படுகிறது. சுந்தரின் மாமா, மாமி, தாய், தந்தை யாவரும் பையனைக் கண்டு குழப்பமடைகின்றனர்.

பையனை ஒழித்துக் கட்ட, சுந்தர் எடுத்துக் கொண்ட முயற்சிகளெல்லாம் பயன்படாமற் போனபோதெல்லாம், பையன் ''அப்பா!'' என்று அவனை அழைத்து, எல்லோருடைய உள்ளங்களையும் உருக்கி விடுகிறான்.

பையனைத் தன் வீட்டுக்கே அழைத்து வந்து மாடியில், கட்டிலில் படுக்க வைக்கிறான் சுந்தர். காலையில் பையன் மட்டும் விழித்துக் கொண்டு சுந்தருக்குத் தெரியாமல், மாடிப் படிக்கதவை ஓசைப்படாமல் திறந்துகொண்டு

கிறே போகிறான். பையன் பாத்திரத்தை ஏற்றுத் திறமையாக நடிக்கும் பேபி டெய்சி இராணியை எவ்வளவு பாராட்டினாலும் தகும். இந்தக் கட்டத்தில் குழந்தை டெய்சி இராணியின் நடிப்பு சிகரத்துக்கே போய் விடுகிறது.

நம் தமிழ்ப் படங்களில் கூடக் குழந்தை நடிகைக்குத் தனியாக நடிக்க, இத்தனை 'அடிகள்' (பிலிம் அடிகளைச் சொல்கிறேன். அந்தக் குழந்தையை அடிக்க யாருக்கும் மனம் வராது!) கொடுத்திருக்கிறார்களே என்று நினைத்து மனதுக்குள் வியந்தேன்.

சுந்தராக நடிக்கும் ஜெமினி கணேசனும், லதாவாக நடிக்கும் சாவித்திரியும் நம் தமிழ்ப் பட உலகின் நிரந்தரக் காதலர்கள். ஆகவே, அவர்கள் காதல் பார்வையிலோ, காதல் பேச்சிலோ யாரும் குறைகூற முடியாது. 'எத்தனையோ படங்களில் நாங்கள் நடித்திருக்கிற மாதிரிதான் இதிலும் நடித்திருக்கிறோம். புதிதாக எங்கள் நடிப்பில் என்ன குறையைக் கண்டு விட்டீர்கள்' என்று கேட்டு அவர்கள் நம்மைத் திணற அடிக்கலாம்!

சுந்தரின் தாய் தந்தையர்களாக நடிக்கும் என். எஸ். கிருஷ்ணன், டி. ஏ. மதுரம் இருவரும் மிகவும் நன்றாக நடித்திருக்கிறார்கள். அநாதைக் குழந்தையிடம் அவர்களையும் அறியாமல் பாசம் ஏற்பட்டு, அதனால் உண்டாகும் உள்ளக் கிளர்ச்சிகளை மதுரமும் கிருஷ்ணனும் தத்ரூபமாக உணர்த்துகிறார்கள்.

சாதாரணமாக இவர்கள் இருவரும் கேலியும் கூத்துமாக அடித்துச் சில கட்டங்களில் 'அறு' என்று சொல்லும் அளவுக்குப் போய் விடுவது உண்டு. ஆனால் இந்தப் படத்தில் அந்தக் குறைக்கு இடம் இல்லை.

பையனின் தாத்தாவாக வரும் நாகையா இந்தப் படத்தின் 'கௌரவ' நடிகர்; கௌரவமாகவே தோன்றி, கௌரவமாகவே போய் விடுகிறார். அத்துடன், திரைக் கதையின் கௌரவம், சுந்தர், லதா இவர்களின் கௌரவம் எல்லாம் படத்தின் முடிவில் அவரால் காப்பாற்றப் படுகின்றன. லதாவையே சந்தேகக் கண்களோடு நோக்கி மூடக் கற்பிக்கத் துணிந்த அவள் தமையன் குமார் தான் பையனின் தந்தை என்ற பேருண்மை அவர் மட்டும் இல்லா விட்டால் யாருக்கும் தெரிந்திராது.

படத்தில் கிரியசிருங்கர் நடன நாடகம் ஒன்று வருகிறது. அதில் வரும்

"பூவாத பூங்கொடிகள் பூத்துக் குலுங்கும்— இந்த
பூமியெல்லாம் பச்சைப்பட்டு போர்த்தி விளங்கும்
கூவாத குயிலினம் இசை முழங்கும்-வானம்
குறையாமல் மாதம்மூணு மழை வழங்கும்."

என்ற பாட்டு நன்றாய் அமைந்திருக்கிறது.

திரைக் கதை, வசனம் எழுதியிருக்கும் ஸ்ரீதர் இயல்பாகவே எல்லோரையும் பேச வைத்திருக்கிறார்.

இந்தப் படத்தில், ஒலி, ஒளி யாவும் குறை சொல்ல இடமின்றி அமைந்திருக்கின்றன.

"யார் பையன்?" படத்தில் சிரிப்பதற்கும், ரசிப்பதற்கும், மனிதப் பண்பில் மனத்தை இருத்தி மகிழுவதற்கும் நிறையக் கட்டங்கள் இருக்கின்றன.

இந்தப் படத்தின் மூலக் கதை, ஸ்ரீயுக்த ஜோதிர்மய ராய் என்னும் வங்க நூலாசிரியர் எழுதிய "சேலேகார்" என்னும் கதையைத் தழுவியது.

அடிக்கடி பார்க்கும் நிகழ்ச்சிகளிலிருந்து படத்தில் மாறுதல்களைக் காண முடிந்தால் மகிழ்ச்சியாய்த்தான் இருக்கிறது.



# தமிழ் கூறும் நல்லுலகம்

கல்கத்தா தமிழ் மாணவர் மன்றத்தின் சார்பில் 'வடலூர் தவத்திரு இராமலிங்க அடிகளாரின் தீந்தமிழ்ப் பாடல்களை அழகான விரிவுரைகளோடு திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடத்தினைச் சார்ந்த சிவத்திரு அம்பலவாணனர் அவர்கள் கடந்த 7-7-57, 8-7-57, 9-7-57 மூன்று நாட்கள் சொற்பொழிவாற்றினர். இறுதிநாள் விழாவில் மன்றத் துணைத்தலைவர் திரு. வெ. ஹரிஹரன் அவர்கள் தலைமையில் பாராட்டு நடைபெற்றது. திரு. ஆ. ஜெயராமன் இறை வணக்கம் பாடினர். மன்ற உறுப்பினர்கள் திரு கா. சே. கோவிந்தராஜன், திரு ஒ.வி.சி. சேகர், திரு வி.சி.ரா. கிருஷ்ணன், திரு இரா. கண்ணப்பன் ஆகியோர் சிறப்பு விருந்தினரைப் பாராட்டிப் பேசினர்கள். மன்றத்தின் அன்பளிப்பாகத் திரு அம்பலவாணர் அவர்களுக்கு ஓர் பண முடிப்பு வழங்கப்பட்டது. வங்கத்தில் தமிழ் பரப்பும் பணியில் ஈடுபட்டுள்ள மாணவர் மன்றத்தினை வாழ்த்தி, திரு அம்பலவாணர் மன்றத்துக்கு நன்றி தெரிவித்துக் கொண்டார்.

*

கவியோகி சுத்தானந்த பாரதியின் மணி விழா கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தில் மிகவும் சிறப்பாக 13-7-57 அன்று கொண்டாடப்பட்டது.

விழா நிகழ்ச்சிகளுக்குத் திரு டி. வி. ராஜன் தலைமை வகித்தார். திரு வெ. ஹரிஹரன் கடவுள் வணக்கத்துடன் விழா நிகழ்ச்சிகள் துவங்கின. திரு ஈ. வி. சாஸ்திரி அவர்கள் சுத்தானந்தர் தமிழன்னைக்கு ஆற்றியுள்ள தொண்டுகளைப் பற்றியும், அவருடைய நூல்களின் சிறப்பியல்புகளைப் பற்றியும் விரிவாகப் பேசினர். இதையடுத்துக் குமாரி மங்களம், குமாரி மீனாட்சி, சுத்தானந்தரின் கீர்த்தனைகளை இசையுருவில் அளித்தார்கள். திரு என். எஸ். வைத்தியநாதனின் ஆர்மோனியமும் திரு வேங்கடாசலம் அவர்களின் மிருதங்கமும் இசைக்கு ஏற்றபடி துணை செய்தன.

காரியதரிசி மூ. ஸ்ரீனிவாஸன் நன்றி தெரிவிக்க விழா இனிது முடிவுற்றது.

கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம் கவிமணி திருநாளை ஜூலை 28-ந் தேதியன்று சிறப்பாகக் கொண்டாடியது. திரு. மூ. நாராயண சுவாமியின் கடவுள் வணக்கத்துடன் கூட்டம் துவங்கியது. பல அறிஞர்கள் கலந்து கொண்டு கவிமணிக்கு அஞ்சலி செலுத்தினர். கூட்டத்துக்குத் திரு. டி. வி. ராஜன் தலைமை வகித்தார்.

27-7-57 சனிக்கிழமை அன்று தென் கிழக்கு ரயில்வேயில் உள்ள தென்னிந்தியர் இலக்கியக் கழகம் கவிமணி திருநாளைக் கொண்டாடியது. கவிஞர் ஆக்கரை ஜயராமன் கடவுள் வணக்கம் பாட விழா துவங்கியது. திரு வி. சி. ரா. தலைமையில் திரு. ப. ந. தியாகராஜன் அவர்கள் கவிமணியின் கவிநயத்தையும் பற்றி விரிவாகப் பேசினர். இறுதியில் செயலாளர் சிவ. ஜம்புநாதன் நன்றி தெரிவிக்கக் கூட்டம் இனிது முடிவுற்றது.

சென்ற ஏழு ஆண்டுகளாக ஆந்திரப் பிரதேசத்தில் தமிழ்ப் பணியாற்றிவரும் குண்டக்கல் தமிழ்ச் சங்கத்தின் ஏழாவது ஆண்டு விழா ஜூலை 20, 21 தேதிகளில் வெகு சிறப்பாக நடைபெற்றது. இரு நாட்களிலும் முறையே ஸ்ரீ எம். என். சுவாமிநாதன், ஸ்ரீ பி. ஆர். மாணிக்கவேலு ஆகியோர் தலைமை வகித்தார்கள்.

சிறந்த சொற்பொழிவாளரான ஸ்ரீ திருக்குறள் வி. முனுசாமி அவர்கள் அரும் பெரும் சொற்பொழிவாற்றினர்கள். 'எது இன்பம்?' 'ஏன் பிறந்தோம்?' என்ற தலைப்புகளில் பேசிய அவர் ஈதலே இன்பம் என்றும், பிறர்க்குதவி செய்யவே நாம் பிறந்தோம் என்றும் வள்ளுவர், பாரதி போன்ற பெரியார்களின் பாக்களிலிருந்து எடுத்துக்காட்டுகளுடன் கூறினர். தெலுங்கில் பேசிய ஸ்ரீ வெங்கோபராவ் சங்கத்தின் சேவைகளைப் பாராட்டியதுடன் தமிழ், தெலுங்கு மொழிகளின் முன்னேற்றத்துக்குப் பணி புரிய வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.

விழாவில் நடைபெற்ற ஸ்ரீமதி அலமேலு வெங்கடேசனின் இன்னிசைக் கச்சேரியும், அங்கத்தினர்கள் நடித்த 'மலர்ந்த வாழ்வு' நாடகமும், இதர கலை நிகழ்ச்சிகளும் எல்லோராலும் பாராட்டப்பட்டன. செயலாளர் ஸ்ரீ கே. சுந்தரராமன் சங்கத்தின் சேவைகளை விளக்கி அதன் வளர்ச்சிக்கு அனைவரும் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

*

கலாமந்திரம், கர்க்கி, ஜூலை 28ந் தேதியன்று, அதன் சொல் அரங்குத் தொடர்பின் நான்காவதாகத் "தென்னாட்டின் கலைச் செல்வங்கள்" என்ற தலைப்பில் ஒரு நிகழ்ச்சியை நடத்தியது. திரு பி. எஸ். சந்தானம், இசை, நாடகம், குறிப்பாகக் கேரள நாட்டுக் கதகளி, சாக்கியார் கூத்து பற்றியும், திரு. என். ஆர். சேஷகிரி ராவ் சிற்பம், பரதம் பற்றியும் விரிவுரை ஆற்றினார்கள். புனா கலைக் கழகத்தின் தலைவி திருமதி ஹா. கி. வாலம் அவர்கள் இவ் வைபவத்துக்குத் தலைமை வகித்தார்கள்.

இந் நிகழ்ச்சியை அடுத்து, திருமதி வாலம் அவர்கள் வெற்றார் செல்வதை யொட்டிக் கலாமந்திரம் தலைவர் திரு கே. எஸ். கிருஷ்ணசாமி அவர்கள் தலைமையில், அன்னாருக்கு ஒரு பாராட்டுப் பத்திரம் வழங்கப்பட்டது.

செயலாளர் ரங்கநாதன் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவடைந்தது.

*

பிம்பாய்க்குச் சமீபத்தில் உள்ள கல்யாணில் இருக்கும் "தென்னிந்திய மாதர் சங்கத்தின் ஆதரவில் சமீபத்தில் 'வள்ளி திருமணம்' என்ற நாட்டிய நாடகம் நடந்தது. அவ்வமயம் ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார் நாடகத்தில் பங்கு எடுத்துக் கொண்ட சிறுமிகளுக்குப் பரிசு வழங்கினர். இந்த நாடகத்துக்கு ஏராளமான ஜனங்கள் விஜயம் செய்திருந்தார்கள்.




''யார், மைதிலியா? வா! வா! நீ மட்டும்தான் வந்திருக்கிறாயா? உன் கணவன் வரவில்லையா?'' என்று வியப்பும் திகைப்பும் மிகுந்த குரலில் தனது தங்கையை வரவேற்றான் சேகர்.

''நான்மட்டும்தான் வந்திருக்கிறேன், அண்ணா!'' என்று சுருக்கமாகப் பதில் அளித்தாள் மைதிலி.

''என்ன விசேஷம், மைதிலி! திடீர் என்று....?'' என்று சந்தேகத்துடன் கேட்டான் சேகர்.

''உனக்குத் தெரியாதா, அண்ணா? அப்பா கடிதம் எழுதியிருந்தார். 'பாமாவுக்குக் கலியாணம் நிச்சயம் செய்திருக்கிறேன். அடுத்த ஞாயிற்றுக்கிழமை முகூர்த்தம். நீ வந்துதான் எல்லாம் செய்தாக வேண்டும். உடனே புறப்பட்டு வா' என்று. இங்கே வந்தால் அப்பாவைக் காணோம். பக்கத்து கிராமத்துக்கு அவர் போயிருப்பதாக வண்டிக்கார முருகன் சொன்னான்'' என்று கூறினாள் மைதிலி.

''பாமாவுக்குக் கலியாணம் நிச்சயித்திருக்கிறாரா? எனக்குத் தெரியவே தெரியாதே! வரன் எந்த ஊராம்? உனக்கு எழுதியிருக்கிறாரா?'' ஆச்சர்யம் பொங்க வினவினான் சேகர்.

''நான் உன்னைக் கேட்டால் நீ என்னைக் கேட்கிறாய். அவர் எனக்கு இதைப் பற்றி ஒன்றுமே எழுதவில்லை. உன்னிடம் கூடச் சொல்லவில்லையா, அப்பா?'' மைதிலி குழப்பத்துடன் கேட்டாள்.

''பத்து தினங்களுக்கு முன்பு ஒருநாள் அப்பா என்னிடம், 'நீ பாமாவைக் கலியாணம் செய்து கொள். அவளுடைய சொத்துக்கள் யாவும் அன்னியர்களிடம் போய் விடாமல் நம்மிடமே இருக்கும்' என்றார்.''

''அதற்கு நீ என்ன சொன்னாய்?'' நடுவிலே குறுக்கிட்டாள் மைதிலி.

''என்னத்தைச் சொல்வது? என் மனம் உனக்குத் தெரியாதா? கேவலம் சொத்துக்காக ஆசைப்பட்டுக் கொண்டு ஒரு ஊமைப் பெண்ணை மணந்து அவஸ்தைப்பட என்னால் முடியாது என்று சொல்லி விட்டேன்'' என்றான் சேகர்.

''அதற்குப் பிறகுதான் அவர் வேறு ஒரு வரனைப் பார்த்துக் கலியாணத்தை நிச்சயம் செய்திருக்கிறார். மாப்பிள்ளை யார் என்று தெரியவில்லையே. இங்கே முருகன், செல்லம்மாள், சமையற்கார அம்மாள் எல்லோரையும் கேட்டு விட்டேன். அவர்களுக்கெல்லாம் பாமாவுக்குக் கலியாணம் நடக்கப் போகிறது என்பதே தெரியவில்லை. அப்பா எதற்காகவோ எல்லாவற்றையும் ரகசியமாக வைத்திருக்கிறார்!'' என்றாள் மைதிலி.

''பாமாவையே வேண்டுமானால் கேட்டுப் பாரேன், மைதிலி! அவளுக்குக்கூடத் தெரியாமலா கலியாணத்தை நிச்சயம் செய்திருப்பார்.....?'' என்றான் சேகர்.

''அவளுக்கு மட்டும் எங்கே தெரிந்திருக்கப் போகிறது..?'' என்று அசட்டையாக மொழிந்த மைதிலி, பாமாவின் அறையை நோக்கிச் சென்றாள். அங்கே பாமா குளிக்கப் போயிருப்பதாக வேலைக்காரி சொல்லவே வேறு வழியின்றி அவள் அறையிலேயே உட்கார்ந்து விட்டாள் மைதிலி.

அவளுக்கு எல்லாமே குழப்பமாகத் தோன்றியது. 'அப்பா எதற்காக இப்படி எல்லாவற்றையும் மூடு மந்திரமாக வைத்திருக்கிறார்?' இந்தக் கேள்வியே மைதிலியின் மனத்தில் சுழன்று சுழன்று வந்தது. யோசனையிலாழ்ந்தாள் அவள்.

திவாகர சர்மாவின் மனைவி இறந்து போய்ப் பத்து வருஷங்களுக்கு மேலாகிறது. அன்று முதல் இன்று வரையில்

தாய்க்குத் தாயாகவும், தந்தைக்குத் தந்தையாகவும் இருந்து சேகரையும் மைதிலியையும் வளர்த்து வந்திருக்கிறார் அவர். சென்ற வருஷம்தான் மைதிலியைக் கலியாணம் செய்து கொடுத்தார். சேகர், மைதிலி இருவரையும் வளர்க்கும் பொறுப்புத்தான் அவரைச் சேர்ந்தது என்றால், பாமாவையும் அவர்களைப் போலவே காப்பாற்றியாக வேண்டிய கடமையும் அவருடையதாயிற்று. ஆம்! பாமா அவருடைய சகோதரியின் பெண்.

தாயின் கருவில் இருக்கும்போதே தகப்பனாரை இழந்த துர்ப்பாக்கியம் போதாவென்று பிறந்த மறுவருஷமே தாயையும் இழந்தாள் பாமா. இவ்வளவுடன் அவளைச் சோதித்துத் திருப்தியடையாத விதி மேலும் ஒரு துர்ப்பாக்கியத்தை நிரந்தரமாக அவளுக்கு ஏற்படுத்தி வைத்தது. ஆம்! பாமா ஒரு ஊமை. இணையற்ற எழிலையும் அளவற்ற செல்வத்தையும் அவளுக்கு வாரி வழங்கியிருந்த விதி அவளுடைய கொவ்வைக் கனி வாயைத் திறக்க முடியாமல் செய்து விட்டது. உள்ளத்து உணர்ச்சிகளை வாய் விட்டுக் கூற இயலாத அப்பாலகியை வளர்க்கும் பொறுப்பைத் திவாகர சர்மா தாமே முன் வந்து ஏற்றுக் கொண்டார் என்றால் அதற்குக் காரணம் பாமாவுக்கு அவளுடைய தகப்பனார் விட்டுச் சென்ற அளவற்ற செல்வம்தான் காரணம்.

சேகர் - மைதிலிக்கு எந்தவிதத்திலும் குறைவில்லாமல் வளர்ந்தாள் பாமாவும். மைதிலியைவிடப் பாமா நல்ல அழகி. அடக்கமும் அன்பும் நிறைந்த குணவதி. அறிவிலும் சிறந்து விளங்கினாள் அவள். ஆனால் உலகத்தின் சூது வாதுகளை அறியாத வெள்ளை உள்ளம் அவளுக்கு. பாமாவின் ஆஸ்தி திவாகர சர்மாவைச் சமூகத்தில் ஒரு பெரிய தனவந்தராகத் தோற்றுவித்திருந்தது. மைதிலியையும் நல்ல இடத்தில் கலியாணம் செய்து கொடுக்க முடிந்தது. சேகரையும் நன்றாகப் படிக்க வைக்க முடிந்தது. அடுத்த படியாகப் பாமாவுக்குக் கலியாணம் செய்தாக வேண்டும். இதுவே திவாகர சர்மாவுக்கு ஒரு பெரிய பிரச்னையாக இருந்தது. வீட்டிலும் வெளியிலும், ஏன், அந்த ஊர் முழுதும் பாமாவின்



கலியாணம் எப்படி நடக்கப் போகிறதோ என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

இந்தச் சமயத்தில்தான் புருஷன் வீட்டிலிருந்த மைதிலிக்குச் சர்மாவிடமிருந்து திடீரென்று கடிதம் வந்தது. பாமாவுக்குக் கலியாணம் என்பதே ஒரு ஆச்சர்யம் மைதிலிக்கு. இரண்டாவது மாப்பிள்ளையாக இருக்குமோ என்கிற வியப்பு. மூன்றாவது இன்னமும் மாப்பிள்ளைப் பையன் யாரென்று தெரியவில்லையே என்கிற வேதனை. கலவரத்துடன் உட்கார்ந்திருந்தாள் மைதிலி.

குளித்து விட்டுத் தன் ஈரத் தலை மயிரைக் கோதியபடி தன் அறைக்குள் நுழைந்தாள் பாமா. அங்கே மைதிலியைக் கண்டதும் திடுக்கிட்டாள். பாமாவை உற்று நோக்கினாள் மைதிலி. வன தேவதை போன்ற அவளுடைய அசாதாரண எழில் அவளைத் திகைப்படையச் செய்தது. அன்பும் ஆசையும் அணையின்றிப் பெருக ஆவலுடன் எழுந்திருந்து பாமாவை அணைத்துக்கொண்டாள் அவள் மைதிலியின் அன்பணைப்பில் சிறிது நேரம் திக்கு முக்காடிய பாமா பிறகு ஒருவாறாகத் தன்னைச் சமாளித்துக் கொண்டு, "உன்னுடைய கணவர் வரவில்லையா?" என்று கைகளால் சைகை காட்டிக் கேட்டாள்.

"வரவில்லை. நான் மட்டும்தான் வந்தேன்" என்று பதிலுக்குச் சைகை மூலம் தெரிவித்தாள் மைதிலி.

"என்ன, விசேஷம்?" என்று கேட்டாள் பாமா கையால்.

"உனக்குக் கலியாணமாம். அப்பா எழுதியிருந்தார்!" என்று சைகை மூலம் தெரிவித்தாள் மைதிலி.

ஸ்தம்பித்துப் போய் உட்கார்ந்து விட்டாள் பாமா. அவளுக்கு ஆச்சர்யம் தாங்கவில்லை. "எனக்கு இருக்காது. உன்னுடைய அண்ணாவுக்கு இருக்கலாம்" என்று சேகரின் படத்தைச் சுட்டிக் காட்டினாள் பாமா.

"இல்லவே இல்லை. உனக்குத்தான்!" என்றாள் மைதிலி.

பாமா சிலையாகச் சமைந்து நின்றாள்.

அன்று மாலையில்தான் திவாகர சர்மா வந்தார். வந்ததும் வராததுமாக மைதிலியிடம், ''வருகிறாயா, கடைக்குப் போய்த் துணிகளெல்லாம் வாங்கிக் கொண்டு வந்துவிடலாம்!'' என்றார்.

''என்னப்பா, இது! ஒரு சமாசாரமும் தெரியாமல் நான் குழம்பிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் என்னடா வென்றால் வந்ததும் வராததுமாகக் கடைக்குக் கிளம்பு என்கிறீர்களே!'' என்றாள் மைதிலி சிறிது கோபத்துடன்.

''உனக்கு என்ன சமாசாரம் தெரிய வேண்டும் என்கிறாய்?'' என்று கேட்டார் திவாகர சர்மா.

''என்ன தெரிய வேண்டுமா? ரொம்ப நன்றாக இருக்கிறதே, நீங்கள் கேட்பது? உடன் பிறந்த சகோதரிக்கும் மேலான பாமாவுக்குக் கலியாணம் என்றால் அவளுடைய கணவனாகப் போகிறவரைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு எனக்கு ஆவலாக இருக்காதா?'' என்று கேட்டாள் மைதிலி.

''உண்மையைச் சொன்னால் உனக்கு என்மீது கோபம்வருமோ, என்னமோ!'' என்றார் சர்மா தயக்கத்துடன்.

''கோபம் வருவானேன், சொல்லுங்கள் அப்பா!'' என்று விடாப்பிடியாக வினவினாள் மைதிலி.

''பாமாவுக்கு என்ன குறைச்சல்? அழகு இல்லையா? அடக்கமில்லையா? அறிவு இல்லையா? ஆஸ்தியில்லையா?'' என்று நிறுத்தினார் சர்மா.

''இதெல்லாம் அவளுக்கு இல்லை என்று யார் சொன்னார்கள்? அதைப் பற்றி இப்பொழுது என்ன பேச்சு..?'' என்று எரிச்சலாக மொழிந்தாள் மைதிலி.

''என்னால் முடிந்த மட்டும் சொன்னேன். சேகரிடம் பாமாவை மணம் புரிந்துகொண்டு விடு என்றேன். அவன் கேட்கவில்லை....''

''அதற்காக....?''

''பாமாவை வேறு இடத்தில் கலியாணம் செய்து கொடுத்துவிட்டால் இன்று நாம் அனுபவித்து வரும் ஆஸ்திபாஸ்தியெல்லாம் அவளுடன் அவள் புருஷனிடம் போய்விடும். நாம் ஓட்டாண்டியாகிவிட வேண்டியதுதான். அப்படி ஒரு நிலைமை எனக்கு வருவதை நான் சிறிதும் விரும்பவில்லை....''

''அதனால் என்ன செய்யப் போகிறீர்கள்?'' அவசரப்பட்டாள் மைதிலி.

''அதனால் நானே அவளை மணந்து கொள்ள முடிவு செய்துவிட்டேன்!'' என்றார் சர்மா தாழ்ந்த குரலில்.

''அப்பா!'' என்றாள் மைதிலி.

''மைதிலி! இரையாதே! இந்த விஷயம் உன் மட்டோடு இருக்கட்டும். வேறு யாருக்கும் தெரியக் கூடாது. முக்கியமாகப் பாமாவுக்குத் தெரியக் கூடாது. காதும் காதும் வைத்தாற்போல் சுவாமி மலையில் போய்க் கலியாணத்தை முடித்து விடப் போகிறேன்'' என்று கூறிவிட்டு விடுவிடுவென்று வெளியே சென்று விட்டார் திவாகர சர்மா.

மைதிலி எல்லையற்ற வியப்பினால் விக்கித்துப் போய் உட்கார்ந்து விட்டாள். 'சே! மனிதனுக்குப் பணம் என்றால் இவ்வளவு பேராசையா?' என்று உள்ளம் கொதித்தது அவளுக்கு. தகப்பனாரின் இரக்கமற்ற செய்கையும் பணத்தாசையும் எல்லையற்ற வெறுப்பையும் கோபத்தையும் உண்டாக்கின மைதிலிக்கு. 'ஊருக்குக் கிளம்பிப் போய்விடலாமா?' என்று யோசித்தாள். தகப்பனாரின் இந்த நியாயமற்ற செய்கைக்குத் தானும் உடந்தையாக இருக்கக் கூடாது என்று தோன்றியது அவளுக்கு.

உடனே வண்டிக்கார முருகனைக் கூப்பிட்டு, ''வண்டியைக் கட்டு! நான் உடனே ஊருக்குப் போக வேண்டும்'' என்று கூறினாள்.

''நீ செய்யறது நல்லாயில்லே, குழந்தே! நீ இப்போ ஊருக்குப் போகக் கூடாது!'' என்றான் முருகன்.

''உனக்கு ஒன்றும் தெரியாது முருகா! நான் உடனே போக வேண்டும்'' என்றாள் மைதிலி பிடிவாதமாக.



திருவாரூர் கர்நாடக சங்கீத மும்மணிகள் ஆராதனை சபையின் கௌரவக் காரியதரிசி ஸ்ரீ ஏ. சுப்பிரமணிய அய்யரின் புதல்வி சௌ. கமலாவுக்கும் திருச்சி கட்டாம்பட்டியைச் சேர்ந்த ஸ்ரீ நாகேஸ்வர அய்யரின் புதல்வர் சிரஞ்சீவி சுப்பிரமணியத்துக்கும் சென்ற 30–6–57ல் திருமணம் வெகுசிறப்பாக நடைபெற்றது.



இலங்கைப் பிரதம மந்திரி திரு பண்டாரநாயகாவுக்கும் தமிழ் அரசுக் கட்சித் தலைவர்களுக்குமிடையில் சமரச ஒப்பந்தம் ஏற்பட்ட பிறகு பிரதம மந்திரியும் தமிழரசுக் கட்சித் தலைவர் திரு. செல்வநாயகமும் முகமலர்ச்சியுடன் கை குலுக்கி ஒருவரையொருவர் பாராட்டிக் கொள்கிறார்கள். இந்த நிகழ்ச்சியினால் இலங்கையில் அமைதி நிலவும் நல்ல சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. வாழ்க, தமிழ் மொழி.

''எனக்கு எல்லாம் தெரிந்து விட்டது. நீயும் ஐயாவும் பேசிக்கிட்டு இருந்ததையெல்லாம் நான் கேட்டுவிட்டேன்!'' என்று கூறினான் அவன்.

''அப்படியுமா என்னைத் தடுக்கிறாய்?'' என்று கோபமாக வினவினாள் மைதிலி.

''குழந்தை! நீ படிச்ச பொண்ணு! பொறுப்பில்லாமல் ஊருக்குப் புறப்பட்டுப் போகலாமா? எப்படியாவது ஐயாவிடம் சொல்லி இந்தக் கலியாணத்தை நிறுத்துவியா....'' என்று இழுத்தான் வண்டிக்கார முருகன்.

''நான் சொன்னால் அப்பா கேட்பாரா? அவர்தான் ஒரே பிடிவாதமாக இருக்கிறாரே....'' என்றாள் மைதிலி மிகுந்த கவலையுடன்.

''நீ எப்படியாவது சின்ன ஐயாவிடம் சொல்லி அவரைப் பாமாவைக் கட்டிக் கொள்ளும்படி செய். தானே பெரிய ஐயா விட்டுக் கொடுத்திடுவாரு.''

''அண்ணாவும்தான் பாமாவைச் செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லி விட்டானே! அவன் என்னுடைய பள்ளித் தோழி வசந்தாவைத் தான் மணந்து கொள்வதாக இருக்கிறான். இந்த விஷயம் எனக்குத் தெரியும் என்பது அவனுக்குத் தெரியும். நான் எப்படி அவனிடம் பாமாவைப் பற்றிப் பேசுவேன்?'' என்று அழமாட்டாத குறையாகக் கூறினாள் மைதிலி.

''இதிலேதான் உன் சாமர்த்தியம் தெரியவேணும் குழந்தை. அதோ சின்ன ஐயாவே வந்துட்டுது. நான் போகிறேன்....'' முருகன் மெள்ள அந்த இடத்தை விட்டு நழுவினான். மைதிலி ஒன்றும் புரியாமல் திகைத்துப் போய் நின்று கொண்டிருந்தாள்.

''என்ன, மைதிலி! அப்பா வந்து விட்டார் போலிருக்கிறதே! ஏதாவது விஷயம் தெரிந்ததா!'' என்று கேட்டபடியே வந்தான் சேகர்.

''அப்பா வந்தார்!'' என்றாள் மைதிலி வெடுக்கென்று.

''என்ன சொன்னார்?''

''எல்லாம் சொன்னார்!''

''என்ன, எல்லாம் சொன்னார்!''

''பாமா! அழகுக் கிளி பாமா! என்னைவிடச் சின்னவளான பாமா! என் சித்தியாக, என் சிறிய தாயாராக ஆகப் போகிற கொடுமையைச் சொன்னார்! போதுமா, அண்ணா!'' ஆத்திரம் பொங்கக் கூறினாள் மைதிலி.

''என்ன, மைதிலி! உளறுகிறாயா?'' என்றான் சேகர் ஆச்சரியம் தாங்காமல்.

''உளறவில்லை, அண்ணா! உண்மையைத்தான் சொல்லுகிறேன். என் உள்ளம் கொதிக்கிறது. நான் ஒரு ஆணாகப் பிறந்திருக்கவில்லையே என்று!''

''பிறந்திருந்தால்....?''

''இப்படி விதியால் வஞ்சிக்கப்பட்ட ஒரு பேதையை நானும் சோதிக்கமாட்டேன். அநியாயமாக அவளை ஒரு கிழவருக்குப் பலியாக்க மாட்டேன்.''

''மைதிலி!''

''யோசித்துப் பார், அண்ணா! வசந்தாவை மணக்க ஆயிரம் பேர்கள் முன் வருவார்கள். ஆனால் பாமாவை? அவளால்தான் இன்று நம் குடும்பம் தலை தூக்கி நிற்கிறது. நீ பட்டதாரியாகி



திரு என். மகாலிங்கம் எம். எல். ஏ. அவர்களின் மைத்துனரும், கவுண்டர் அண்டு கம்பெனி டைரக்டருமான திரு ஏ. வி. ரிக்கும் மாதம்பட்டி மிராசுதார் திரு எம். என். நடராஜ கவுண்டரின் புதல்வி சௌ. சுசீலாவுக்கும், மாதம் பட்டியில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது. திருமண வைபவத்துக்கு ஏராளமான பிரமுகர்களும், நண்பர்களும், உறவினர்களும் வந்திருந்து, தம்பதிகளை ஆசிர்வதித்தனர். வாழ்க, மணமக்கள்!

---

ஐ. ஏ. எஸ். பரீட்சைக்குப் போயிருப்பது அவள் பணத்தால். நான் இன்று ஒரு பெரிய இடத்தில் வாழ்க்கைப்பட்டிருப்பது அவள் பணத்தால். அப்பா இந்த வயோதிக வயதில் உட்கார்ந்தபடி ராஜபோகம் அனுபவிப்பது அவள் பணத்தால். ஆனால் இவ்வளவுக்கும் அவளுக்கு நாம் செய்த கைம்மாறு? உனக்கு மனம் என்று ஒன்று இருக்குமானால், நீ மட்டும் ஒரு சுயநலவாதியாக இல்லாமல் இருந்திருப்பாயானால் பாமா ஒரு கிழவனுக்கு மாலை யிட வேண்டியிராது!'' என்றாள் மைதிலி. உணர்ச்சி மிகுதியால் அவள் இதழ்கள் துடிதுடித்தன.

''மைதிலி! உன் விருப்பப்படியே நடக்கட்டும். அப்பாவிடம் சொல்லி விடு!'' என்று கூறினான் சேகர்.

''அண்ணா! நிஜமாகத்தான் சொல்லுகிறாயா? பிறகு கல்யாணம் செய்தும் பிரம்மச்சாரி, கடன் வாங்கியும் பட்டினி என்கிற கதையாகி விடாதே! வீணாக ஒரு பெண்ணின் வாழ்வை..'' மேலே சொல்லத் தயங்கினாள் மைதிலி.

''அந்தக் கவலை உனக்கு வேண்டாம். நான் அவளுக்காக வாழ்வது என்று முடிவு செய்து விட்டேன்!'' என்றான் சேகர் உறுதியாக.

''இப்பொழுதே போய் இந்தச் சந்தோஷ சமாசாரத்தைப் பாமாவிடம் சொல்கிறேன்'' என்று குதித்துக் கொண்டே பாமாவின் அறைக்கு ஓடினாள் மைதிலி. ஆனால் பாமா அவள் அறையில் இல்லை. அந்த வீட்டில் அவள் எங்குமே காணப்படவில்லை. அவள் விட்டுச் சென்ற ஒரு துண்டுக் கடிதம் தான் மைதிலிக்கு அகப்பட்டது. அதை எடுத்துப் படித்தாள்:

''மைதிலி!

முருகன் மூலம் விஷயம் அறிந்தேன். என் நல்ல காலம் மாமா என்னை விரும்பாமல் என் பணத்தை மட்டுமே விரும்பினார். அவருக்கு வேண்டியது பணம்தானே? என்னுடைய சகல சொத்துக்களையும் அவரே எடுத்துக் கொள்ளட்டும். நான் மனப்பூர்வமாகத் தந்து விட்டேன் அவருக்கு. நான் போகிறேன், எனக்கே தெரியாத ஒரு இடத்துக்கு. அனாதைகளுக்கு ஆதரவளிக்கத் தான் ஆண்டவன் இருக்கிறானே!

— பாமா''

''ஐயோ, பாமா! வெண்ணெய் திரண்டு வரும்போது தாழியைஉடைத்து விட்டாயே!'' மைதிலி அலறினாள்.

மூலைக்கு ஒருவராகச் சென்றார்கள். வயல்வெளிக்குப் போயிருந்த திவாகர சர்மாவுக்கும் விஷயம் பறந்தது. அவர் அப்படியே அந்த ஊர் ரயில்வே ஸ்டேஷனுக்கு ஓடினார்.

இரண்டு மணி நேர மன உளைச்சலுக்குப் பிறகு மைதிலியின் எதிரில் பாமாவைக் கொண்டு வந்து நிறுத்திய சர்மா, ''அம்மா, குழந்தை! என்னை மன்னித்து விடு. பாமா கன்னியாகவே இருக்கட்டும்!'' என்று கூறினார்.

''வேண்டியதில்லையப்பா! பாமாவை நானே மணந்து கொள்கிறேன்!'' என்றான் சேகர்.

''நிஜமாகவா?'' என்று கேட்ட சர்மாவின் வாய் வெகு நேரம் வரை மூடாமல் திறந்தே இருந்தது.

**மை**திலிக்கு மூச்சு விடக்கூட நேரமில்லை. கலியாணக் காரியம் அதிகமாக இருந்தது. பறந்து பறந்து வேலை செய்தாள். பாமாவை அலங்கரிக்கவே அவளுக்கு வெகு நேரமாயிற்று. ஏதோ கேட்பதற்காகத் தன் தகப்பனாரைத் தேடிக் கொண்டு உக்கிராண அறைப் பக்கம் சென்றாள்.

அங்கே ஏதோ பேச்சுக் குரல் கேட்கவே சற்று நின்றாள் மைதிலி.

''பார்த்தாயா, நடேசா! இந்தக் காலத்துப் பிள்ளைகளை நான் வழிக்குக் கொண்டு வந்த விதத்தை?'' என்றார் திவாகர சர்மா.

''என்னமோ சர்மா! எனக்கு உள்ளூறப் பயம்தான். கடைசியில் நீயே அந்தப் பெண்ணை மணந்து கொள்ளும்படி நேர்ந்து விட்டால்..?'' என்றார் நடேசய்யர்.

''அப்படி நேரும்படி விட்டு விடுவேனா?'' என்று பெருமையுடன் கூறிய சர்மா பெரிதாகச் சிரித்தார்.

மைதிலி, ''அப்படியா சங்கதி?'' என்று திகைத்துப் போய் நின்றாள்!



# தொண்டை ரணங்களுக்கு இதமளிக்க பெப்ஸ் உபயோகியுங்கள்

ஜலதோஷம், இருமல், இன்ப்ளுயன்ஸா, பிராங்கைடிஸ் முதலிய வியாதிகளாக மாறக்கூடிய தொண்டை ரணங்களுக்கு, பெப்ஸ் உடனே உபயோகியுங்கள். பெப்ஸிலுள்ள குணமளிக்கும் மருந்துச் சத்துகள் ஈரல், சுவாசப்பை இவற்றுள் புகுந்து கபத்தை உடைத்து ரணங்களை ஆற்றுகின்றன. டாக்டர்கள் பெப்ஸை சிபாரிசு செய்கின்றனர். குழந்தைகளும், வயோதிகர்களும் உபயோகிக்கலாம். தீங்கு விளைவிக்கும் மருந்துகள் இதில் இல்லை.




**PEPS**

பெப்ஸ் தொண்டை மார்பு உபாதைகளுக்கு சமனமூட்டும் வில்லைகள்.

FPY-40-TAM

சோல் ஏஜண்டுகள் :

**தாதா அண்டு கம்பெனி**

86, நைனியப்ப நாயக் தெரு, சென்னை - 3

---

வெளிவந்துவிட்டது !

ராஜாஜி

எழுதிய

# சக்கரவர்த்தித் திருமகன்

ராமாயணம் முழுவதும் எளிய தமிழ் வசனம். முன்பு 'கல்கி'யில் தொடர்ச்சியாக வெளிவந்த அத்தியாயங்கள் அத்தனையும் சேர்ந்து ஒரு நூலாகப் பெரிய அளவில் 350 பக்கங்கள்.

**விலை ரூ. 1½**

★

வெளியிட்டோர் :

## சம்பா நூலகம்

59, பிராட்வே - சென்னை-1

விற்பனையாளர் :

## பாசுராம் கம்பெனி

2/27, மீரான் சாயபு தெரு, சென்னை - 2

★

சம்பா வெளியீடுகள்: அடுத்து வரும் நூல்கள்

## ராஜாஜியின் கட்டுரைகள்

இதுவரை ராஜாஜி பல சந்தர்ப்பங்களிலும் பல பொருள்களையும் பற்றி எழுதியுள்ள கட்டுரைகள் அனைத்தும் சேர்ந்த தொகுதி.

## ராஜாஜியின் கதைகள்

ராஜாஜி சமீபத்தில் எழுதிய கதைகளும் சேர்ந்த முழு நூல். ராஜாஜியின் சிறு கதைகள் அனைத்தும் அடங்கியது.

## மனோன்மணீயம்

பேராசிரியர் சுந்தரம் பிள்ளை எழுதிய முதல் தமிழ் நாடகக் காவியம்

# அபிவிருத்தி செய்யப்பட்ட அம்பர் சர்க்காவுக்கு

# ரூ. 1,00,000 பரிசு

## முடிவு தேதி 1958 ஜனவரி 30ந் தேதிவரை நீடிக்கப்பட்டுள்ளது

இந்திய சர்க்கார் முன்பிருந்த அகில இந்திய கதர், கிராமக் கைத்தொழில்கள் போர்டுடன் கலந்து ஆலோசனை செய்து, குடிசை நூற்பு இயந்திரம் யூனிட்டு கண்டு பிடிப்பதில் வெற்றி பெறுவோருக்கு ரூ. 1,00,000 பரிசு அளிப்பதென்ற தங்களுடைய தீர்மானத்தைச் சென்ற ஜனவரி மாதம் வெளியிட்டனர். அப்போது அறிவிக்கப் பட்ட அந்தப் பரிசு அளிப்பதன் சம்பந்தமான முக்கிய நிபந்தனைகளாவன :

1. கண்டு பிடிக்கப்படும் இயந்திரத்தில் நான்கு அல்லது மேற்பட்ட கதிர்கள் கூடிய சர்க்கா இருப்பதுடன் நிறம்படத் திறப்பதற்கும் சுத்தம் செய்வதற்கும் சுற்றுவதற்குமான உபகரணங்கள் இருக்க வேண்டும்.
2. நூற்பு இயந்திர செட்டு கிராமப் பகுதிகளில் மிகச் சிறிய குடிசைகளிலும் கையால் அல்லது காலால் வேலை செய்யக் கூடியதாக இருக்க வேண்டும்.
3. முழு செட்டின் விலை பெருவாரியாகத் தயாரிக்கப்படுமாயின் ரூ. 150/-க்கு மேல் போகக் கூடாது.
4. இந்திய பஞ்சு வகைகளான வகட், விஜய், புரோச் விஜய் (கொட்டைப் பஞ்சு) அல்லது நாட்டில் வழக்கமாகப் பயிராகும் இதர பஞ்சு வகைகளைக் கொண்டு செட்டில் நூல் நூற்கக் கூடிய வசதி யிருக்க வேண்டும்.
5. 12 முதல் 18 நெம்பர், 18 முதல் 20 நெம்பர், 20 முதல் 32 நெம்பர், 32 முதல் 40 நெம்பர் மற்றும் 40 முதல் 60 நெம்பர் நூல் வகைகளை செட்டு நூற்கக் கூடியதாக இருக்க வேண்டும். ஒரேமாதிரியான கனமும் முறுக்கும் கொண்டு நூற்கக் கூடியதாயும் அதைத் தவிர புரு இழை நெம்பர் மாறுதல், உறுதியில் வித்தியாசம், மற்றும் நிர்ணயிக்கப்படக்கூடிய இதர சோதனைகளிலும் தேர்வு பெறக்கூடியதா யிருக்க வேண்டும்.
6. செட்டு மொத்தத்தில் 8 மணி நேர வேலை தினத்தில் குறைந்த பக்ஷம் (பருத்தியிலிருந்து நூல்வரை) கார்டிங் வேலையில் மணி ஒன்றுக்கு 14 முதல் 15 தோலா முடிக்கக் கூடியதாயும் சுற்றுவதில் மணி ஒன்றுக்கு 5 முதல் 8 தோலா முடிக்கக் கூடியதாயும் 12 கண்டு நூல் உற்பத்தி செய்யக் கூடிய திறன் வாய்க்கப் பெற்றதாயும் இருக்க வேண்டும். மற்றும்,
7. செட்டு, கிராமங்களில் குறிப்பாக அதில் வேலை செய்பவர்களாலேயே அல்லது கிராமத் தொழிலாளர்களால், பூட்டக் கூடியதாயும், பழுது பார்க்கக் கூடிய தாயும், சர்வீஸ் செய்யக்கூடியதாயும் இருக்க வேண்டும்.

குடிசை நூற்பு இயந்திர யூனிட்டின் விரும்பப்படும் காகிதச் சித்திரங்கள் அதன் சம்பந்தமான விவரங்கள், அதன் திறமைச் சோதனைகள் பற்றிய குறிப்புகள், அதன் உற்பத்திக்கு அவசியமான மூலப் பொருள்கள் கிடைக்குமிடம், அதன் உறுப்புகளை உருவாக்குவதற்குள்ள வசதிகள் முதலிய விவரங்கள் அனுப்ப 1957 ஜூன் 30-ந் தேதி கடைசி நாள் என்று குறிப்பிட்டிருந்தோம். இருந்தபோதிலும் சென்ற ஜூன் மாத இறுதியில் இந்தப் போட்டியில் கலந்து கொள்ளும் சிலர் வேண்டிக் கொண்டதற்கிணங்க இத் தேதியை 1957 ஜூலை 31க்கு ஒத்தி வைத்தோம். இப்பரிசுப் போட்டியில் அநேகர் கலந்துகொண்டு விவரங்கள் அனுப்பி யிருக்கிறார்கள். ஆனால் அவையனைத்தும் சித்திரங்க ளாகவும், புகைப்படங்களாகவுமே உள்ளன. அவர்களில் சிலர் மாடல்கள் அனுப்பு வதற்கு இன்னும் சிறிதுகாலம் தேவையா யிருக்கிறதென்று அறிவித்துள்ளனர். ஜூலை 9-ந் தேதி யன்று நீதிபதிகள் கூடிய முதல் கூட்டத்தில் மேற்கூறியவற்றை யெல்லாம் ஆராய்ந்து, சித்திரங்கள், இயந்திர மாதிரிகள், அனைத்தும் வந்து சேருவதற்கான முடிவுத் தேதியை 1958-ம் வருஷம் ஜனவரி 31ந் தேதி வரை நீடிக்க அவர்கள் கமிஷனுக்குச் சிபாரிசு செய்திருக்கிறார்கள். கமிஷனும் நீதிபதிகளின் சிபாரிசை ஏற்றுக் கொண்டிருக் கிறது. முன்பே அனுப்பியுள்ள சித்திரங்கள் முதலானவை பரிசீலிக்கப்படாமல் முத்திரை யிடப்பட்டுள்ளன.

இந்தப் பரிசுப் போட்டியில் கலந்துகொள்ள விரும்புவோர் கவர்களையும், மாடல் களையும், சித்திரங்களையும், நன்கு மூடி முத்திரையிட்டுக் கமிஷனுக்கு அனுப்ப வேண்டும். அத்துடன் ஒரு லட்ச ரூபாய் பரிசுத் திட்டத்துக்காகக் கமிஷன் தயாரித்துள்ள பாரத்தில் தங்கள் மாடல்கள் சம்பந்தமாகக் கேட்டுள்ளவற்றுக்குரிய விவரங்களைக் குறித்து அவை 1958 ஜனவரி 31க்குள் உதவி டைரக்டர் (சரஞ்சாம்) காதி, கிராமத் தொழில் கமிஷன், ஹரிஜன ஆசிரமம், அகமதாபாத்-13 என்ற விலாசத்துக்கு வந்து சேரும்படி செய்ய வேண்டும். எல்லாச் சித்திரங்களும், மாதிரிகளும், 1958 பிப்ரவரி துவக்கத்தில் நீதிபதிகளினால் பரிசீலிக்கப்படும். பரிசுத் திட்டத்துக்கான நிபந்தனைக்கு பிரதம நிர்வாக அதிகாரி (பரிசுப் பிரிவு), மிஸ்திரி பவன், தின்ஷா வாச்சா ரோடு, த. பெ. எண் 482, பம்பாய்-1 என்ற விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

DA - 924(7)




சிலைந்திருந்த போர்வையை இழுத்துப் போர்த்தி விட்டுக் கணவரின் முகத்தை உற்று நோக்கினாள் சாரதா. இரவு முழுவதும் நோயுடன் போராடிய களைப்பு! ஈசுவரன் ஆழ்ந்த சுவாசம் எடுத்து நிதானமாக மூச்சுகளை விட்டபடியால் திருப்தியுற்ற சாரதா மெல்ல அப்பால் வந்தாள். காலைக் கதிரவனின் வெய்யில் நோயாளியின் கால்களில் உறைக்கவே அவர் கால்களைச் சுருட்டிக் கொண்டார்.

"அக்கா! மருந்து வாங்கி வந்து விட்டேன். டாக்டர் மன அதிர்ச்சியே நோய்க்குக் காரணம் என்கிறார்" என்ற பத்மநாபன் மருந்தைக் குலுக்கி அவுன்ஸ் கிளாஸில் விட்டான்.

"எல்லாம் அந்த மூத்தாள் மகனைப் பற்றிய ஞாபகம்தான். வேறு சிந்தனை ஏது?" என்றாள் சாரதா. அவள் முகத்தில் பெருங்கோபம் கூத்தாடியது.

பத்மநாபன் அவரைத் தட்டி எழுப்பி மருந்தை வாயில் ஊற்றினான். "அவனையே நாம் இங்கு வரவழைத்தோமானால்...." என்று அவன் முடிப்பதற்குள் ஈசுவரன் கைகளால் மார்பை அழுத்தியபடி புன்னகை செய்தார். "அதற்கு அவசியமே இராது. யாருடைய அழைப்புக்கும் அவன் வர மாட்டான். தந்தை இறந்து விட்டார் என்று கூறும் மகன் அவர் மரணப் படுக்கையைக் கேட்டு ஓடி வருவானா? வேண்டாம், பத்மநாபா, அந்தச் சிரமம்..." ஒரு கணம் நிழலாடிய தெளிவு மறைந்து அவருடைய முகம் கறுத்துக் கூம்பியது.

"இந்தப் பிள்ளை இருக்கிற லட்சணத்துக்கு பாசத்துக்கொன்றும் குறைவில்லை!" என்று முகத்தைக் குலுக்கினாள் சாரதா. கணவர் பிரக்ஞையோடிருந்த போதிலும் அவரிடப் பேச்சு கொடுக்காது உள்ளே வேகமாகப் போய் விட்டாள்.

ஊதுவத்தியிலிருந்தும் எழும்பிய புகை வளையங்கள் அறை முழுவதும் பரவின. படத்திலே பதிந்த கண்கள் கலங்கின. குறுநகை சிந்த நிற்கும் குமாரின் முகத்திலே கோபத்தின் ரேகை கூட இல்லை. மலைமேலேறி நின்று ஆண்டியாகக் காட்சி தரும் குமரனுக்கும் தந்தையின்மேல் கோபமா? வேதனையைக் கரைக்கும் பெருமூச்சொன்று உள்ளத்தைக் கிழித்துக் கொண்டு வந்தது. போர்வைக்குள் உடலைச் சுருக்கிக் கொண்டார்.

"சாரதா எங்கே போய் விட்டாள்? மனிதனுக்கு, ஒத்தாசையாகக் கூடவே இருக்கக் கூடாதா? நல்ல பெண். ஊம்! அவள் என்றுமே ஓர் முகமூடி. எந்த உணர்ச்சிகளையும் அவளிடமிருந்து எளிதில் கண்டு கொள்ள முடியாது. ஏன்? செல்லத்துக்குத்தான் என்ன குறை? அந்த வியாதி வந்து அவளை அடிக்கடி ஆட்டி வைத்தது என்பதைத் தவிர அவளிடம் ஒரு குறையும் இடையாதே."

அவருடைய இளமை நாட்களை நினைத்தால், அப்பப்பா பயங்கரம்! அவர் இந்தப் பரந்த உலகத்தில் ஆண்மகனானதே ஓர் நெடுங்கதை. மூன்று மைல் நடந்து போய் ஊரணித் தண்ணீரைச் சுமந்து வந்து வீடுகளுக்கு விட்டு, அதிலே வயிற்றை வளர்த்து வந்தார். பத்தாவது வகுப்பு வரையில் பயின்ற கல்வி அவர் வயிற்றை நிரப்பவில்லை.

அவர் வாழ்க்கையிலே ஓர் புதிய திருப்பம்! தலைமை ஆசிரியர் சங்கரனின் உதவியால் ஆசிரியர் பயிற்சியில் சேர்ந்தார். அவர் வீட்டில் ஏவின வேலைகளைச் செய்து கொண்டு சாப்பாட்டுக் கடனைக் கழித்தார். தமது மகள் செல்லத்தை ஈசுவரனுக்கு மணம் செய்து வைக்க விரும்பிய பொழுது அவர் எதிர்ச் சொல் கூறவில்லை. அவருக்குத் தாம் பெரிதும் கடமைப்பட்டிருப்பதாகக் கருதிச் செல்லத்தின் கைத்தலம் பற்றினார் ஈசுவரன்.

செல்லம் ஒல்லியாக நோஞ்சலாக இருப்பாள். மூன்று வருடக் குடும்ப வாழ்க்கையின் பெரும் பகுதியை வியாதியின் காரணமாகத் தாய் வீட்டிலேயே கழித்தாள். ஈசுவரனுக்கு அவளிடம் துளிக்கூட வெறுப்பு கிடையாது.

"செல்லத்திடம் வெறுப்பா? கண்களாலேயே கணவனைக் குளிர்விப்பாளே உத்தமி! அவளிடம் யாருக்குத்தான் வெறுப்பு ஏற்படும்? செல்லம்! உன் உயிரை விழுங்கவே அந்தச் சிசு வந்தது. பிரசவ வேதனையால் நீ துடித்துச் செத்தாயாமே...ஐயோ! அதைப் போலப் பத்து மடங்கு வேதனையை என் இதயத்திலே பாய்ச்சி விட்டது நீ பெற்ற சிசு..." ஈசுவரன் முகத்திலிருந்தும் போர்வையை நீக்கினார்.

செல்லம் போன பிறகு இனி அவருக்கு என்ன வேதனை? தனி மரமாக நின்ற ஆண் மகன் பொறுப்புக்களைக் கழுவி விட்டு வெளியேறி விட்டார். "இரக்கமற்ற பாவி, பச்சை மண்ணின் முகத்தைக் கூடப் பார்க்காமல் கிளம்பி விட்டானே!" என்று ஊரார் ஏசிக் காட்டினர்.

"என் பிள்ளையிடத்தில் எனக்கு ஆசையில்லையா? செல்லம்! சந்தர்ப்பம் என்னைச் சதி செய்து விட்டது. உம்...என் வாழ்க்கையில் மற்றொரு கால்கட்டு வந்து சேர்ந்தது. நான் சாரதாவைக் கல்யாணம் செய்து கொண்டதே நம் செல்வனின் வாழ்வை மலர வைக்கும் நோக்கம் கொண்டுதான். அந்த நிபந்தனையின் பேரில்தான் நான் அவள் கரம் பற்றினேன். அவளும் அதற்குச் சம்மதித்தாள். ஆனால் கல்யாணம் ஆனதும் அவள்

அடியோடு மாறிவிட்டாள். நம் மகன் பேச்சையே அவளிடம் எடுக்க முடியவில்லை. எப்படியோ சாரதாவுடன் என் புனர் வாழ்வு ஆரம்பமாயிற்று. உன் சிந்தனையையே விரும்பாதவளிடம் உன் நினைவின் சின்னத்தை எப்படிக் கொண்டு வந்து சேர்ப்பேன்? இங்குதான் பெரிய தவறு செய்துவிட்டேன். எனது மௌனத்தை உலகம் வேறு கோணத்தில் எடை போட்டது. 'உன் குழந்தையை.' ஆமாம்; இது உன் மகனின் கூற்று. எடுத்து வந்து, இந்த வறுமையிலே சீராட்டி வளர்த்து அவனையும் ஓர் ஏழை ஆசிரியனாக்கி, தந்தையின் கடமையைச் செய்தவன் என்று நல்ல பெயருடன் இந்த உலகத்தை நான் ஏமாற்றியிருக்கலாம். என்னோடு இந்த வறுமை ஒழிந்து அவனாவது சுகத்திலே வளர்ந்து தன் வாழ்க்கையை அனுபவிக்கட்டும் என்று உணர்ச்சிகளைக் கருக்கிக்கொண்ட நானா சுயநலக்காரன்? செல்லம், உன் மகனே என்னை அப்படிச் சொல்லால் சுட்டான்.''

★

துலா மாதம். இரண்டு நாட்கள் கருவிருந்த சுமையை மழையாகச் சிதற அடித்து விட்டு, குளிர்ந்து வீசிய காற்றில் பவனி வந்து கொண்டிருந்தது வெண்முகில். ஈசுவரன் காலண்டரைப் பார்த்தார். திருவோண நட்சத்திரம், செல்லத்தின் பிள்ளைக்கு ஓராண்டு பூர்த்தியாகியது!

பொங்கி வரும் பூரிப்பைச் சிந்தனைக்குள் பூட்டியவராகக் கடைக்குச் சென்றார். சக்திக் கடங்காமல் டிராயரும், ஷர்ட்டும் வாங்கிக் கொண்டு பஸ் ஏறிவிட்டார். தளர் நடையிட்டு நடந்து வந்து, ''அப்பா!'' என்று அழைத்தபடி மழலை பேசி வரவேற்பளிக்கப் போகும் மைந்தனைக் கற்பனையில் கண்டு மகிழ்ந்தார்.



வரவேற்பளித்த சங்கரனின் குரலில் சுருதி மாற்றம் இருந்தது. நீர்த்துளிகளைச் சுண்டி எறியும் தாமரை இலையென ஒட்டாத முறையில் பேசினார்.

'' குழந்தை எங்கே? சௌக்கியமா?'' என்றார் ஈசுவரன், ஆதங்கத்தை அடக்கியவாறு.

''அப்பாவும், அம்மாவும் விட்டுப் போன பிறகு அவன் எங்கிருந்தால் என்ன? அவன் அத்தைப்பாட்டி சின்னி அன்றைக்குத் தோளில் தூக்கிக் கொண்டு போனவன்தான். அவள் சொத்தை ஆள அவன் அங்கேயே வளருகிறான்....'' என்றார் கடுமையுடன்.

''என்ன?''-அதிர்ந்து வந்த ஒலி உள்ளேயே சிதறித் தேய்ந்தது.

''நேற்று அவனுக்குப் பிறந்த நாள். சின்னு தடபுடலாக நடத்தினாள். ஊரே வந்தது. உன் ஒருவனைத் தவிர. மனைவியோடு பின்னையும் போய் விட்டான் என்ற எண்ணமோ?''

அவர் கைகளை ஆத்திரமாக ஆட்டினார். அடுத்து அவர் பேசியதைக் கேட்க ஈசுவரன் அங்கு நிற்கவில்லை. பஸ் ஸ்டாண்டை நோக்கி நத்தை நடை போட்டுக் கொண்டிருந்தார். துல்லியமாக இருந்த வானம் குமுறியது, அவர் உள்ளம்போல!

''இனி எந்த முகத்துடன் அவர்கள் முன் நிற்பேன்? குழந்தையைக் காண ஓடி வந்த தந்தையின் உறவைச் சந்தர்ப்பம் துண்டித்து விட்டது. அன்பாக வாங்கிச் சென்ற முதல் பண்டம் உபயோகப்படவில்லை. இந்தக் காரணத்தையே சுட்டிக் காட்டி நான் அளித்த ஒவ்வொரு பொருளையும் புறக்கணித்தான், உன் மகன். செல்லம்! உன் மனிதர்கள் அவன் நெஞ்சிலே நஞ்சையிட்டு விட்டார்கள். பெண்ணோடு உறவு போயிற்று என்றால் என் உதிரப் பொறியையும் நான் மறக்க வேண்டுமா?''

பன்னிரண்டு வருடங்களுக்குப்பிறகு அந்தச் சந்திப்பு ஏற்பட்டது. தூரத்து உறவினர் வீட்டுக்கல்யாணம். தனயனுக்குத் தந்தையை அடையாளம் தெரியவில்லை. சுற்றிலும் சூழ்ந்து நின்ற கூட்டத்தை மறந்தார். குறுகுறுத்த அந்தக் கண்கள், இறுக மூடிய உதடுகள் செல்லத்தின் பிரதிபிம்பம்! பாய்ந்து சென்று அவன் கைகளைப் பற்றி, ''பாபு'' ''பாபு'' என்றார். பீறிட்டெழுந்த இன்பம் மயிர்க்கால் வரையில் குமிழியிட்டது.

பையன் கைகளை வெடுக்கென்று இழுத்துக் கொண்டு அவரை முறைத்துப் பார்த்தான். அத்தைப் பாட்டி கூட்டத்தினின்றும் வந்தாள். '' ஏனடா, ஈசுவரா! தம்பதி சமேதராக வந்திருக்கிறாயோ, இல்லையோ?'' என்றாள் கேலியாக.

ஈசுவரன் மௌன முத்திரையிட்டார்.

''செல்லத்தின் ஞாபகம் கொஞ்சமாவது இருக்கிறதோ? இல்லையோ?'' என்றாள் கொடுந் தொனியில்.

''எப்படி மறக்க முடியும்? நான் சாப்பிடுவதே அவள் இட்ட சாப்பாடு தானே?'' உண்மையிலேயே நன்றிப் பெருக்குடன் கூறினார். பையன் மீதிருந்த அவர் பார்வை அரைக்கணமும் விலகவில்லை.

பாபு கூசியவனாக ''இவர் யார்?'' என்றான்.

''இவரா? செல்லத்தின் புருஷன் .....''

யாரோ ஓங்கி அடித்தது போன்ற அதிர்ச்சி. உள்ளுணர்வு ஊசிபட்டாற்போல் சுருங்கியது. வெறுப்பு உமிழ்ந்த பையனின் கண்களை நோக்க மனம் கூசியது.

'செல்லத்தின் புருஷன்' - வருடக்கணக்கில் ஊறிய விஷம் சொற்களாகத் தெறித்தன.

மகன் தந்தையை ஏ ாரென்று கேட்டால் அந்த நெஞ்சம் எப்படித் துடிக்கும்? தந்தை என்று சொன்னால்கூட ஓட்டிக் கொண்டு விடுவான் என்று, செல்லத்தின் புருஷன் என்றாள் இழவி. அவள் வைத்த நீதானே... என்ன எரிச்சல்! "சாரதா! இங்கே வந்து விசிறியைப் போடு கிறாயா?" சாரதா மின்சார விசிறியைச் சுழல விட்டு விட்டுப் போய்விட்டாள்.

★

மின்விசிறி போல் சுழன்றன வருடங்கள். பாபுவின் ஜாதகம் கேட்டவர்களிடம் விலாசத்தைக் கொடுக்கும் உரிமைதான் தந்தைக்கு இருந்தது. "இதுவரையில் இல்லாத அக்கறை பலமாக இருக்கிறதே. பெண் வீட்டாரிடம் ரூபாயை வாங்கி முடியக் காத்திருக்கிறானே!" என்ற குரல் பராபரியாகக் காதில் விழுந்த பொழுது அவர் வருத்தம் கொள்ளவில்லை.

பாபுவுக்குக் கல்யாணம்! நாளை நின்று மறுதினம். விவாகப் பத்திரிகையுடன் வந்த ஈசுவரன் மகிழ்ச்சி மலர, "சாரதா! நாளை மறுதினம் பாபுவுக்குக் கல்யாணம். நாமிருவரும் இப்பொழுதே புறப்பட வேண்டும்" என்றார் பழைய அனுபவங்களை மறந்தவராக.

பத்திரிகையைவாங்கி அழ்ந்து படித்தாள் சாரதா. இதழ்க் கோடிவரை ஓர் ஏளனப் புன்னகையைச் சிதற விட்டபடி, "போதுமே. நீங்கள் வேண்டுமானால் போய் வாருங்கள். ஒப்புக்குக்கூட இன்னாருடைய பிள்ளை என்று போடவில்லை. இவர்கள் வாயில் விழ நான் தயாராக இல்லை" என்று சுருங்கக் கூறி விளங்கவைத்து விட்டு அங்கிருந்து அகன்றாள்.

எ சாரதா உண்மையைத் தானே டுத்துரைத்தாள்! நாளை மறுதினம் நடக்க இருக்கும் அவர் மகனின் கல்யாணத்துக்கு எல்லோருக்கும்போல ஓர் அழைப்பிதழ்! அவர் ஸ்தானத்துக்கு, உரிமைக்கு அழைப்பில்லை. அவருடைய உள்ளத் துடிப்புக்கு எதிரொலி இல்லை. சீறி எழுந்த பாசம் கணத்துக்குள் கரைந்தது.

அவர் கல்யாணத்துக்குச் செல்லவில்லை. தங்கக் கைக் கடிகாரம் ஒன்று வாங்கி நண்பர் மூலம் அனுப்பினார், ஒரே மகனின் விவாகத்தில் கலந்து கொள்ளாத தந்தை!

இரண்டு நாட்கள் கழிந்தன. சாரதா புதிய செய்தி ஒன்றைத் தெரிவித்தாள். "மத்தியானம் இங்கே பாபு வந்திருந்தான்" என்றாள் நிதானமாக.

"பாபுவா? இங்கேயா வந்தான்?" என்றார் அவர் படபடப்புடன்.

"இங்கேதான் வந்தான் சீமான் பிள்ளை. 'மனைவியை அழைத்துக் கொண்டு வரக் கூடாதோ?' என்றேன். அவன் முகம் கொடுத்துப் பேசவில்லை. நடையைத் தாண்டி வரவேயில்லை. கொடுத்த காப்பி இன்னமும் ஆறிக்கொண்டிருக்கிறது. போகும் பொழுது, 'இந்த வீட்டுக்கும் எனக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. இங்கிருந்து ஒரு துரும்பும் வேண்டாம்' என்று கைக் கடிகாரத்தைத் திருப்பிக் கொடுத்தான். 'தகப்பனார் ஆசையாகக் கொடுத்ததை மூகத்தில் அடித்தாற்போலத் திருப்புகிறாயே, அழகா இருக்கிறது, காரியம்!' என்றேன்.

"'என் அம்மாவோடு அப்பாவும் போயாச்சு' என்றானே பாவி. நானும் சுடச்சுடக் கொடுத்திருப்பேன். மஞ்சள் வேஷ்டியோடு வந்த பிள்ளையை ஒன்றும் சொல்ல வேண்டாம், பொல்லாப்பு எதற்கு என்று இருந்தேன்!' என்றாள் சாரதா. அவள் முகம் கோபத்தில் ஜிவ்வென்று சிவந்து விட்டது.

கையிலெடுத்த கடிகாரத்தின் மீது இரு பொட்டுக் கண்ணீர்த் துளிகள் தெறித்தன. ஈசுவரன் அதை மறைக்கத் தலையைத் தாழ்த்திக் கொண்டார்.

வருடங்களின் பின்னே அவரும் ஓடி ஓடிக் களைத்தார். போன ஞாயிற்றுக் கிழமை திருச்சி செல்ல ரயிலில் ஏறி உட்கார்ந்தவர் அப்படியே அயர்ந்து போனார். எதிர் சீட்டில் பாபு உட்கார்ந்து கொண்டிருந்தான்.



செல்வன் பாபுவாக அல்ல. தந்தை பாபுவாகக் கம்பீரமாக வீற்றிருந்தான்

அருகிலுள்ள பெண்ணை நோக்கினார். குடத்துள் விளக்கென அமைதியான தோற்றம். அவளுக்கு அவரைத் தெரியவே தெரியாது. பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்க வேண்டிய மருமகள் அவரை ஓர் புதிய பிராணியைப் போலப் பார்த்தாள். சிந்தனையின் சலனம் நெற்றிப் பொட்டில் தெரிந்தது.

மடியிலிருந்த குழந்தை குறுகுறுத்த கண்களிலே விஷமம் ஜொலிக்க, மாம்பழக் கன்னங்களிடையே வசீகரம் மின்ன, மொட்டுப் போன்ற அதரங்களைக் கூட்டி மதுர மொழிச் சொற்களை உதிர்த்துக் கொண்டிருந்தது.

"அப்பா...த்தை...தாத்தா..." ஈசுவரனின் உடல் முழுவதும் உணர்ச்சி வெள்ளம் குபீரென்று பாய்ந்து வந்தது. உதடுகள் துடிக்க, வலிமையற்ற கரங்கள் விரிந்தன. மார்புறத் தழுவிய மதலையின் ஸ்பரிசம் ஒரே இன்பக் கொள்ளை!

ஒரு குலுக்கலுடன் வண்டி நின்றது. "பத்மா! குழந்தையை எடுத்துக் கொண்டு இறங்கு. பெண்கள் பெட்டியில் வசதியாக ஏற்றி விடுகிறேன்."

"அட, பாவி!"

பைகளும் பெட்டிகளும் இடம் பெயர்ந்தன. தன்னை நோக்கியே குறுகக் கைகளை ஆட்டிய குழந்தையின் முகம் தாயின் தோளுக்குப் பின்னால் மறைந்து விட்டது. மார்பில் ஏற்பட்ட வேதனை பந்து போல உருண்டு வந்து தொண்டையை அடைத்தது.

மீண்டும் ஆசனத்தில் வந்து அமர்ந்தான் கல்நெஞ்சன். "அப்பா இதுவே உன்னை முதலாவதாகவும் கடைசியாகவும் நான் அழைப்பது. அப்படி அழைக்கத் தந்தை என்ற கடனுக்கு எனக்கு என்ன செய்தாய்? பிறந்தவுடனேயே என்னை வெறுத்து ஓடிப் போனாயே! மழலை கேட்டு, தளர்நடை கண்டு மகிழ எனக்குத் தந்தையில்லை. என்னை வளர்த்துக் கல்வி புகட்டி மனிதனாக்குவது யார் கடவுளோ கழிந்தது. ஊராரின் பிச்சையாக நான் வளர்ந்தேனே. மண மகனாக நான் நிற்கும் கோலத்தைக் காணக் கூட வெறுத்தாயே! என்றைக்காவது உனக்கு என் ஞாபகம் ஏற்பட்டதுண்டா?" என்று ஒருமையில் பேசினான் பாபு.

"பாபு! மகனின் ஞாபகம் இல்லாத தந்தை உண்டா?" என்றார் தீனக்குரலில்.

"தந்தையா! என்னைப் பொறுத்தவரையில் அவர் செத்து விட்டாரே!" சொற்களைத் தொடுத்து அவரை நெருப்பில் வாட்டிப் பொசுக்கினான். ஏனோ அவர் நாக்கு புரள மறுத்து விட்டது. ஐம்புலன்களும் தட்டாமாலை சுற்றிய வேகத்தில் கண்கள் அந்தகாரத்தில் மூழ்கி விட்டன.



✶

"அந்தப் பிரயாணத்துக்குப் பிறகு படுத்தவர்தான். இப்படி மலையாக வந்து விட்டதே, பாட்டி!" என்று மங்குப் பாட்டியிடம் அரற்றியபடி சாரதா உள்ளே வந்தாள். அவர்களைக் காண விரும்பாமல் கண்களை இறுக மூடிக் கொண்டார்.

"முகத்திலே தெளிவே இல்லையே. ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். சாரதா இன்னொரு விஷயம். சின்னு சாகக் கிடக்கிறானாமே. எல்லாச் சொத்தும் உன் பிள்ளைக்குத்தான் வரும்." பாட்டி குரலைத் தாழ்த்திக் கொண்டாள். "பிதாவின் கர்மம் முடித்து விட்டால் அவனுக்கு அங்கே செய்யப் பாத்தியதையில்லை. யார் சொத்து, யாருக்குப் போட்டிருக்கோ?" கவலையே உருவாக இருந்த சாரதா எதையுமே காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

உடலில் ஏற்பட்ட பதற்றம் அவரைக் குலுக்கிக் கீழே தள்ளியது. "செல்வம் இருந்த வரையில் மகனால் 'அப்பா' என்று அழைக்கப்படாத தந்தையாக இருந்தேன். மகனின் கையால் இறுதி யாத்திரையாவது கிடைக்குமென்ற கடைசி ஆசையும் இனி எனக்கில்லை. செத்தும் கெடுத்தான் என்ற உன் மகனின் ஏசலை நானே தவிர்த்துக் கொள்வேன்."

இந்த எண்ணத்தில் மனம் புழுங்கித் தவித்தார் ஈசுவரன்.

நீண்ட நாள் உடல் நலிவோடும், மன வேதனையோடும் படுத்த படுக்கையாகக் கிடந்த ஈசுவரனது உள்ளத்தில் எங்கிருந்தோ ஒரு அசுர பலம் வந்தது. இதுவரையில் ஒன்றுக்கும் பயனற்றதாகப் போய் விட்ட அவர் வாழ்க்கையில் ஒரு மகத்தான திருப்பம் ஏற்படப் போகிறது. வாழ்வில் கிட்டாத அமைதியை அவர் இதோ சாவில் அடையப் போகிறார். உடனே அவருடைய உயிர் உடலை விட்டுப் பிரிய வேண்டும். உயிருடன் இருந்து மகனுக்கு எதுவும் செய்யக் கொடுத்து வைக்காத மகா பாவியான அவருக்கு இப்போது ஓர் அரிய சந்தர்ப்பம் கிட்டப் போகிறது. மகனுக்கு உதவி செய்ய. அவருக்கு உடனே மரணம் சம்பவித்தால், அவருடைய அருமைச் செல்வனுக்கு மாபெரும் சம்பத்து கிடைக்கும். ஆனால் ஒன்று. அவருடைய மரணச் செய்தி மட்டும் அவனுக்குத் தெரிந்து விடக் கூடாது. அந்த அளவிலாவது மகனுக்கு உதவி செய்ய அவர் மனம் துடித்தது.

"சாரதா! இங்கே வாயேன். என் மேல் ஆணை. நான் இறந்து போனால் பாபுவுக்குத் தகவலே கொடுக்காதே!"

"ஐயோ! ஊரார் ஏச மாட்டார்களா?"

"என் மகன் திரண்ட ஐசுவரியத்துக்கு அதிகாரியாவதை என் சாவு ஏன் தடுக்க வேண்டும்? அவன் வரையில் நான் செத்தவனே" என்று எழுந்த விம்மல் கண்டத்திலேயே நின்றது.

இடீரென்று நிகழ்ந்து விட்ட அந்தச் சம்பவத்தைச் சாரதா முதலில் நம்பவில்லை. மூச்சு அடங்கிய அவர் உடலும், அவருடைய பார்வையும்தான் அவளுக்கு நேர்ந்துவிட்ட பெருந் துக்கத்தைத் தெரியப் படுத்தின.

அந்தக் கடைசிப் பேரதிர்ச்சியைச் சாரதா தனியாகத் தாங்கிக் கொண்டாள்.

★

சின்னுவின் ஆஸ்தியை வக்கீல் பாபுவிடம் ஒப்படைக்கும்பொழுது, "நல்லவேளை, பாபு! உன் தந்தை மரணச் சடங்கை இரண்டு நாட்களுக்கு முன்பு நீ ஏற்று நடத்தியிருந்தால் இந்தச் சொத்தை உன்னால் அடைய முடியாது. செய்தி ஒரு மாதம் கழித்துக் கிடைத்ததால் சட்டத்தை மாற்ற முடியாது. பார்" என்றார்.

"ஆமாம், ஸார்! தந்தை என்ற கடமைக்கு அவர் எனக்குச் செய்த ஒரு நல்ல காரியம் அது ஒன்றுதான்..." என்றான் செல்வத்தின் செல்வன். தனது தாபத்தை வெளிக்குக் காட்டாத அந்தத் தந்தையின் கடைசி ஆசையும் கருகி வாடிய மலர் போல் உதிர்ந்ததை அந்தப் பிள்ளை மனம் உணருமா?

Printed and Published by T. Sadasivam at the Kalki Press Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




HBT. 2-50TM